உ

சிவசண்முகன் றுணை.

திருச்சிற்றம்பலம்.

2907.

# சீகாழிப் புராணம்.

VIII D. 130 அ

இஃது,

கற்றோர்க்கும் மற்றோர்க்கும் எளிதில்
உபயோகப்படும் பொருட்டு,

திருக்கைலாய பரம்பரைத்
தருமபுர வாதீனத்து

மஹா சந்நிதானமாக எழுந்தருளியிருக்கும்
ஸ்ரீ ஞானசம்பந்த
மாசிலாமணிதேசிக மூர்த்தியின்
கட்டளைப்படி,

சிதம்பரம்
செந்தமிழ்ச்சங்க வித்துவான்
வேங்கடாசலம் பிள்ளையால்
கத்தியரூபமாகச்
செய்யப்பட்டு,

சென்னை
மனார்வா அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

ஆனந்த௵ சித்திரைமீ

1914

உ. வே. சாமிநாதைய்யர் நூல்நிலையம், அடையாறு, சென்னை-20.

# அத்தியாயத்தின் பெயர்.

2907.
அ
111 D. 130 உ

சிவசண்முகன் றுணை.

# உபோற் காதம்.

ஆ[illegible] சாட்குண்ணிய பரமபதியாகிய முழுமுதற்கடவுள் [illegible]ள் எவ[illegible]ளாகிய விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என் [illegible]ாக[illegible]ய்த ஆன்மாக்கட்கும் அவ்வவர்களின் பரிபக்குவத்திற் [illegible]ப அருள்புரிவான் வேண்டி, அருவம், அருவுருவம், உரு [illegible] எனு மூத்திறத் தமைவனவாம் குருலிங்கசங்கமவடிவங்க [illegible] இந்நிலவுலகத்தின்கண் பலதலங்களில் எழுந்தருளியிருக் கி[illegible]னர். அங்ஙனம் எழுந்தருளியிருக்கின்ற தலங்களில் [illegible]லிங்கசங்கம மூர்த்தங்களில் ஒவ்வொரு மூர்த்தமே எத்த [illegible]களினுஞ் சிறப்புற்றிருக்கின்றது. இப் பிரமபுரத்தின் மாத் [illegible] மூர்த்தமூன்றுஞ் சிறப்பு மிகவுற்றிருக்கின்றன. ஆதலின் எ[illegible]லாத்தலங்களினும் மேன்மையுடைத் தித்தலமென்பது இத் தலத்தைப் பார்த்தவுடனும், கேட்டவுடனுமே நன்கு விளங் கும். ஆகவே, இத்தகைய சிறப்பு மிக்கோங்கும் இத்தலத்தின் மூர்த்தி, தீர்த்த விசேட சரிதங்களைத்தெரிந்து கொள்ளல் ஆவ சியக மென்பதுபற்றி, இத்தலபுராணத்தைத் தேடிவந்து கற்கப் புகின், அது கம்பராமாயணத்தையே கீர்த்தனங்களாக்ச் செய்த அறிஞருலதிலகராகிய அருணாசலக் கவிராயர் வாக்காகலின் பாக்கள் முழுவதும் இட்சு, நாளிகேரம், கதலி, திராட்சை பாகங் களில் இட்சு, நாளி[illegible]ங்கவே இருத்தலான், இலக்கண [illegible]லெக்கியம் நன்[illegible]யல்ல பேரறிஞர்க்கே உபயோக [illegible] [illegible]யினிருக்கி[illegible]ம் மண்ணுலகத்தில் பெரும்பான்மையும் அத்தகைய [illegible]றிஞரினும் ஏனையோரே இருக்கின்றார்க ளாத லின் அவர்க்கும் உபயோகப்படுமாறு இத்தலபுராணம் எளிய செந்தமிழில் வசனரூபமாக இருந்தால் மிக்க நலமாமென்று

எண்ணிக்கொண்டிருந்த எங்கருத்தை மலர்வித்த எம் ஆப்தராகிய சிதம்பரம், K. வேங்கடாசலம் பிள்ளை அவர்களின் நன்றி என்ஞான்றும் மறக்கற்பாலதன்று. இத்தலபுராணவசனத்தின் இடையிடையே உரைநடைச் செய்யுளாகத்தோன்றுதல் மிக அலங்காரமாக விருக்கின்றது. வசனச் சிற்சில பகுதிகளில் அரியபதங்களுமுளவேனும் அவை அவ்விடங்களில் ஓசையுடைமை யாகக் காட்டல் பற்றி, இறுதியில் அரும்பதப்பொருளகராதியும் சேர்க்கப்பட்டிருத்தல் பேருதவியேயாம். இப்புத்தகத்தை வாங்கிப் படிக்குநர் யாவரும் தோணியப்பர் திருவருளைக்கம் பெற்றுச் சிவாநுபூதிமான்களாதற்கு அருகராவரேனும் ஐயமில்லை. சுபம்.

இங்ஙனம்,

வே. தில்லைநாயக முதலியார்,

ஸ்ரீ சபாநாயகர் திருவனந்தல் காலைசந்திக் கட்டளை,

சிதம்பரம்.




# கருத்துரை.

இவ்வுலகத்தின்கண் உள்ள அறிஞர்களுள் சிலர் பழைய நூல்களை அச்சிடுதலிலும், சிலர் பழைய நூல்களுக்குப் பொருள் எழுதி அச்சிடுதலிலும், சிலர் புதுமையாக நூல்கள் உண்டாக்கி அச்சிடுதலிலும் இங்ஙனம் பலவாறாகத் தங்கள் தங்கள் புலமையை வெளிப்படுத்தி வருகிறார்கள். அங்ஙனமாக, கல்வியறிவென்பது சிறிதுமில்லாத கடையேனை நோக்கி, சில அன்பர்கள் நாடகத் தமிழிலும், இசைத்தமிழிலும், இயற்றமிழிலும் வல்லுநராய அருணாசலக் கவிராயர் செய்தருளிய சோழிப் புராணத்தை எளிய தமிழ்வசன நடையில் செய்து தரவேண்டுமென்று கட்டளையிட்டருளியபடி, என் சிற்றறிவுக்கெட்டியவாறு அச்சிவநேசச் செல்வர்களின் திருநோக்கத்தாலெழுதி வெளிப்படுத்தினேன். ஆதலினாலும், கடவுட்டிருவருளூக்கத்தாலும் பேரவாக்கொண்டு செய்த இவ்வசனத்தில் இலக்கண நூற்குற்றங்கள் முற்றும் அமைக்கப்பட்டிருக்கவேண்டுமென்றே துணிந்து எழுதினேன். ஏனெனின், உலகத்திலுள்ள எல்லா நூலும் பெருமையடைவான்கருதியே. அதனால் இவ்வசன நூலில் குற்றமெடுப்பான் யாவருக்கும் அருமையன்று. நிற்க, இத்தகைய குற்றமேயாகரமாக் கொண்ட இவ்வசனத்தை எவர்தான் கண்ணுற்று அருள்செய்வாரென்றெண்ணியேங்கிவந்த எளியேனைத் திருக்கடைக்கண்ணால் அருளி, அண்மையிலிருத்தி, சிறுமகார் செய்யும் சிற்றிலில் மகிழுந் தாய் தந்தையர்போன்று மகிழ்ந்து, ஒருவாறு பார்க்கவேண்டுமென்று தமதுவிலையற்ற நேரத்திற் சிறிது எடுத்துத் திருத்தி யன்புகொண்டருளிய திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத்ஞானியார்மடம் ஸ்ரீமத் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவசாரிய சுவாமிகளின் சரணாரவிந்தங்கட்குத் தமியேன் எஞ்ஞான்றும் மனம் வாக்குக் காயங்களி

ஞல் வந்தனஞ் செலுத்துகின்றேன். இன்னும், கல்வி விஷய
தில் மேலும் மேலும் ஊக்கமுண்டாகும்படி செய்து வருகின்
அன்புருவாகிய சிதம்பரம் செந்தமிழ்ச்சங்கத்தின் அக்கிராசனு
பதியாகிய ஸ்ரீசபாநாயகர் காலைசந்திச்சட்டளை ஸ்ரீமான் தில்
நாயகமுதலியாரவர்கட்கும் மற்றும் அன்பர்கட்கும் வந்தன
செலுத்துகின்றேன்.

இங்ஙனம்,
அடியார்க்கடியன்.
C. வேங்கடாசலன்

# இத்தலத்துக்குரிய பன்னிரு திருநாமங்களின் காரணச் சுருக்கம்.



க. தோணியம்புரம்:—பிரளய காலத்தில் சிவபெருமான் உமாதேவியாரோடும் சுத்தமாயையைத் தோணியாக்கி யூர்ந்தருளி வந்து தங்கி வீற்றிருக்கின்ற காரணத்தாற் கிடைத்தது.

உ. பிரமபுரம்:—பிரமதேவ ரீசேகர் பூஜை செய்து அருள் பெற்ற ஏதுவாற் பெற்றது.

ங. சீகாழி:—சத்திபேதத்தினருள் காளியம்மையார் பசுபதியுடன் நடனஞ் செய்ததில் தோற்ற நிமித்தம், இப்பதியில் வந்து பிரமேசரைத் துதித்தருள்பெற்றுப் போந்தமையால் எய்தியது. ஸ்ரீ காளிபுரமென்னும் பெயர் சீகாழியென மருவியது. அன்றியும், காளிதன் எனும் பாம்பு பூஜித் தருள்பெறலானும் காளியம்புரமென வந்தது மொன்று.

ச. வேணுபுரம்:—அசுரகுருவாகிய சுக்கிரன் ஒருநாள் பிரமதேவர் சபைமுகத்தில் செருக்குடன் செல்ல, கோபித்துப் பிரமதேவர் வெறுப்ப, திரும்பிவந்து நாரதர் மொழிப்படி இப்பதியல் பூசித்துத் தேவகுருவுக்குச் சமமான குருத்துவம் வகித்தலான் இந்நாமம் வந்தது. பின்னும் தென்றிசைக் கடவுளாந் தருமன் தன்னை நரகவாசிகள் நிந்தித்த காலத்தில் இத்தலம் வந்து பூசித்து, தன்னை நரகவாசிகள் கண்டவுடன் பூர்வவினை உணர்ச்சி பெற்று மௌனமாம் வண்ணம் அருள் பெற்றும் குருத்துவம் கொண்டமையாலும் இப்பெயர் பெறும்.

ரு. புகலி:—சூரபத்மாசுரனால் துயருற்றதேவர் முதலியோர் ஒருங்குகூடி வந்து, தேவரீரே புகலிடம் என்று பிரமேசரைத் துதித்தமையால் இந்த நாமம் சிறப்புறும்.

௬. சிரபுரம்:—தேவர் குழுவோடுடன் உண்ட கள்ள அசுரனும் சயிங்கிகேயன் என்பான், இருசுடராலறிந்த மோகினி மாயன் சட்டுவத்தால் மரிந்து, இருகூறாக, தலைக்கூறு ஆகிய ராகு இப்பதியில் பூசித்துப் பகைஞனுஞ் சூரியனை மறைக்க வருள்பெற்றமையான் இப்பெயர் பெறும்.

௭. சண்பை:—கிருஷ்ணரின் குலத்தினராம் யாதவர்கள் யாவரும் ஒருநாள் கூடித் தம்முள் ஒருவனைக் கர்ப்ப ஸ்திரீ போற் காட்டி, இவள் பெறுவது ஆணோ, பெண்ணோ என்று கபில முனிவரைக்கேட்க நீராடப் போம் அவர், நும் வம்சத்தினர் யாவரும் நாசமாகும் ஓருலக்கை யுதிக்குமென்று ஏக, உடனே பிறந்த உலக்கையைத் தூள் செய்து கடலில்கரைக்க, அவை முற்றும் நாணற்புல்லாய் முளைத்தன. பின்பொருநாள் யாதவர் யாவரும் கூடி ஆண்டுப்போய் ஒருவர்க்கொருவர் கலாம் விளைத்து ஒவ்வொரு நாணற்புல்லையும் பறித்து அடித்துக்கொண்டு சாபப்படி இறந்தார்கள். அச்சண்பை (நாணல்) யால்வரும் பழி தம்மைத் தொடராதபடி கிருஷ்ணர் இப்பதி வந்து பூசித்து அருள்பெறலான் இந்தப் பெயர் விளங்கும்.

௮. கொச்சை:—மச்சகந்தியோடு ஆற்றின் நடுவில் தோணியிற் புணர்ந்த பராசரரை முனிவர்கள் கன்னிகாமிக் கள்வனெனத் தூற்றினமையால், அப்பராசரர், இப்பதி வந்து பூசித்துக்கொச்சையாகிய பழி தம்மைப் பற்றாவண்ணம் அருள் பெற்றமையால் இலவா சிற்கின்றது.

௯. வேணுபுரம்:—தவம்புரியும் சூரன், பதுமன் என்பவர்கள் முன் பிரமேசர் மூங்கில் வடிவாய் முளைத்து அருள்புரிந்தமையாலும், மூங்கில் வழியாக வந்து இந்திரன் பூசித்தமையாலும் இப்பெயருறும். வேணு—மூங்கில்.

௧௦. கழுமலம்:—உரோமசமுனிவர் எப்பதிகளிலும் தொலையாத தம் மலத்தொகுதியாவும் இப்பதிவரவும் நீங்கப் பெற்றமையால் இப்பெயர் விளங்கும்.

௧௧. புறவம்:—சிபிச்சக்கரவர்த்தியைப் பரிசோதிக்கக் கடவுளருளால் வந்த இந்திரன் பருந்தாகவும், அக்கினி புறாவாகவும், மகம்புரியும் சிபிமுன்போய் முன்னர்க்கலகம் விளைத்து, புறாவின் நிறைக்குச் சமமாகத் துலையில் சதைமுற்றும் சிபிச்சக்கரவர்த்தி அரிந்து சுமத்தியும் சமமாகாததால் தாமேறவும், சரியாகப் பின் அவருள் இந்திரன் அருள்புரிய, அக்கினியாம் புறா, சிபியின் தாகம் நீங்கக் காவிரிநீர் கொண்டு வந்தமையாலும், புறாவால் அரசர் புகழ்பெறலானும் இப்பெயர் தோன்றியது.

௧௨. பூந்தராய்:—இரணியாக்கன் ஒரு காலத்தில் தேவலோகத்தின் அமிர்தமூதலிய நிதிகளைக் கவர்ந்து கொண்டும், பூவுலவாசிகளின் நிதிகளுங் கொண்டும் போய்ப் பாதாளத்திலிருக்கவும், தேவர்கள் திருமாலிடம் இரக்க, அவர் சுவேதவராகவுருவங்கொண்டு பூமியைக்கிழித்துச்சென்று அவனைச்சங்கரித்து நிதிகளைச் சேர்த்தபின்னர், களிமேலிட்டு உலகினை வருத்தும் சுவேதவராகத்தின் முன் சுப்பிரமணியர்வந் தருள் புரிய, உணர்ந்ததும் காழியம்பதி வந்து வராகவுருக்கழித்துத் தம்முருவடைந்து அருள்பெற்றார். பூமியைக் கிழித்துச் சென்றதால் பூந்தராய் எனும் பெயர் ஒங்குமென்க.

# இத்தலத்திலுள்ள பன்னிரண்டு தீர்த்தங்களின் தானமும் தற்கால நிலையும்.



க. பிரமதீர்த்தம்:—இது திருநிலையம்மை சந்நிதானத்தின்கண் உள்ளது. பிரமதேவரால் உண்டாக்கப்பட்டது. ஸ்ரீமந் திருஞான சம்பந்தப்பெருமானுக்கு இத்தீர்த்தத் தென்கரையிற்றான் பார்வதி திருமுலைப்பா லூட்டியது. இப்போது யாவரும் இதில் ஸ்நானஞ் செய்யுநிலைமையி லிருக்கிறது.

உ. சூலதீர்த்தம்:—இது கோயிலுக்கு வடமேற்றிசையில் மூன்றுகோல் தூரத்தில் இருக்கிறது. தாடாளன் (பெருமாள்) கோயிலுக்கு வடபாலும், சிதம்பரத்துக்குப் போகும் சாலைக்கு மேல்பாலும் உள்ளது. சிவபிரானுடைய கைச்சூலத்தினுல் உண்டாயது. அந்தப் பக்கத்து வாழ்பவர்கட்கு உபயோகப்படுகிறது. இதில் முன்னளில் கன்னியாகுச்சபதி அரசன் விகடாங்கன் காகவடிவம் நீங்கப் பெற்றது. இப்போது அரியப்பிள்ளைகுளமென வழங்குகிறார்கள்.

ஙு. ஆனந்த தீர்த்தம்:—இது கோயிலுக்கு மேல்பாலிருக்கிறது. கடவுள் நடனஞ் செய்தபோது அவர் திருக்கண்களினின்று ஆனந்த நீர்பெருகிப்போ யுறைந்தவிடம். இப்போது இதனை முதலியார் குளம் என வழங்குகிறார்கள். ஸ்நான முதலியவற்றிற்கு மிக உபயோகமுள்ளது. இதனைச் சூலதீர்த்தமென்றுஞ் சொல்வதுண்டு. அவ்வாறு சொல்வதற்குக் காரணம் பொருத்தமில்லை.

ச. காளிதீர்த்தம்:—இது கோயிலுக்கு மேல்பால் அருகிலுள்ளது. பசுபதியோடு நடமாடித் தோற்ற காளியானவள் தன்பழிகழுவத் தோற்றிய தீர்த்தம். இதில் கார்த்திகை மாதம்

ஆதிவாரங்களில் சுவாமி தீர்த்தங் கொடுப்பதுண்டு. இதனை யிப்போது சுரிச்குளம் என வழங்குகிறார்கள்.

௫. இராகுதீர்த்தம்:—இது கோயிலுக்கு வடமேற்றிசையிலுள்ளது. இராகுவென்னும் தலைக்கூற்றரவோனால் தோற்றப்பட்டது. இது கோடிதீர்த்தம் என இப்போது வழங்கப்படுகிறது. உபயோகப்படுவதில்லை. இதில்கலிங்க நாட்டரசன் சிங்சேதனன் மூழ்கிக் குருத்துரோகப்பழி நீங்கப் பெற்றான்.

௬. வயிணவதீர்த்தம்:—இது கோயிலுக்கு வடபாலிலுள்ளது. அதாவது இரண்டு குரோச தூரம். மகாவிஷ்ணுவால் உண்டாக்கப்பட்டது. இப்போது இதன் நிலைமை மறைந்து கிடக்கின்றது.

௭. ஆழிதீர்த்தம்:—இது ராகு தீர்த்தத்தின் வடச்குள்ள மாரியம்மன் சந்நிதிக்கெதிரிலுள்ளது. விஷ்ணுவால் உண்டாக்கப்பட்டது. இப்போது தூர்ந்து நிலை கெட்டுப்போயிருக்கிறது.

௮. சங்கு[illegible]ர்த்தம்:—இது சிவபெருமான் சூரனுக்காக மூங்கிலாய் முளைத்தபோது உண்டாக்கிய தீர்த்தம். இதன் றிசையும் இதன் நிலைமையும் நன்கு புலப்படவில்லை.

௯. சுக்கிரதீர்த்தம்:—இது கோயிலுக்குத் தென்றிசையில் சாலைக்குக் கீழ்பாலும், கோர்ட்டுக்கு வடபாலுமுள்ளது. சுக்கிரனால் உண்டாக்கப்பட்டது. ஸ்நான முதலியவைகளுக்குத்தாழ்ந்த சாதியார்கள் சிலர் உபயோகப்படுத்துவதுண்டு. தூர்ந்து போயிருக்கிறது.

௧௦. பராசரகூபம்:—இது கோயிலுக்குள் பிரமேசராலயத்தின் வடபிராகாரத்திலுள்ளது. பராசரரால் தோற்றப்பட்டது. இதுதான் எல்லாத் தெய்வ மூர்த்தங்கட்கும் அபிஷேகஞ் செய்தற்குபயோகப்படுவது. இதில் பிராமணர்கள் மாத்திரம் ஜலம் எடுப்பார்கள்.

கக. **அகத்திய தீர்த்தம்:**—இது கோயிலுக்குக் கீழ்த் திசையிலுள்ளது. தற்காலம் நன்னிலையிலில்லை.

கஉ. **கௌதம் தீர்த்தம்:**—இது அகத்திய தீர்த்தத்தின் பச்சத்திலுள்ளது. இதனிலைமையும் அப்படியே.

இவைகளன்றியும், இந்திரன் நந்தவனத்துக்காக விநாயகரால் வருவித்த நாற்புறமுஞ் சூழ்ந்த சமுமலநதியும், சிபிச்சக்கரவர்த்தியின் தாக நிவிர்த்திக்காக அக்கினியாகிய புருக்காவிரி தீர்த்தங்கொண்டு வந்தபடியால் அது முதல் புருநதியென்னும் பெயரோடு விளங்குமொரு நதியும் உண்டு. பின்னும் அக்கினி தீர்த்தம், சூரியதீர்த்தம், சந்திரதீர்த்தம், பதினெண் புராணங்களும் உண்டாக்கிய தீர்த்தம் முதலிய தீர்த்தங்கள் அநேகம் இருந்திருக்கிறதாகத் தெரிகிறது. அவைகள் யாவும் தற்காலத்தில் ஜீர்ணமாய் வழங்கப்படா நிலைமையிலிருக்கின்றன.



# சிறப்புப் பாயிரம்.

திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத்ஞானியார்மடாலயம்

சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்

செய்தது.

நேரிசைவெண்பா.

காழிப் புராணங் கவின்சேர் வசனமதா
மாழையுண் கண்ணிபங்கன் வள்ளலருள்—சூழ்துணையாச்
சொள்வேங்க டாசலமென் சோதறுசீர் நற்புலவன்
எள்ளலிலா தீந்துற்றா னெண்.

---

தருமபுரவாதீனம்

ஸ்ரீமத். ஞா. சண்முகத்தம்பிரான் சுவாமிகள்

செய்தது.

கட்டளைக் கலித்துறை.

பவன்குரு லிங்கநற் சங்கம மாகப் பயில்புகலித்
தவந்தரு மாண்மியங் தண்டமிழ்க் கத்தியத் தானியற்றி
நவந்தருந் தில்லையிற்செந்தமிழ்ச்சங்கத்தினன்குரைத்தான்
சிவந்தருஞ் சேந்தனைச் சேர்வேங்க டாசலச் சீரவனே.

மாயூரத்தைச் சார்ந்த ஐவநல்லூர்

## பிரம்மஸ்ரீ. பி. ஸ்ரீநிவாஸ ஐயரவர்கள்

செய்தது.

### நேரிசையாசிரியப்பா.

வெள்ளருஞ் சிறப்பின் விண்ணோ ருவப்பப்
புள்ளூறு வலமரற் போக்கி யின்றூணு
மாவுறு புன்க ணாற்றகில் லாணுய்க்
சான்றூளை வையக் காற்படுத் தானு
மொல்காப் புலமை யுருத்திரங் கணற்கு
வாரொடு பத்துறை யாயிரம் பொன்கொடாப்
பண்டு பட்டினப் பாலை கொண்டானு
மரசுவீற் றிருந்த வகன்புன னாட்டிற்
றென்வரை யிருந்தனன் செழுந்தமிழ் வளர்த்த
தொன்முது முனிவன் நன்மனை யாட்டியாம்
பூவிரி மேன்மைக் காவிரி வடக்கட்
பிறைச்சடைப் பெரியனு நறைக்குழ னங்கையு
நான்முக வாவியின் ஞானத் தீம்பா
லருத்திய பிள்ளை திருத்தக வுதித்ததும்
பன்னிரு நாமப் பழம்பதி யானது
மாழி யணித்தாங் காழி யென்ப
வூரைத்தவிப் பதியி னுயர்வெலா முலக
நன்கனங் கொள்வா னவையற நாடுபு
தீந்தமிழ்ப் பாக்களிற் றெரித்தன னவன்றான்
கற்றுணர் புலவரு மிற்றென வறியாப்
புலமையின் மிக்கான் பொருவருந் தவத்தான்
தவலருஞ் சீர்த்தியன் றமிழா ரணங்கி
னரும்பெறற் புதல்வன் பெருங்கவி யாளனுங்
கம்ப நாடன் கழறிய விராமன்

றெய்வக் காதையைச் சிறுவருந் தேர்வா
னுடகத் தமிழி னற்றுறை நவின்ற
வருணா சலக்கவி ராய னென்ப
இன்ன னியற்றிய வன்ன புராணப்
பொருடனை யாரும் புரைதப வுணர்வான்
சொன்னயம் பொருணயஞ் சுவையுறத் தோன்றிய
வசைதீர் வசனம் வரைந்தன னவனே
திரிபுர மெரித்த விரிசடைக் கடவுள்
திருவாழ் மார்பன் பெருமகிழ் பூக்கவு
மரைமே லவனொடு மாதவ ரீண்டிப்
போற்றுபு வாழ்த்தப் புயங்கமொ டுழனிவப்
படிமைய ருய்யப் பான்மையி னடித்த
தில்லையி னிலவுஞ் செந்தமிழ்க் கழகப்
புலவன் பன்னூல் போக்கறப் பயின்றான்
சோதில் சைவக் குமரசாமிப் பெயர்
வேடவத் துதித்தான் வியனுல களிக்கும்
வேளாண் குலத்து வேங்கடாசலன்
வாழிய விவனூல் வண்புவி மிசைக்கே.

---

சிதம்பரஞ் செந்தமிழ்ச் சங்கத்தின்
அக்கிராசனாதி பதியாகிய
ஸ்ரீசபாநாயகர் காலேசந்திக்கட்டளை
ஸ்ரீமாந். வே. தில்லைநாயக முதலியாரவர்கள்
செய்தது.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பொன்னியல் திருச்சிற் றம்பலப் பெருமான்
புரிவுற வாய்ந்தபைந் தமிழின்
றன்னிய லறிவு தகவிலர் தக்கார் தாமொருங்
குறநனி வாய்ப்பான்

முன்னிய வுளத்தூற் பிரமனூ சித்த
முழுமுதற் கடவுளின் மாட்சி
மன்னிய காழி மான்மிய முறையின்
வளம்பெற வழங்கின னவனே. (௧)

உருமிகு மறிவிற் பெரியர்தங் கண்ணே
யொண்டமிழ் முறைமுறை பயின்று
வருமிகு மறிவன் செந்தமி ழவையின்
வைகிய புலவரு ளொருவன்
குருமிகு கண்டந் தெந்தையெம் மிறைவன்
குரைகழ லடிபுக முளத்தான்
திருமிகு வேங்க டாசல மென்னத்
திகழபி தானபண் டிதனே. (௨)

---

சீகாழி சபாநாயக முதலியார்
ஹிந்து ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

ஸ்ரீமாந். சு. பொன்னுதுரைவரவர்கள்

செய்தது.

நேரிசை வெண்பா.

ஆழிபுகாக் காழி யரன்மான் மியவசனம்
வீழியுற வேவரைந்தான் மன்னறிவா—லேழியலும்
பாரினுயர் தில்லைப் பதிவேங்க டாசலனுஞ்
சீரின் மிகுபுலவன் றேர்ந்து.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சீகாழிப் புராணம்.



## விநாயகர் காப்பு.

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பொன்று ரிதழி மதுமாலைப் புனிதன்
மருமமிசைமேவி
மின்று ருமையா ளுதற்பிறையின்
வேணிப் பிறையைச் சேர்த்திலகும்
பன்று ணிறைந்த மதியமெனப் பார்த்து
மகிழ்ந்து முகமலருந்
தென்றூர் காழி யாண்டபிள்ளை செந்தா
மரைத்தா ளிணைபணிவாம். (க)

இதுவுமது.

### கொச்சகக் கலிப்பா.

நீண்டவட வரைமீது நிறைகுணத்தோன் சொல்பனுவல்
பூண்டதனி மருப்பாரம் புனைந்தெழுதி விளைந்தவெலா
மீண்டவரும் பழவடியார்க் கின்பமுட னருள்காழி
யாண்டகண பதிதுணைத்தா ளம்புயங்கள் வணங்குவாம். (உ)

திருச்சிற்றம்பலம்.

# கடவுள் வாழ்த்து.

---

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

### பிரமேசர்.

நீர்பூத்த பேரொளியா யுயிர்க்குயிரா யகண்டிதமாய
நிறைவாய் நீங்காப்
பேர்பூத்த குணக்குறிக ளிகந்தபழ மறைக்
கொழுந்தாய்ப் பெருமை சான்ற
பார்பூத்த பரையினொடு கலந்துகுரு
வாதிமூன்றைப் படிவமாகிச்
சீர்பூத்த காழிநக ரமர்ந்தபிர மேசனையாஞ்
சிந்தை செய்வாம். (க)

### திருநிலைநாயகி.

ஒருநிலையே யுலகனைத்தும் பொருணிலைசேர்
வெண்டிருநீ றுயர்ந்து வேதந்
தருநிலையால் வளர்ந்தோங்க விரக்குபரு
மறைக்குழவி தன்பா லன்பாற்
பெருநிலைசேர் முலைக்கண்ணுஞ் சிலைக்கண்ணு
மிரங்கியவெம் பிராட்டி யன்பர்
கருநிலைதீர்த் தருள்காழித் திருநிலைநா
யகிதுணைத்தாள் கருத்துள் வைப்பாம். (உ)

வேறு.

### பெரியநாயகர்.

அரிய நாயக னரண நாயக னணங்கார் முடிவாய்ந்த
தரிய நாயகன் காணரு நாயகன் கவுணிய முனிகாட்டத்

தெரியு நாயகன் றேணிமே லோங்குயர் தெய்வநா யகன்காழிப்
பெரிய நாயக னகைமணி நூபுரம் பிறங்குசே வடிபோற்றி. (௧)

## பெரியநாயகி.

அகவி ஞெயகி மணியெனச் சடரையப்த்
ததற்கரு மறைக்காட்டி
விகவி ஞெயகி லாண்டநல் கியமுத
விடத்திருந் தொருகோடி
பகலி ருெயகி யாதியைப் படைத்துநீள்
பழமறைக் கொழுந்தாய
புகலி நாயகி பெரியநா யகிமலர்ப்
பொன்னடித் துணைபோற்றி. (௨)

## சட்டைநாதர்.

திங்க மாமணித் தூணில்வந் திரணியன்
றேள்வலி தனைவாங்குஞ்
சிங்க வேற்றுரி யரைக்கசைத துலகெலாந்
தேர்ந்தளந் தவன்மேனி
யங்கம் யாவுமோர் கதையதாக் கொண்டத
னங்கியாப் புனைகாழிச்
சங்க வார்குழைச் சட்டைநா யகன்றுணைத்
தாமரைச் சரண்போற்றி. (௩)

கலிவிருத்தம்.

## ஆபத்துக்காத்த பிள்ளையார்.

பூத்த பிள்ளை யனத்தன் புகழ்கலாக்
கோத்த பிள்ளை மதியணி கோமகன்
மூத்த பிள்ளையை முன்னின ராபத்துக்
காத்த பிள்ளையைக் கைதொழு தேத்துவாம். (௪)

## அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

### குமாரக்கடவுள்.

அலமடையுங் கொடுஞ்சூரன் குலமடியப்
புள்ளினங்க ளமரை வேட்ட
டலமடையப் பெரும்பூமி பலமடையச்
சருப்பசட்டிற் படருங் கூற்றன்
வலமடையுஞ் சரம்வருந்தா நலமடையப்
பிரமாதி வானோர் தங்கள்
தலமடையத் தனதுசர தலமடையும்
வேலெறிந்தோன் சரணம் போற்றி. (எ)

### திருநந்தி தேவர்.

ஆதியடை யிறில்லா னருளேசண்
ணுகன்றேற னமலன் பாத
மீதிலிறைஞ் சிடநணுகும் வாசவனேன்
முகனெடியோன் மிடைந்த போது
போதிர்வில குதிரெனலாந் றருமலரம்
புயந்துளபம் பொதிந்த தெய்வத்
திதின்மணம் படைத்தமணிப் பிரம்புடைய
திருநந்தி திருத்தாள் போற்றி. (அ)

### சரசுவதி.

கருமழைத்தன் னெளிபொழியுங் காலமதி
யொளியுமொளி காலு முத்தின்
பருமணியா லையுமைய வரதமும்புத்
தகமும்வடப் பளிங்குந் தாங்கி
முருகுயிர்க்கு நறுந்தவள மூளரியா
லயத்திருந்த முதுபி ராட்டி
யிருபதமுங் கடைப்பிடித்தே னெப்பதம்வா
ராதபத மெனக்கு மன்றே. (க)

## திருஞான சம்பந்தர்.

குழுவேறச் சமண்முக ரழலேற
விடுத்ததனைக் கூடற் கோமான்
வழுவேறு முடலேற வுடன்முரணு
மனமுரணு மாற்றி யன்றோர்
கழுவேற வெண்ணீறு மைந்தெழுத்தும்
விரித்துவகைக் கதியி லேற்றி
மழுவேறுங் கரத்தான்ற னருளேறுங்
கவுணியர்கோன் மலர்த்தாள் போற்றி. (க0)

## திருநாவுக் கரசு.

விடற்கரிய கொடும்பாசத் தொடரறுத்தைம்
புலனுய வேழுஞ் சீறி
யடற்கரியன் மும்மதமு மமணருடைத்
துன்மதமு மழிய நூறித்
தடக்கடலைக் கன்மிதவை யாலுழக்கிச்
சிவஞான தானம் வீசுங்
கடக்களிறென் றுலகேத்த வருநாவுக்
கரசர்பதங் கருதி வாழ்வாம். (கக)

## சுந்தர மூர்த்தி.

இருக்காதி மறைகளுறு விணைத்தாளை
மறலிமுடி யிடறுந் தாளைத்
திருக்கேள்வன் விழிபுனைந்த செழுந்தாளை
யரக்கன்முடி திரித்த தாளை
யொருக்காலுக் கிருக்காலாய்ப் பரவைமனை
யகந்தேடி யுழுமா செய்தோன்
மருத்தாழா தலர்ந்ததுணை மலர்த்தாளை
யகத்தாழ வணக்கஞ் செய்வாம். (கஉ)

## மாணிக்க வாசகர்.

விளங்குமணத் தினர்கடுக்கை யுடுக்கையர்கார்
மயிற்பீலி விளங்கு கையர்
புலம்புமொழிக் கட்டறுத்து நிறைதிருவா
சகவமுதப் புணரி தேக்கி
யிலங்குமதித் திருக்குலத்தான் பிறப்பறுத்து
மணிமன்றத் திறைதாள் சேர்ந்தோ
னலங்குசினைப் பொழில்புடைசூழ் வாதவூ
ரடிகளடி யகத்துள் வைப்பாம். (கரு)

கொச்சகக் கலிப்பா.

## சண்டேசுரர்.

எந்தைதாள் காமுறுமோ ரிருவினைத்தா ளறுக்கவெறு
மூந்தையா ரணைப்புகன்ற முதுக்குறைவா னதுபதிந்த
சிந்தைதா னரனடிச்சே செறிவித்துச் சினந்துவருந்
தந்தைதா ளோரிரண்டுந் தடிந்தவன்ற டலைக்கொள்வாம். (கசு)

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

## அறுபத்து மூவர்.

அத்தியான் கலையா னைந்தரு நிழன்மா
னயில்விழிக் கஞ்சன மமைத்த
புத்திமா னென்றே கடுவடை யாளம்
பொறித்தகந் தரமுள பெம்மான்
சத்தியான் காழித் தடவரை யெம்மான்
றன்னடி நீழலிற் சேரு
முத்திமான் றனைச்சே ரோரறு பத்து மூவர்தாண்
முடிமிசை வைப்பாம். (கஎ)

## கடவுள் வாழ்த்து.

### கொச்சகக் கலிப்பா.

### பட்டினத்துப் பிள்ளை.

துறவாத மும்மைவினைத் தொடர்பரிந்து மையல் விழிக்
குறவாய பொருணீக்கி யுழுவலன்பிற் சமுமலர்த்தாட்
கிறவாமும் மணிமாலை யியற்றியருள் வழிநின்று
பிறழாத பட்டினத்துப் பிள்ளையிணை யடிபோற்றி. (கசு)

### அட்டவைரவர்.

திண்டமதி புனைந்தகல்விண் டோய்சிகரத் தினிதமர்ந்த
வண்டர்பிரான் கணைத்தலைமை பசிதரங்கன் காபாலி
சண்டனுரு ருக்குரோதன் சங்காரன் பீடணன்சீர்
கண்டருளுன் மத்தனிவர் கழற்கமலம் பரவுதுமே. (கஎ

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

### கால வித்தரசர்.

சுருதிவழி யுலகனைத்துந் தனிக்கவிகை
நிழற்றிமுது தோணி யார்க்கு
மிருதிபுகழ் கயிலைவரைச் சிகரமுங்கோ
புரமுமெயில் விதமு மன்பாற்
கருதியெனைப் பலபணியும் புரிந்துபிற
வாநெறியைக் காணி கொண்ட
பருதிகுலத் தவதரித்த காலவித்து
மகிபதிதாள் பணிந்து வாழ்வாம். (கஅ)

### கொச்சகக் கலிப்பா.

### குணதலைப்பாடி யுடையார்.

கலைப்பாடி யூர்ந்தாற்போற் கண்டுணர்ந்து காழிநகர்
மலைப்பாடி வளவென்னு மாணிதியா லமைத்துவினை

யலைப்பாடி யுழலாமே யமலனடி யடைந்தருணை
தலைப்பாடி யுடையாரென் றனையாள வுடையாரே. (௧௯)

## பரிசாரத் தொண்டர்கள்.

தாயினுமன் னுயிர்க்கினிய சண்பைநகர்க் காவலன்வாழ்
கோயின்மணி முன்றிறொறுங் குயின்றதுரா லகற்றுமுது
வாயினரை யீறாக வழுவில்பரி சாரகரை
மாயினசீர்த் தொண்டர்துணை யடியெமது முடிவைப்பாம். (௨௦)

கலிநிலைத்துறை.

## வாழ்த்து.

தெண்ணீர் குதட்டெப் புயறிங்களின் மூன்று பெய்க
வெண்ணீ றரசன்றிருக் கோன்முறை யேந்தி யாள்க
பண்ணீர நீடுக நன்னெறி பல்க வெங்கோன்
வெண்ணீறொடொ ரைந்தெழுத் தோங்குக மேதினிக்கே. (௨௧)

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

## விநாயகர் காப்பு.

கலிவிருத்தம்.

பூத்த டம்புடை பொழில்கள் சூழ்ந்திடும்
ஆத்த ரேத்துறு மணிய காழியிற்
சீர்த்தென் கோபுரஞ் சிவணு மாபத்துக்
காத்த பிள்ளையின் கழல்கள் போற்றுவாம்.

# புராண வரலாறு.

திங்களை யொத்து விளங்கும் வெண்மையாகிய அலைகளைக்கொண்ட தெய்வத் தன்மை வாய்ந்த கங்கைக்கரை யகத்ததும், கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலியவற்றான் நிறைந்த பெரியோர் உண்மைப்பொருளை வளர்த்தலினால் பொலிவடைந்திருப்பதும், வேத்சிவாகமப் பகுதிகள் ஓதப்பெறுவதும், ஐம்புலவேடர் செருக்ககன்று அமர்வதும், எங்களை அநாதியே பந்தித்து நின்ற ஆணவாந்தகாரமகன்று மனத்தூய்மை உண்டாகத்தக்க ஒருபெரும் அற்புதம் பொலியுங் கற்பனை கடந்த பொற்பமர் தானம் அருளுகவென அருந்தவக்

குழுவினர் அன்பொடு வேண்டலான், ஆதியந்தொழில் செயும் நான்முகக்கடவுள் வட்டவடிவிற் பெட்புடன் விடுத்த தருப்பையினியக்கந் தணியப் பெற்றமை சம்பந்தமாக நைமிசம் எனப் புகழ்பெற்றதும், வாய்மையரும், மறையவரும், வெண்ணீற்றணிந்தினரும், அந்தணரும், தத்துவங்கடந்தவருமாகிய தபோதனர்களான் விளங்குவதுமாகிய வனம் ஒன்றுளது.

அந்நைமிசாரண்யத்தின்கண் மயில்களானவை முனிவர்களால் பல சமித்துக்களைக்கொண்டு மந்திர விதிப்படி ஓமாக்கினிகள் வளர்த்தற்குத் துணையாகக் காற்றை யெழுப்பச் சோலைகளினின்றும் சிறகுகளை விரித்து ஆடும். ஆகாயமும் தன்னுண்மறையும்படி மேலுயர்ந்தோங்கும் சோலைகள் தன்னிடத்தேயுள்ள இருளைப்போக்கி நெருங்கியிருக்கின்ற பூங்கொத்துக்களையுடைய சோதிவிருக்ஷமாகிய தீபத்தைத் தாங்க, இலைகள் மிகுந்த கிளைகள் புதிய கனித்தொகுதியை அங்குள்ள தபோதனர்க்கு அவர்கள் ஏந்துகின்ற கரகபாத்திரமாகக் கொடுக்கும். மும்மலக்கூற்பாட்டைக் கெடுத்த நான்கு வேதங்களையும் ஓதுகின்ற தன்மையையுடைய குற்றமற்ற தவசிரேஷ்டர் தங்கள் தங்கள் நித்திய கருமம் முதலியவற்றைச் செய்பவராய்க் கங்கை நதியில் ஸ்நானம் முதலியன முடித்து உலர்த்துகின்ற சடையைப் பக்கத்தில் நின்று பூத்துக் காய்த்திருக்கின்ற கொன்றை மரங்கள் காட்டும். அக்கினியானவன் தன் *எழுநாவினையும் குற்றமற்ற முனிவர்களால்

* அக்கினியின் எழுநாக்களாவன:—காளி, கராளி, மனோஜவா, சுஹிதா, தூமவர்ணை, அப்ஸூலிங்கினீ, விச்வபதா என்பன.

கொடுக்கப்படும் யாகசாலையின் கண்ணுள்ள பொரி, நெய், அவிப்பாகம் முதலியவைகளை உண்டு மேலே விடுகின்ற புகைத் தொகுதியை அளவற்ற தளிர்களோடு கூடி மேகக் கூட்டங்கள் மேலே தங்கப்பெற்று வளர்ந்திருக்கின்ற குளிர்ச்சி பொருந்திய தேமாமரங்கள், அளவு கடந்த (தளிர்களாகிய) நாக்களைக்கொண்டு அதிகமாக வளர்ப்பன போலும்.

இத்தகைய சிறப்புக்கள் வாய்க்கப்பெற்ற அந்நைமிசவனத்தின்கண் அத்திரி, கௌதமர், கண்ணுவர், சுகர், வசிட்டர், காசிபர், சவுனகர் முதலிய முனிவர்கள் முற்காலத்தில் குற்றமற்ற ஒரு சத்திர யாகத்தைச் செய்கின்ற அப்பொழுது, பல வேதங்களையும், பலகலைகளையும் வியாசராகிய கலக்கமில்லாத கடலின்கண் மொண்டு வந்து உயிர்களாகிய பயிர்களிடத்தில் பொழிகின்ற மேகம்போல் விளங்கி வரும் சூதமகா முனிவர் வர, அவரை அம்முனிவர்கள் கண்டு தமியேங்களுடைய கொடுந்தாபத்தை நீக்கிப் புராணங்களாகிய கடல்கள் எல்லாவற்றையும் கடைந்து இவ்விடத்தே அமுதத்தை நாங்கள் உண்ணுமாறு கொடுத்தருளும் பெருங்கருணை மலையே! எங்கள் நிதியே! என்று வேணவாவொடு விளிந்து எதிர்சென் றழைத்துவந்து அர்க்கிய முதலிய உபசாரம் புரிந்து, இரத்தினாசனம் அமைத்து அதன்மேல் எழுந்தருளப்பண்ணி, எம்பிரானே! இவ்விடம் தேவரீர் அடைந்தது நாங்கள் முன் செய்த தவப்பேறென்று, முதிர்வேனிற் காலத்தில் மழைத்துளி விழப்பெற்ற செந்நெற் கதிர்போல் களிப்படைந்தவர்களாய் விண்ணப்பிப்பாராயினர்.

குற்றம் நீங்கிய பதினெண் புராணங்களையும், இதிகாசங்களையும், பற்பல தர்ம நீதிகளையும், நன்கு அறிவுறுத்தருளியும் உறுதி இன்னதென்று தெளிவடையாத தமியேங்களுக்கு மனத்தூய்மை ஜனிக்கும்படி புகட்டிய புற்பல தலமகிமைகளுள், ஒரு பெண்ணானவள் பூர்ண கர்ப்பத்தோடு பாதுகாப்பார் ஒரு மாதரும் பக்கத்திலில்லாமல் வாட்டமடைகின்ற தருணத்தில், அவள் புத்திரனைப் பெற்றுச் சுகமுற நிமித்தம், அவளது தாயாக எழுந்தருளிவந்து காப்பாற்றிய எம்பெருமான் வீற்றிருக்கும் திருசிராப்பள்ளி மலையும், தன் எச்சிலாகிய நூலால் பந்தரிட்டு வழிபட்ட சிலந்தியினிடத்தும், அப் பந்தரைக் கெடுத்துத் துதிக்கை நீரால் அபிஷேகஞ்செய்த யானையின் பாலும் தோன்றியருள் புரிந்து, எப்பொழுதும் நீர்த்தொகுதியாகவே யமர்ந்திருக்கும் அப்புக்ஷேத்திரமாகிய திருநீறிட்டான் மதிலாற் சூழப்பட்ட திருவானைக்காவும், சிவசொரூபமும், வாழ்வும், கைப்பிரம்பும், காவற்றிருப்பணியும், உச்சியாபரணமுமட் நந்திதேவர் தவஞ்செய்து பெற்ற மகிமையையுடைய பஞ்சநதமும், தந்தையார்க்குப் பிரணவப்பொருளைச் சுப்பிரமணியப் பெருமான் உபதேசித்தருளிய உயர்வுபெற்ற சுவாமிமலையெனவழங்கும் திருவேரகமும், அமர்நீதிநாயனாரைக் கோவணம் நிறுவிய அத் தராசே விமானமாகச் சிவலோகத்துக் கேற்றுவித்த திருநல்லூர்ப்பதியும், புண்ணிய ஸ்தல யாத்திரையினாலே எத்தகைய தீவினைப் பகுதியும் அழியுமென்று சுருதிகள் முழங்கவும், தன்னிடத்திலேயே நிகழ்ந்த வினைத்துன்பங்கள் வேறு ஸ்தலத்தினால்

நீங்கப்பொழுது தானே எளிதிற் றீர்க்கக்கூடிய கும்ப கோணமென வழங்கும் திருக்குடந்தைமாநகரும், ஒரு பத்தியுமின்றியே ஓரிரவு தங்கி நித்திரை செய்யினும், அக்கணமே அஷ்டமாசித்திகளையும் பெறலோடு சிவகடாக்ஷம் அடைவரென்று முத்தியாகிய கனியை விரும்பி மாணிக்கச் சுடர்ப்பூண் ஏந்திய ஆதிசேஷனால் தோத்திரஞ் செய்யப்படுகின்ற திருநாகேஸ்வரமாகிய திவ்விய ஸ்தலமும், வருணபாண்டியனுக்குப் பிரமகத்தி நீங்கப்பெற்றதும், காவிரிநதி சூழ்ந்துள்ளதுமான மருதவனமும், பார்வதிதேவியார் பசுவடிவாய்ப் பூசித்துத் துதிக்கப்படுவதும், மாசிலாமணியீசர் வீற்றிருக்கப்படுவதுமாகிய திருவாவடுதுறையும், சேர சோழ பாண்டியர்களாலும் தேவர்களாலும் போற்றப்படும் சிறப்பினை வகித்துக் காவிரிவளப்பம் தங்கிய குற்றாலமாகிய திருத்துருத்தியும், அரிமர்த்தன பாண்டியனால் வழிபட்ட முழுமுதற் கடவுளாகிய சொக்கலிங்கமூர்த்தி மண்சுமக்கப்பெற்றதனால் வைகைநதிக்குண்டாகிய ஓர் அபவாத வார்த்தையை மாற்ற நிமித்தம் பரமசிவம் தாங்கிய புது வெள்ளச் சுமையைத் தானே வகித்துத் திரைகளாகிய கைகளினாலே போற்றப்படுகின்ற பொன்னிநதி சூழும் மாயூரம் என வழங்குந் திருமயிலாடுதுறையும், சமீபமாக அடுத்துவரும் மாயையினுட் புகுந்து கிடக்கும் சீவகோடிகளைச் செந்தமிழ்த் திருப்பதிகக் கருவியினால் முத்திக்கரையில் ஏற்றுவித்த திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவவதாரஞ்செய்த இடம் என்னும் பழைய நகரமாகிய, மகா விட்டுணுவின் நரசிங்காவதாரத்தில் நிகழ்ந்த ஆங்காரவினையோடு

கூடிய வடிவம் மிக்கப்பெற்ற திருப்பிரமபுரமென்னுஞ் சீகாழி யொன்றும், திருசிராப்பள்ளி, திருநனிபள்ளி, மேலைத்திருக்காட்டுப்பள்ளி, கீழைத்திருக்காட்டுப்பள்ளி ஆகிய நாற் பள்ளியினும் மேற்பள்ளியாய்ப் பிரமவிட்டுணு தாங்கள் தெளிவறிவினராக வேண்டுமென்று துதிக்கப்பெறாஉம் திருச்செம்பொன்பள்ளியும், அரிமர்த்தன பாண்டியன் கூனையும், மன்மதன் கருப்புவில்லின் கூனையும் மாற்றிய சம்பந்தரடியவராகிய குங்குலியக் கலய நாயனார் அசுரப்பெண்ணாகிய தாடகக் கன்னிகையின் மானங் கெடாவண்ணம் வளைந்து, பின்னர் சோழராஜா முயற்சியால் நிமிரப்படாத சிவலிங்கத்தை அன்பால் நிமிர்த்தப்பெற்றதாகிய திருப்பனந்தாட்பதியும், முன்னொரு காலத்தில் அகத்திய முனிவர் பொன்னிநீராடிப் பொன்மலர் தூஉய் அருச்சித்து மனமிறுமாக்க, ஆண்டு எம்பெருமான் எதிர்வந்தருளி நின்போற் சிற்றுருவமைந்த அடியார் முக்கோடியருளரெனத் தன்னுருவிற் காட்டி, அவர் செருக்கழித்தருளப் பெற்ற திருக்கோடிகாத்தலமும், சிவலோக நகராகிய திருப்புன்கூரும், உடலுயிர்ப் பிணிகளைத் தீர்த்தருளும் கழுகேசனாகிய சடாயு, வேதம், சுப்பிரமணியக்கடவுள் இவர்களால் பூசிக்கப்பட்ட திருப்புள்ளிருக்குவேளூரென்னும் வைத்தீசுவரன் கோவிலும், சிவபெருமானின் திரிநேத்திரமும் முத்தடாகமாக விருக்கின்ற திருவெண்காடும், சமுத்திரராசன் பொன்னி நதியை மணந்து வாழ்வு பெற்று விளங்கற்கிடமான சாயாவனமெனும் திருச்சாய்க் காடுமாகிய காவிரி நதியின் தொடக்கமுதல் கடல் சங்கமம்

வரையிலுமுள்ள தலங்களின் மான்மியம் யாவும் வகுத்துரைத்தருளிய எந்தையே! தேவரீரிடத்தில் அடியேங்கள் ஒருகாலத்தில் சில விஷயங்களை விண்ணப்பிக்க, அதற்குப் பதில் தாங்கள் சொன்னதுண்டு. சொல்லியதற்கு முன்னரும் பின்னரும் பல கதைகளைச் சொன்னீர். எங்கட்குண்டாகிய மனக்கலக்கத்தை மாற்றுந் தன்மையை மட்டுமருளினீரல்லீர். ஆதலால், இப்பொழுது முற்றொருங் குணர்ந்த முழுமாதவத்தீர்! அவ்விஷயம் யாவையும் அநுக்கிரகிக்கவேண்டும். என்னெனின், தலங்களின் உத்தமமும், தீர்த்தங்களின் உத்தமமும், மூர்த்திகளின் உத்தமமும் தனித்தனி விளங்கப்போதித்தவாறே சிவபெருமான் குருலிங்க சங்கமமாக எழுந்தருளிவந்து முத்தியளிக்குந் திவ்விய பதியொன்றுளதென்றுமட்டு முபதேசித்தீரே! அந்நகரின் சிறப்பைத் தெற்றென விளங்குமாறு இப்பொழுது எங்களுக் கருள்செய்யவேண்டுமென்று சவுனகாதி முனிவர்கள் பேராசையோடும் பிரார்த்தித்துக் கொண்டார்கள்.

புராணவரலாறு

முற்றிற்று.

---

முதலாவது

## தலவிசிட்ட வத்தியாயம்.

அவ்வாறு வினவிய சவுனகமுனிவருடைய வார்த்தைகளை இருசெவிமடுத்த சூதபுராணிகர் காழிமான்மியத்தை ஒரு சிறிதுநேரம் சிட்டையிலிருந்து மெய்ஞ்ஞான வுணர்ச்சியினு லறிந்தவராய், கழுமலேசரின் திருவடிமாட்சியும், ஆங்கு நாற்புறஞ் சூழ்ந்து நிற்கும் பொன்னியாற்று மகிமையும் நினைந்து மனமுருகி, மெய்சிலிர்க்க, வாய்துதிக்க, கைகள் சிரசின்மேலேறிக் குவியப் பரவசமடைந்தவராய் நிகரற்ற அம்மான்மியத்தைக் கழறுவாராயினர்.

உத்தம முனிவர்காள்! உங்களுக்கு மேலான கதியைத் தரத்தக்க பல தலமகிமைகளை முன்னமே மொழிந்திருக்கின்றேம். அன்றியும், முழுமுதற்கடவுளே குருலிங்கசங்கமமாய மூன்றுவடிவாகஎழுந்தருளி வந்து அடியார்களுக்கு எளிதில் முத்தியைக் கொடுத்து வரும் செழுந்தகைமைவாய்ந்த தலமாட்சியும் சொல்லியிருக்கின்றேம். பின்னரும் நீர் வேணவாவுடன் கேட்டுக்கொண்டதால் அக்காழிநகரத்தினுடைய சிறப்புக்களை நினைத்தலும் அரிதாம்; ஆயினும் என்சிற்றறிவுக் கெட்டியவாறு சொல்லுகின்றேம் என்று நான்கு வேதங்களினின்றும் அளவற்ற வேதங்களாக விரிவுறுத்தருளிய வியாசமுனிவரின் திருவடிகளைத் திருவுளத்திருத்துகின்ற சூதபுராணிகர் முனிவர்காள்! வெதிரி

காச்சிரமத்தின் கண்ணே நீலகண்டமூர்த்தி எழுந்தருளிய கழுமலப்பதியின் வரலாற்றை எங்கள் குரவர் வியாசர் முன்னரே உபதேசித்தருளிய காலத்து இத்தலமகிமையை யாவருக்கும் சொல்லாதொழிகவென்று திருவாய் மலர்ந்தருளினர். ஆயினும் இருவினையொப்பு மலபரிபாகம் பெற்ற உத்தமோத்தமர்களுக்குச் சொல்லுதல் தகுதியேயாம்; ஆகலால், நீர் விரும்பினதும் நான் சொல்லுவதும் அறமேயாகும்.

காவிரிநதியானது நாற்பக்கமும் சூழ்க்கிடந்தமையால் மலர்மாலையைத் தரித்தது போன்றும், வேற்றரசர்களின் பிரவேசத்திற்கு உடன்படாத்தன்மையால் நீரரண் கொண்டதும், அநாதிமலமுத்தராகிய சிவபெருமான் தோணிமலையின்கண் வீற்றிருத்தலால் கைலையங்கிரியைக்கடுத்தும் விளங்குமதிலால் சூழப்பட்ட காழிநகரானது முற்காலத்தில் தாமரைமலராசனாகிய பிரமதேவர் அருச்சித்துத் துதித்தமையால் படைத்தற்றொழிலை யீந்ததும், பிரளய காலத்தில் குடிலாசக்தி தோணியுருக்கொண்டு வலிமை பெற்றதும் இக்காழிக்கேயே யென்க.

உயர்ந்த தருமங்கள் செய்கின்றவர்கள் கைலையங்கிரியை யொப்பாரென்பது வேதவழித்தே. அவர்கள் செய்யும் அத்தருமங்களுக்குத்தக்க உதவிகளைக் கொடுப்பவர் தேவத்தொகுதியினருள் சிவபெருமானன்றி வேறுயாவர்? ஆகலால் அச்சிவபெருமானே மூன்றுருவாகிவந்து இத்தலத்தெழுந்தருளி யிருக்கின்றாரென்றால் மற்றைய தலங்களைச் சமானமாகக்கூறுதல் பொருத்தமாகுமோ?

ஓ முனிசிரேட்டர்களே! தவத்தினர்களுள் உயர்ந்த பராசரமுனிவர் முற்காலத்தில் பிரமதேவரை நோக்கி வேதாகமவிதிகள் தவறப்பெற்ற இக்கலியுகத்தின்கண் தவவலிமையைக் கொடுத்து முத்தி கொடுக்கின்ற பெருந்தலமொன்று அருளுமெனவேண்ட, அறிவிற்சிறந்தவனே கேட்பாய்? சிவபெருமான் கைலையின்கண் உமையம்மையாருக் கிதை யுபதேசித்தபோது, உடனிருந்துகேட்ட யான் தெளிவடைய,காழிப்பதியை ஓர் தட்டிலும் ஏனைய தலங்களை ஓர் தட்டிலும்வைத்துத் தராசைத்தூக்க, இக்காழிநகர்த்தட்டு பற்றத்தலத் தட்டு பதினாறில் ஒரு கூறும் அமையப்படாதொழிதலின் எத்தலங்களினும் உயர்வுற்று நிலவியது; யுகாரம்பத்திலிருந்தே தொல்லைத்தன்மையும் அடைந்தது; எப்பொழுதும் என்னைப்போல அளவற்ற பிரமர்கள் வணங்கப் பெற்றது. ஆதலின், குற்றமற்ற குணத்தவத்தோய்! நீ அத்தலத்தின்கண் சென்றால் நினைத்தவை முற்றும் எய்தப்பெறுவாய் என்று பாரதிநாதன் பகரக்கேட்டலும், உடனே அப்பராசரமுனிவர் இப்பதிக்கண் வந்து கழுமலநாதரைப்பூசித்து வணங்கித் திருவருள்வரங்கள் எய்தப்பெற்றமையால் க்ஷேத்திரவரம் எனும் பெயரை அந்தணர்கள் ஏத்திச் சொல்ல, அதனால் கொடுங் கலிவலியைக் குறைத்து இந்த க்ஷேத்திரம் மேலுயர்ந்ததாகும். ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம், அத்தியான்மிகம் எனும் முத்துன்பக் குறும்பை வடவாமுகாக்கினி போல் தகிப்பதாகிய இத்தலத்தில் வாசஞ்செய்பவர்கள் அருந்தவப்பலன், தானபலன், யாகபலன்களையுமடைவர். ஆதலால், அப்பதியை யடை

யாதவர் எப்பதவியையும் அடையப் பெறார்; இப்ப தியை யடைந்தவர்களுடைய மனமறிந்து செய்த தீவினை ஈட்டங்கள் இரவிமுற்பனிபோல் கழியும் என்க. அன்றியும், இத்தோணிபுரத்தின்கண் எழுந்தருளியிருக்கும் சங்கமக்கடவுளை நரசிம்மசத்தின் நல்லுரிபோர்த்த நாதன் என்று ஒருக்கால் நினைத்தவர்களும், சொன்னவர்களும் அடையும் பலத்தை அளவற்ற விரதம், தானம், வேள்விகள், வேத நூலாராய்ச்சி, முனிவர்களைப் போல் முத்தீவளர்த்தல், அட்டாங்கயோகம் புரிதல் ஆகிய இவைகளாலடையும் பயன்களெல்லாம் ஒரு ஆறு ஊளவேனும் ஒவ்வா என்க.

இன்னும் பிரமதேவர் முன்னர் கொண்டுவந்த தெய்வவிருக்ஷத்தை முறையுடன் வணங்கி அதன்பரி சுத்தத் தளிரைச் சிரசில் முடிப்பவர் தம்மை நலியும் வினைகளையும், நெடுநாட்பிடித்து வருத்தும் பிணிகளையும் முடிப்பவராவர். அதுமாத்திரமா? அவ்விருக்ஷத்தினடியில் தங்கிய மணலை நெற்றியிற் றரிப்பார், பெறற்கரிய பேரின்ப வீட்டிற்றரிப்பார், பரந்த குளிர்ந்த நீழற்கீழ் ஓர் மந்திரத்தைக் கணித்தவர், பலமந்திரத் தொகுதியாவெல்லாம் ஜெபித்துக் கணித்தவராவர். இத்தலத்தின் வீதியில் அங்கப்பிரதக்ஷிணம் செய்தோர் சிவசாமீப்பியப்பலனை யடைகுநராவார். வீதியில் முறையாக ஓரடிக்கோரடி வணங்கிவணங்கித் துதித்துத் துதித்து நமஸ்கரித்து எழுந்தெழுந்து வரும்பிரதக்ஷிணம் ஒருகோடிசெய்யவேண்டும் என்ற எண்ணங்கொண்டவராய் ஓரடி யெடுத்து நடந்தாலும், ஆயிரகோடியாகஞ்செய்து உமாபாகருக்கு மகிழ்வுவரும்

பூசைசெய்து எய்தாரும் பலன்களை முற்றுமடையும் என்பது திண்ணம். கற்பநாளிறுதியில் உண்டாகின்ற மாட்சியின் அழியாத முழுத்தன்மையுமடைந்து, திரும்பச் சிருட்டித்தொடக்கக் காலத்தும் மேன்மை பெற்றிருந்ததாகிய காழியம்பதியில் கைலாசபதியாகிய கடவுள் எழுந்தருளியிருப்பார்.

அச்சிவபெருமான் திருவடியகத்து விஷ்ணு முதலிய அண்டகோடிகளடங்கும். பிரமேசராகிய சிவலிங்க மூலத்தானத்தில் யாபாதத்துவம் ஒடுங்கும். திரும்பவும் ஒடுங்கிய முறைமையாகவே தோற்றமும் உண்டாகும். ஆகலால், இவ்வெழிற்றோணிபுரமான்மியத்தை முற்றுமெடுத்துரைக்கும் ஆற்றல் நாவாயிரம் படைத்த நாகேசனாலும் இயலாதெனின், நம்மைப்போன்ற சிற்றறிவினர்களால் எவ்வாறு முற்றுறும்? அப்பிரமேசப் பெருமானை திருவுருக்கொண்டெழுந்தருளி வந்து தெரிவித்தாலன்றி, வேதங்களாலும் விளங்கமுடியாதென்பது சத்தியமேயாமென்றுணர்க.

பூர்வ புண்ணியத்தால்வந்து பிறந்தவர்கட்குத் திருவாரூர் முத்தியையும், நோயாதியால் பிணிப்புறும் அரும்பொருள்கொண்டே பெருந்தலம் பல கடந்தேக இயன்றிவந்திறந்தவர்க்குக் காசியம்பதிதான் தேசவிடத்தையும், யாதொரு சிரமமுமின்றிவந்து இரு கண்களாக்கத் தெரிசித்தோர்க்குத் தில்லைநகர் சிவகதியையும் கொடுக்கும். இக்காழியோவெனில், மூவகையோர்க்கும் முத்திக்கதியைச் சித்தமாயளிக்கும்.

கருங்கல்நேருங் கீடுமுளத்தவர்களுங்கணப்பொழு திங்கு கண்ணுறங்குவரேல், ஓரரைக்கணம் அல்லது இங்கு உறவரேல் உண்மையாய்த் தொல்லைவல்வினை களும் எல்லைமுற் பனிபோல் மாய்ந்திடும். இது மறை ஆய்ந்தவர் கூற்றும். காழியின் எல்லை கண்டவர் யாவ ரும் திருவருட் கடலில் தெளிவுறச் செவ்வனே மூழ்கு வர். அன்றியும், மாழ்கலில் அன்போடு அவைவார் உற வொடுகைலை சென்றணைவார். வாக்கு மனத்தீதராகிய எம் பெருமான் சிவலிங்கசொரூபமே பனமாகவும், தோணி சமேதராகவாழுங் குருமூர்த்தமே வாக்காகவும், சட்ட நாதத் திருமேனியெனுஞ் சங்கமப்பொருளே சரீரமாக வு பமர்ந்து ஜீவகோடிகளின் மும்மலமேனரகழ்ந்து மற்ற ருங்கதியை யீந்திடற்பொருட்டே சாற்றும் இந்நகரில் வீற்றிருக்கின்றார். ஆதலால் எப்பதியைவற்றும் இப் பதியே மேலாம்.

இன்னும், பசுபதிதானே பசுவினது உருவம், அப் பசுமுலையே செப்பரு மிலிங்கம், விரவளியுறப்பே குருவின் வடிவம், முன்புசேர்வதனம் அன்பர்தம்மேனி என்று பெரியோர்களால் எத்திடப்பெறுதலால், இத்த லத்தில் வாழும் எத்தனைபேர்க்கும் முறைபேபணிசெய் மூடனேனும் இறையேயாவன். இதுவே திண்ணம்.

அன்பிற் சிறந்த அருந்தவமுனிவர்காள்! ஒரு பசு வினிடத்தில் பால்பெறவேண்டும் என்னுங் கருத்து உட்கொண்ட ஒருவன் செழுமையாகிய அறுகம்புல் லைப் பால்சுரப்பது முலையாதலின் என்று அதனகத்திடு வனு, அன்றி உடலகத்திடுவனு, சிறப்புறும் முகத்திற் சேர்த்திடின், வாயால் அது நுகர்ந்து, அன்றே மதுர

மார்பாலேப் பொழியும்; இத்தகைத்தாற் சங்கமப் புனிதன் வதனமாய் அங்கே வதிந்தருள்புரிகுவான். உள்ளமெனவுரைக்கும் உவமலிங்கத்தால் வளநலியாணவம் மாய்ந்திடும். ஆங்கே, வாக்காம் குருவால் மாயைகள்மாயும். சரீரமென்னுஞ் சங்கமத்தாலே கன்மமலவினைக் காடழிந்திடும்.

கூறுங்கால், மனம் வாக்குக் காயம் எனும் மூன்றனுள் ஒன்றின் காரியமாக நிகழ்ந்தவினைகள் மற்றொன்றாலழியா. மனதைப் பற்றியன்றி ஒன்றும் நிகழாது. முப்பலரிக்கத்திற்கு இத்தலம் வலிபெற்றதுபோல் எத்தலமும் பெறவில்லை. அல்லிமலர்மாலையில் மலர்க்காலழிந்தாலும் மலரைப் பந்தித்து நிற்கும் நூல் அழியாதவாறுபோல் சரீரமழிந்தாலும், அதனைப் பந்தித்து நிற்கும் இருவினைகளும் அழியா. இருவினையொப்பு மலபரிபாகம் சித்திக்குங் காலத்து ஞானம் எளிதிலடையும். முத்தியையன்றே சித்தமாய் அடைவார்; இவ்வாறாய் ஆதல் எம்மனோர்க்கரிதாம். மற்றென்னெனில், மும்மலத் தொடர்பை மூன்று வடிவமுமே யழித்துவிடும். இத்தன்மை மேற்கொண்ட நற்றலத்தை எவர் அடைய விரும்பினும் மேல்வீடடைவார். முத்தி வளப்பத்தைக் கொடுக்கும் விராட்புருடன் குய்யஸ்தானமாகிய காசி, விராட் புருடனிருதயஸ்தானமாய் பூமிக்கு நடுஸ்தானமாயும் உள்ள தில்லைவனம் இவ்விரண்டையும் மேலாக்குவது இக்கழுமலநகரேயாம். இதன் சிறப்பை முற்று முணர்ந்துரைப்பவர் முக்காலத்தினுமில்லையென அறிவீர்.

ஐயன்மீர்! திருநீலகண்டரின் திருத்தானமாகிய

தோணிபுரத்தைத் துதித்தால் தொன்னூழ் சூழ்ந்து
வருத்தும் துன்பநோய் தணிவார்; வலஞ்செய்வோ
ரின் பலனுரைக்குங்கால், எண்பத்துநான்கா மிலக்க
யோனிகளாம் பிறவிநோய் மாய்ந்து பெருங்கதி யடை
வார்; பணிந்தோர் வானவர் பலனெலாம் மகிழ்வுட
னடைவார்; சர்வாங்கமுந் தரையினிற் படியத்தொழுது
துதிக்குந் தொண்டர்களடியில் பதினென்குலகமும்
பணிபுரிந்து என்றும் ஆணையாய் ஆங்கே அசைவின்றி
அமரும். இன்னும் அப்பதியில், மன்னும் மாதவத்தீர்!
ஒரு சாண் வஸ்திரம் உவகையோடேழைக்குத்தரும்
அடியவர் எல்லாரும் ஜானகிநாதன் பதவியைச் சார்
வார். திருத்தோணியின்கண் சேர்ந்து வீற்றிருக்கும்
நம்பன் முன்னே ஒருகால் தொழுதொழுந்தால் சஞ்
சித வினையெனுஞ் சாகரங் கடந்தே இறைவனது அரு
ளாம் கரையினில் ஏறுவார். இங்குள்ள பிரமதீர்த்த
நீர்த்துளியைத் திருநிலை நாயகி சந்நிதிமுன்னே ஒருவர்
மேல் வீசியவுடன் அவர் நிர்மலராவார். பஞ்சாக்ஷரத்
தை அப்பொழுது உச்சரித்தவர் காசி முதலிய ஸ்தலங்
களில் யாகாதிகளைச் செய்த பேறுகளை யொருங்
கெய்துவார்.

இது காறும் கூறிப்போந்தவைகளால் கரதலாம
லகம்போல் தெற்றென விளங்கக் கிடந்தது தென்னெ
னின்:—பிரமேசராகிய சிவலிங்கப் பெருமானுக்கும்,
தோணியப்ப குருமூர்த்தமாகிய பெரிய நாயகருக்கும்,
சங்கம வடிவமாக வீற்றிருக்கும் சட்டநாதருக்கும்
ஒப்பும் உயர்வும் பொருந்திய குருலிங்க சங்கம மூர்த்
தங்கள் இம்மண்ணுலகத்தும் மற்றெவ்வுலகத்தும் கா

ணவுஞ் சேட்கவும் இன்றென, ஐயம், திரிபு, அறியாமை எனுமுக்குற்றமும் நீங்க அறிவீராக.

பண்பிற் சிறந்த படிவமாதவத்தீர்! பிரமதேவரால் சிருஷ்டிக்கப்பட்ட இப்பிரமாண்டத்துள் உள்ள தீவுகள் ஏழுனுள், நாவலந்தீவகத்தது மேம்பட்ட பொன்னிறமாகிய மேருமலையொன்று ஓங்கி நிற்கின்றது. அக்கிரியின் உயரமோ மூன்று லக்ஷத்து இருபதினாயிரம் அடி அளவாகும். முடியின் பரப்பு 32,000 அடி. அடிப்பரப்பு 16,000. வேரின் பருமனும் அத்தொகையே கொண்டு சூரியசந்திரர்கள் தன்னைச் சூழ்வர, நீலகிரியும், சிருங்ககிரியும், இடபகிரியும் வடக்கே இருக்க, பூமியினிடத்துள்ள மந்தரமலை கிழக்கேநிற்க, மேற்கே விபுலபர்ப்பதம் பொலிய, இமயமலை, நிடதமலை, ஏமகூடமலை தெற்கே தோன்ற, இத்தகைய அகவிதழ்கள் பல பூத்துச் சமைந்த சிகரமாகிய பொகுட்டோடும் நீலநிறங்கொண்ட சமுத்திரமாகிய ஒரு தடாகத்து மலர்ந்த செந்தாமரைபோல மேருகிரி விளங்க நிற்கின்றது.

இவ்வாறு பொன்மணங்கமழும் இந்நாவலந்தீவில் 9000 யோசனை எல்லை தூரமுள்ள பரதகண்டத்தில், விஷ்ணு, பிரமன் முதலிய தேவர்களால் தாபிக்கப்பட்டனவும், சுயம்புவாகவுள்ளனவும் ஆக அளவு கடந்த சிவலிங்காலயத்தானங்கள் எம்முடைய பராபரமூர்த்திக்கு இமயமலை முதல் பொதியவரை இறுதியாகப் பொலிவுபெற் றிலங்கும்.

இவைகளுள் குற்றமற்ற இக்கர்மபூமியினிடத்து வாரணாசியாகிய காசிப்பதியும், கயையும், சீர்மைதங்கிய

பிரயாகையும், பிரமவிஷ்ணுக்களால் ஒரு சிறுபோதும் காணுதற்கரியதும், பதஞ்சலி வியாக்கிர பாத முனி சிரேட்டர்களுக்கு எஞ்ஞான்றும் இடைவிடாது தெரிசித்தற்கு எளியதுமாகிய திருத்தில்லை வனமெனுஞ் சிதம்பர க்ஷேத்திரமும், திருக்குடந்தை மாநகராகிய மங்கலில்லாத புங்கமார்தலமும், சமயாசாரிய மூர்த்திகளுள் ஆதிசைவ குலோத்துங்க திலகராகிய ஆளுடைய நம்பியின் இடைவிடா ஞாபகச் சின்னப் பெரும் தியாகத் தும் திருப்பதிகங்கள் தோறும் விளங்கக் காட்டிய கமலையம்பதியாகிய பிருதிவி திருவாரூரும், வேதங்களால் பிரதிபாதிக்கப்படுவதும், எம்பெருமான் அதிகாரா த்திரம் திருமணக்கோலமாகத் திகழ்வதும் ஆகிய அப்பர், சம்பந்தமூர்த்திகளால் தோத்திரிக்கப்படும் வேதாரணியமும், மகாலிங்க வடிவாகும் திருவிடை மருதூரும் என்று விதந்தோதப்படும் எட்டுத்தலங்களும் இப்பூமிலத்துக்கு ஓரணிகலனுக அறிஞர்களால் விசேஷிக்கப்பெற்று விளங்குவனவாம்.

இந்த எட்டுத்தலங்களுள்ளும் முதன்மையானது இப்பதியே. யாதுகாரணத்தாலோவெனின், பேரூழி காலத்தும் நிலைபேராத விலக்கணத்தாலும், வைதிக சைவத்தை நிலைநாட்டிய் தமிழ்ப்புத்திர சிகாமணியாய்ப் பிராமண குலதீப பரமத கோளரி எனும் திருஞான சம்பந்தப் பெருந்தகையா ரவதரித்த விழுப்ப மேற்கொண்டமையானும், பொருளாளப் பிஞ்ஞக மூர்த்தி வடிவ மூன்றுகி வாழுந்திறத்தானும் உயர்ந்த தென்க.

இக்காழி நகரத்தின் நாற்புறமும் ஐந்து குரோ

சத்தளவுகாறும் உள்ள ஆறறிவினராம் மக்களும், ஐயறிவினராம் * மாக்களும், தாவரங்களும், பறவைகளும், திரிவனவாகிய விலங்குகளும், தவழ்வனவும், ஊர்வனவும், புல் செடியாதி ஓரறிவுயிர்களும், அடுத்த தேசங்களிலிருந்து இவ்விடம் வந்து இறந்தவர்களும் இறந்தவைகளும சிவசாயுச்சிய மடைதல் திண்ணமெனவறிக.

முற்காலத்தில் சூரனால் வருந்தித் தன்பதவியையிழந்த இந்திரனானவன் மனைவியோடும், மற்றும் தேவரோடும் இப்பதியில்வந்து தம்பதவியைப் பெறவிரும்பிப் பிரமேசரைத் தெரிசித்துத் தேவரீரே எங்களுக்குப் புகலிடம் அன்றி வேறில்லை யெனப் பிரார்த்தித்து ஐம்பதத்தையும் அடைந்தான். மற்றையோரும் அடைந்தார்கள்.

இப்பதியில் பரமேசுரனானவன் முன்னாளில் பவளத்தைநேரும் சடையும், சர்ப்பமாலையும், குண்டலமும் அசைய, மூன்றாம் பிறை பிரகாசிக்க, வதனம் புன்முறுவலுடன் விளங்க, சிவகாமவல்லி கண்கள் குளிரத் திருநடனஞ் செய்தார். இந்திரன் முதலிய அட்டதிக்குப் பாலகர்களும் இவண்வந்து பிரமேசரை வணங்கி ஒவ்வொருவரும் தத்தம் பேரால் தீர்த்தம் உண்டாக்கி வழிபட்டனர் மற்றுமுள்ள தேவர்களோடெனின், இதன் மகிமையை யாரறிவார்? தோணிமலையில் வீற்றிருக்கும் வடுக நாதராகிய தண்டபாணியின் திருமேனிமீது திருப்புழுகைச் சுக்கிரவாரத்

* மாக்கள் என்றது மனிதர்களிற் பகுத்தறி விழந்த விலங்கின்பாற் பட்டாரை.

தன்று அணிந்து அருச்சித்து, அவர் திருவடி வணங்கி யவரை எழுபிறப்பும் தீவினையணுகாது. இயக்கர், கின்னரர், சித்தர், வித்தியாதரர், தேவர், நாகர் முதலியவர்கள் இத்தலத்துக்கு ஐந்து குரோசத்தளவுகாறும் பற்பல சிவலிங்கங்களைத்தாபித்து வழிபட்டமையால் லிங்காடவி யென ஓர் அரும்பெருநாமம் இத்தலத்திற்குண்டு. இவ்வூர் மணல் முற்றுமே லிங்கவடிவம். சொர்க்கலோகம் போய் இந்திர போகம் அனுபவிக்குங்கால் இந்திராணியின் முலைச்சுவடழுந்தச் சுகிக்கும் போது, ப்யாசல நெருக்கத்தால் பூமாலையில் உண்டாகும் மகரந்தத்தூளை மனசில் அருவருத்துத் தள்ளி, சர்வ அங்கமும் தரையிலிலங்க, அங்கப் பிரதக்ஷிணம் இத்தலவீதியின்கண் செய்யும் சமயத்தில், மேலெழும் மண்ணின்துகளை மட்டும் சரீரத்தணிவார்கள், பற்றறுந்து ஞானிகளாய் மும்மலப் பிணிகளான் பிணித்தல் தணிவார்கள். முற்பவமுணர்ந்த விப்பிரமணிகாள்! இன்னும் பஞ்சேந்திரியங்களுள் நேத்திரேந்திரிய திருப்திக்குச் செண்மைத்தாய் நின்று கோபுர தெரிசனஞ் செய்து அஞ்சலித்துத் தனித நீராடிப் புனித நீறணிந்து, உருத்திராக்க மணிவடம் புனைந்து, ஓடிவந்து திருக்கோயிலுட் சென்று, குருலிங்க சங்கம வடிவப் பொலிவை வணங்கவாய்த்தவர், சிவன் சீயன் என இரண்டறக் கலந்து நிற்கும் அப்பெருங்கதியை அடைகுநராவார். இவ் வாலயத்திலுள்ள சிலமானவற்றைப் புதுப்பித்தோரும், இட்டிகை பரப்பியவரும், அடிக்கடி தோன்றும் புல்லாதி போக்கி நல்லாகச் செய்வோரும் ஆகிய இவருடலகத்துண்டாகும் மாசுகளைப் பெரிய

நாயகியாகிய எம்பிராட்டியார்" தமது உத்தரீய வஸ்திரங்கொண்டெடுக்க மகிழ்குநராவார். தோணியப்பர் முடிமேல் பஞ்சகவ்வியத்தால் திருமஞ்சனஞ் செய்குவோர் திருவருட்கடலில் மூழ்குவார். நான்கு சாமமும் இத்தலத்தில் ஒழுங்காகத் துதித்தார்க்கன்றி ஏனையோர்க்குப் பெறற்கரும்வீடு உறற்கரிதாய்விடும். அளவு கடந்த சிவலிங்கங்களும், அளவு கடந்த தீர்த்தங்களும் இக்காழிநகர்கொண் டிலங்காநிற்கும். ஆயினும், முக்கிய சிவதீர்த்தங்கள் பன்னிரண்டே. அந்தொகையே மூர்த்தியின் திருநாமமும், அங்ஙனமே இப்பதியின் அபிதானமும்; ஆதலால் என்றும் பொன்றாத இந்நகர்ச் சிறப்பைக் குன்றுதலில்லாக் குணமலை முனிவிர்காள்! எம்மாற் பேசுதல் அம்மாவியப்பே! கூறுதல் சரசமாகத் தேறுவீராக.

அவற்றுள் நன்னகர் நாமம் பன்னிரண்டாவன:- தோணிபுரம், பிரமபுரம், காழி, வெங்குரு, புகலி, சிரபுரம், சண்பை, கொச்சை, வேணுபுரம், கழுமலம், புறவம், பூந்தராய் என்பனவாம். மேலும் மேலும் விரித்துரைப்பதெற்றிற்கு? முன்னுளில் வலைஞர்பெண்ணாகிய மச்சகந்தியின் கொச்சை யிதழ்ச்சுவை யச்சமின்றியே யிச்சித் தந்நாள் அருந்திய முனிவராய் அருந்தவ சிரேஷ்டப் பராசரர் என்போர் இத்தராதலத்தென்றும் தூயமாமுனிவராக, அவர்தம் மாசுகள் அகற்றி மூவாறு புராணமும் குற்றமற எனக்கு உரைத்திடுங் குரவனாகிய வியாசரைப் பெற்றருள் பேறுங்கொண்டு வாழ்ந்தோங்கும் நினைத்தற்கரிய சிறப்புக்கள் பலவற்றை இத்தலம் ஒன்றே கொடுத்துப் புகழ்

வகிக்கின்றது. ஆதலால், எண்ணில் மான்மியம் இயம்பினம் அறிஞர்காள்! இனி இந்நகர்க்குரிய மூந்நான்காகும் பேர்களுள் முதன்மையான தோணிபுரப் பேர் தோன்றிய வழியைப் பேசுவேன், நீங்கள் நேசமாய் அறிமின் என்று சூத புராணிகர் கூறுவா ராயினர்.

தலவிசிட்ட வத்தியாயம்

முற்றிற்று.

---

## இரண்டாவது

## தோணிபுர வத்தியாயம்.

---

சவுனகாதி முனிவர்களே! எனக்கு எம்பெரும் ஆசானிசைத்தவாறே சொற்றிடுவேன் அதைத்தெற்றெனக் கேண்மின்!

பாசங்களாகிய ஆணவகர்ம மாயைகளான், முறுக்கிய கயிற்றினால் விடுக்கப்படும் பம்பரம்போல அலைந்துபடாவண்ணம் பேரன்பினால் நமது பரமபிதா மாதாவாகிய சிவபிரான் திருவருளே திருமேனியாகக் கொண்டு சிருஷ்டியாதி ஐந்தொழில்களையும் சர்வ ஜீவகோடிகளுக்குச் செய்கின்றனர். செய்யுங்கால் பிரமதேவரால் சிருஷ்டித்தொழிலும், மகாவிஷ்ணுவால் காத்தற்றொழிலும், உருத்திர தேவரால் சங்காரத்தொழிலும், மகேசுரமூர்த்தியால் திரோதானமும், சதாசிவமூர்த்தியால் சர்வாநுக்கிரகமும், நடைபெறுகின்றன. ஆகிய இவ்வைந்தொழிலும் எம்பரமாசாரிய

பரமசிவத்தின் ஆஞ்ஞாசக்கர நெறிக்கண்ணவாய் என்றும் திகழாநின்றன. இவற்றுள் சிருஷ்டித் தொழிற் காரியமாகிய அளவுகடந்த அண்டகோடிகட் காதேயமா யிலகும் இம்மாநிலவரைப்பின் நாற்புறஞ் சூழ்ந்த சப்த சமுத்திரத்தையும் ஒரு சிறு துளியாக வெடித்து எறியும் பெரும்புறக்கடலாகிய ஆதார மொன்று அப்பால் நிலைமைகொண்டிருப்பதாகும். அத் தருணத்தில் விராட்புருடன் தன் திருமேனியுரோமங் கள் தோறும் அத்திப்பழம் போல் அளவற்ற அண்ட வரிசைகள் தொங்க நடுவண் நின்று அமர்வன என்று சொல்லி, அவ்வண்டவரிசைகளுள் ஒரு அண்டத்தின் இயல்பை மிகவும் சுருக்கமாக எடுத்துக்கூறுவேன் கேண்மின் என்று சற்குணம் வாய்ந்த தபோதனர் முன்னிலையில் வாதராயணன் பாதமே சரணாக அடைந் திடுஞ் சூதத் தவபுராணிகர் தொடங்குகிறார்.

பதினான்குலகத்தைத் தன்னுள் வகித்த இவ்வண் டத்துள் பொன்னிறமாகிய மேருமலை பிரகாசித்துக் கொண்டிருக்கும். இம்மேருவைச் சூழ்ந்து விளங்கு வது சம்புத்தீவு. அது ஒரிலக்ஷயோசனை தூரத்தது. அதனை உவர்க்கடல் நாற்புறமுஞ் சூழ்தந்துலாவும். அது லக்ஷயோசனை விசாலத்தது. அப்பால் பிலக்ஷத் தீவும், அதனயலில் இக்ஷுசமுத்திரமும் ஓங்கிவளரும். அதற்கப்பால் சான்மலித்தீவும் அதற்கு நாலுலக்ஷத் தளவு தூரத்தில் மதுக்கடலும் விளங்கும். அப்பால் குசைத்தீவும், நெய்க்கடலும் எட்டிலக்ஷ யோசனைக் கண் பொலியும். இதற்குப் பதினாறு லக்ஷயோசனைத் தானத்துக் கிரவுஞ்சத்தீவும், ததிக்கடலும் சுலாவும்.

அன்றியும், சாகத்தீவும் திருப்பாற்கடலும் முப்பத்திரண்டு லக்ஷத்தூரவளவில் அமையும். இத்திருப்பாற் கடலகத்தே சூரியோதயமும், அஸ்தமயமும் ஆகுமென்பர் உண்மை மறைபயி லுத்தமர்கள். அதற்கயலில் புட்காரத்தீவும், அதனைச்சூழும் சுத்தோதகமுந் தீரும் தோன்றுகிற்கும் மேலதினிரட்டியாம் அறுபத்துநான்குலக்ஷ யோசனைக்கண் ணென்பர். அதற்குப் பக்கத்தில் பதின்கோடி யோசனையளவு பரந்ததானங்கொண்ட பொன்னமர் பூமி பகிர்ந்துறும். அப்பால் பதினாயிரம யோசனைப்பரப்பமர்ந்த சக்கரவாளகிரியாகும். அதன் பக்கத்தே பெரும்புறக்கடலானது இருபத்தேழுலக்ஷங்கோடி யோசனை யெல்லையில் விளங்காநின்றொளிரும். அதனைச்சூழும் இருளுலகத்தின் யோசனையளவோ ஏழுகோடியே பத்தொன்பது லக்ஷத்து நாற்பதினாயிரமாம். அதனயலில் அண்டச்சுவர் கோடி யோசனையளவில் இருக்கின்றது. இவைகள் விரிவின் பகுதி. தொகையின் பகுதியினையும் கூறுவாம்.

மகா மேருகிரி உச்சிமுதல் அண்டச் சுவரின் அளவும் உள்ள தூரம் ஐம்பதுகோடி யோசனையே. இது கிழக்கெல்லையாம்; மற்றை முத்திசை யெல்லையும் இத்திறமே. நூறுகோடி யோசனை பொருந்திய இந்நிலவுலகத்தின் கீழிடந்தொடங்கி மேலிடம் வரையில் நூறு கோடி யோசனை உயரமுண்டு. இவ்வித இயல்பு வாய்ந்த அண்டமிதனைப் பெரும்புறக்கடலானது ஒரு ஊழிகாலத்தில் ஒரு நிமிஷத்தில் எற்றிப்புகுந்தது. உடனே அலைகளெல்லாம் ஒன்றுகூடி மலையைப்போல் பொங்கி அண்டகோளகையைத் தாக்கிக்கொண்டு உலக

வடுக்கின் நிலைகுலையச்செய்து ஓங்கிச் சுழித்து எட்டுத் திசைகளும் ஒடுங்க அட்டயானைகளு மழியச்செய்து விளையாடியது. சக்கரவாளமலையும், அட்டகுலபர்வதங் களும், மகாமேருவும், இன்னும் மற்றமலைகளும் ஆகிய பதினென் குலகப் பர்வதமெல்லாம் ஒரேகாலத்தில் இரு ப்பிடந்தெரியாமலைந்து பொடிந்தன. அட்டதிசை நா கங்களும், நவக்கிரகங்களும், இருபத்தேழு நக்ஷத் திரங்களும், தேவர்களும், அஷ்டதிக்குப்பாலகர்களும், கற்பகதருவும், மற்றைச்சுடர்த்தொகுதிகளும் அழிந்து பறந்தன. நிலைபெயர்வன, பறப்பன, நிற்பன, நரகத்துறு வன, நீர்வாழ்வன, தத்துவன, ஊர்வன, தவழ்வனவென் பனவும், மனுஷ்யவர்க்கத்தனவும் ஆகிய ஜீவகோடி களெல்லாம் தேய்ந்தழிந்தன. விஷ்ணுவும் ஒடுங்கு கின்ற ஊழிகாலத்திலும் இறைவனாவான் பரிசுத்தரா கிய சிவபெருமானையல்லாமல் வேறு யாவர்? நிற்க.

ஒலிக்கின்ற திரைகளோடு கூடிய சமுத்திரமா னது தாக்க, தம்முயிரழியப் பெற்றாரை அமரர் என்று சொல்லுவார்கள்; அவர் தன்மையை மாத்திரம் ஒருவ ரும் தெரிந்துகொள்ளார்கள். சொற்களாலுணர்த்தப் படுகின்ற பொருள்கள் "எவ்வளவினவோ அவ்வளவின வாகிய யாவும் வெகு விரைவில் அழிய, அப்பொழுது உயிர்த்தொகுதிகள் பலவும் சுத்தமாயாபுவனத்தொடுங் குதலால் இருட்பரப்பினவாகி முந்நீரால் மூடப்பட்ட வாயின. அக்காலத்தில் நீலகண்டபரமசிவம் பதுமை யினை ஆட்டுவிப்பானொருவன் அப்பதுமையினைச் சின் னாள் எறிந்துவிட்டுப் பின்னரும் எடுத்தாட்டுந் தகை மையைப்போல், தன்னருள் வலியினாலே மறைந்து கிடக்

கின்ற ஜீவகோடிகளைத் திரும்பவும் படைத்தளிப்பான் எண்ணங்கொண்டாராய் நாகாபரணமும், மூன்றாம் பிறையும், கொன்றைப் பூமாலையும், புலித்தோலாடையுமின்றி, அம்பிகையோடும் பொருந்தி அறுபத்து நான்கு கலைகளையும் வஸ்திரமாகத் தரித்து, பருமனதாய், சிறுமையதாய், பதமும் ஐந்து வர்ணமு மாகிப் பரிசுத்தமாய், மும்மூர்த்தியாகி, * முக்குணமாய், ஆண் பெண்ணாய், எழுத்தாய், நாதத்தினளவாய், வேதத் தொனியாய் நின்ற பிரணவமே தோணியாக்கொண்டு, விட்டுணுவாலும், பிரமனாலும், மற்றும் நான்மறைகளாலும், தக்க பெரியோர்களாலும், தக்காரின் மனத்தினாலும், அளவையினாலும் அளத்தற் கருமையதான ஜோதிமயமாய் நின்ற சின்மயானந்த வியோமதாண்டவ சொரூபியே பெரிய நாயகன் என்ற ஒப்பற்ற ஓர் அபிதானத்துடன் ஒரு திவ்விய வடிவம் பொருந்த எழுந்தருளினன் என்க.

எம்பெருமானுடைய திருமேனிச் சோதியால் அகத்திருளும் புறத்திருளும் நீங்கியதற் குவமையாமென்னின், திருநிலை நாயகியின் திருமுலைப்பாலுண்டு திருச்சிவஞானம் பெற்ற திருஞான சம்பந்த மூர்த்தியின் திருவருட் செய்கையால் நிலைகெட்டோடிய சமணர் குழாமாகிய இருட்பிழம்பு சாய்ந்தோடியதே.

மெய்கனிந்தொழுகும் வேதாந்தமும், திருமலைமகளின் திருக்கண்ணும், தோஷங்கள் நீங்கிய தொண்டர்தம் மனமுமே போலும் தோணியைத் தம்முடைய திருவடியாம் தனையுறழ்கோலால் சமுத்திரத் தூன்றி

* முக்குண மாவன:—சாத்துவிகம், இராசதம், தாமதம்.

அருள் மிகுந்தோங்க அன்புடன் செலுத்தியருளினார். பிரமதேவருடைய சிருஷ்டியிலடங்கிய அண்ட கூடங்களும் சமுத்திரத் தலையால் எற்றப்பட்டுத் தொகுதிப் பொருள்யாவும் சுருங்கவே, முந்நீராகிய முதற் பெருங்கோயிலில் முக்குணாதீதத் தற்பரமூர்த்தி மேலவ ரறிய விளங்கியருளினா ரென்க. தருமத்திற் கெப்பொழுதுங் கெடுதி சாராதென்ற சான்றோரின் பொருட்டன்மை புலப்படுத்துவான், பெரும்புறக் கடலால் அண்டங்களெல்லாம் உண்ணப்பட்ட தருணம், ஆண் பெண்ணுயிர்கள் அதிசுகரின் செய்த அருந்தவத் தருமமே அருள் வடிவாகி முன்பு நின்ற முதற் பெருந்தலமிதை அருபஐயன் அன்புடன் கண்டனுப், உவகை மேற்கொண்டு, கைம்மலர் கொட்டி, நெடுநோக்குற்று, நீண்ட வண்டம் வரையில் நெருக்கி, ஓங்கும் பிரளய காலத்தும் செப்பமே தாங்கித் தெளிந்தோ ராச்சரியப்பட, புவன கோடிகளில் புண்ணிய மாகும் மூலாதார க்ஷேத்திரமென்றே முழுமுதற் கடவுளாங் கழுமல மூர்த்தி திருவாய்மலர்ந்தருளினார். வருணக்கடவுள் மகிழ்வுட னந்த மூலகாரணரை முகட்டிடைக் கண்டான். பெருங்கருணைத்தடங்கடலாகிய பெரிய நாயகரைக் கண்மலர் பற்றக் கைம்மலர் கூப்பச் சொன்மலர்களினால் தோத்திரஞ் செய்து, நன்மலர்த்தாளில் விண்மலர் மீன்போல் தண்மலர் முத்தைக் கொண்மூப் பொழிவபோல் சொரிந்து வணங்கினன் தூயனும் வருணன். தாமரை யன்ன சரண்பணிந்தேத்தும் திரைக்கட லரசனைத் திருக்கடைக் கண்ணால் நோக்கி, அருட்கடலாலே யார்வமுற்றோங்க அவன்றன் அகந்

தைமேவர் அரிந்தருளி, இனிக் கருப்பமாங் கடலில் கவலைப் படாதே ஆண்டருள் புரிந்தான் அமலநாயகன். முப்புர தகனனும் முக்கணனும் பெருமான் வெள்ளநீர்சூழ மேதினிதன்னில மேலாமென்று விளம்பு மித்தலத்துத் துணைவியோடு தோணியாம் விமானத்தில் எக்காலத்தும் இன்புடனிருப்பான். எண்டிசை காக்க அண்டர்களெண்மரை, எண் கணத் தலைவரை, க்ஷேத்திர பாலரைத் திசைதிசை பனுப்பித் தோணிமேற்கொண்டு துணைவியோடு எந்தை உயிர்க்கருள்செய்ய உவகையோ டொளிர்வான். பிரமதேவரின் கற்பநாள் வரையும் கடல்நீர் பொருந்தக்கடவுளதருளால் பின்னருங் குறையக்கண்ட பெரியோர்கள், நெற்றியங் கண்ணால் நீர் சுருங்கிற்றே! கடவுளின் விளையாட் டென்னே யென்று கழறுவாராயினர். விட்டுணுமுதல் மேற்கடவுளர் யாரும் முற்றமுந் தேடினும் முடிவிலா தமர்வான். பெரிய நாயகனும் பிஞ்ஞகனைத் தோணியீற்றிருத்தலால் தோணிபுரம் என மேதினிக் கண்ணே விளம்புவர் மேலோர். சித்திரை, ஐப்பசி, ஆடி, தைதமாதப் பிறப்புக்களிலும், மார்கழித் திருவாதிரையிலும், சிவராத்திரியிலும், கார்த்திகை மாசக் கார்த்திகை நாளிலும் பெரிய நாயகருக்குப் புழுகும், பெரிய நாயகிக்குக் கலவைச் சாந்தும் அணிந்தவர்க்கு அரியன ஒன்றுமில்லை. இத்தலத்தில் விரதம், தானம், யாகம், மந்திரம் இவைகள் ஒன்று, கோடி பலனைத்தருவதாகும். ஐம்பதத்தை இத்தலத்தில் வாழ்த்துகின்ற ஆன்றோர்கள் சிவபிரானுடைய

திருவடிகளே யன்றி பிரம விட்டுணு இந்திரர்களு டைய திருவடிகளை யடைய மாட்டார்கள்.

தோணிபுர வத்தியாயம்
முற்றிற்று.

---

மூன்றாவது
## பிரமபுர வத்தியாயம்.

இவ்வாறு தோணிபுர நாம வரலாற்றின் மகிமை யைக்கேட்ட சவுனகாதி முனிவர்கள் யாவரும் சூதபுரா ணிகரைப் பார்த்து எங்கள் குலதீபமே! இனிப் பிரம புர நாமம் வந்த முறையினையும் பேரன்போடு எங்க ளுக்கு அருளிச்செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கச் சொல்வாராயினர். ஆன்மாக்கள் தத்தம் பரிபக்குவ நிலையே முத்தி புகுவான் ஐந்தொழில்செய்கின்ற எமது இறைவன் மேலத்தியாயத்திற் கூறியபடி ஒடுங்கிய ஆன்மாக்களைப் பின்னரும் ஒரு விளையாட்டின் நிமித் தம் சிருஷ்டிப்பான் வேண்டி, பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானசத்தி ஆகிய ஐந்து சத்திகளைக்கொண்டு மாயையை யுண்டாக்கி, அதினின் றும் நாதாதி தத்துவங்களைப் படைத்துப் பின்னர் அத் துவாக்கள் ஆறினையும், கலாதிகளைந்தினையும், இன் னும் மற்றும் கன்மேந்திரிய, ஞானேந்திரிய, அந்தக் கரண, பூதாதிதத்துவங்களையும் படைத்து, நல்வினை, தீவினைகளைப் புகுத்தி, சிருஷ்டி திதி சங்கார கர்த்தர்க

ஆகிய முத்தேவரையும் நினைத்துப் பிரமதேவரை ராசத குணத்தினின்றும், விஷ்ணுவைச் சாத்துவிக குணத்தினின்றும், உருத்திரனைத் தாமத குணத்தினின்றும் வருவித்து, இம்மூவரையும் பார்த்து சிருஷ்டித்து, காத்து, அழியுங்கள் என்றனுக்கிரகிக்க, பிரமதேவர் கடவுளை நோக்கித் தேவரீருடைய திருவடித்துணை யின்றெனின் அணுவளவும் எனக்கு வலியில்லை, உண்டெனின் அணுவும் மலையுருவாகும்; மலையும் அணுவுருவாதற் கையமில்லை; ஆகலின், அனுக்கிரகஞ் செய்வாயென விண்ணப்பிக்க, அதுகண்ட பரமமூர்த்தி பிரமனைப்பார்த்து, நம்மிலக்கணமறிந்த நீ முற்றும் படைப்பதற்கு எமது சத்தியில்லையாயின் முடியாது; ஆகவே அச்சத்தியும் எனது ஏவலாலன்றி யமையாது. ஆகலின் நாளும் முறையே இச்சை கொண்டேனில்லையேல், அச்சத்தியு மறியாது. இத்தகைமையால் மூலாகமங்கள் கூறிய முறைப்படியே மந்திரங்கொண்டு விரும்பித் தோத்திரிப்பார் மனத்தில் அவரிச்சைப்படி வீற்றிருப்பேன். அம்மந்திரமோ ஏழுகோடியாகும். அவற்றுள் ஒரு நூறு மந்திரங்கள் சிறந்தன. அவற்றிலும் பஞ்சாக்ஷரமே சிறப்படையும். ஆகலின் இம்மந்திரத்தின் வலிபெற்றுச் சத்தியையும் பெற்றுப் படைத்தற்றொழிலையும் பெறுவாயாக. இந்த ஐம்பதமந்திரத்தினெழுங்கினைப் பெற்று அவ்வைந்தெழுத்தாக விளங்கி நிற்கும் கடவுளையும் தோத்திரிப்பாயாக. இந்த ஐந்தெழுத்தின் முதல் ஈரெழுத்தினையும், அதற்கப்பால் எழுத்தையும், அதன் முற்பட்ட வெழுத்தையும், அதற்குப்பின்னெழுத்தையும் முறையே தியானிப்பாயாக.

இவ்வைந்தெழுத்திலேயே சிருஷ்டியாதி ஐந்தொழி லும் நடக்குமென்று, அருளிச் செய்தனர்.

உடனே பிரமதேவர் கடவுளைச் சொன்மலர்க ளால் தோத்திரித்துப் பலதரம் திருவடிகளில் விழுந் தெழுந்திறைஞ்சி உலகத்தைச் சிருஷ்டிப்பான், ஞான சொரூபியே? ஒரு மந்திரத்தை யனுக்கிரகஞ் செய்வா யெனப் பிரார்த்திக்க, அதைக்கேட்டருளிய பரமசிவம் பஞ்சாக்ஷரத்தை உபதேசித்தருளி, உன்னைப்போல அநேகம் பிரமர்கள் இத்தலத்தை வணங்கி முத்தியடை தற்கேதுவாகிய மூலலிங்கத்தைப் பூசனைசெய்து தடாக மொன்றுண்டாக்கி, அந்நீரால் திருமஞ்சனமாட்டி வலிபெற்று உலகத்தைப் படைப்பாயாகவென் றனுக் கிரகித்தார். உன்னுடைய வலியினாலேயே உன் தொ ழில் நடைபெறுவது என்று எக்காலும் மறந்தும் நினையற்க. என்னருளாலே என்றும் நடைபெறும். வேறு குணம் நீங்கி இராசத குணத்தில் நிலைபெற்று எஞ்ஞான்றும் இத் திருவிருக்ஷத்தின்கண் எழுந்த சோதியால் மேன்மை யடைவாயாக. ஏ பிரமனே! உன க்கு ஆயுள்காலம் (கற்பநாள் முடிவுறுங்காலம்) குறு குங்கால் என்னை நீ அறிவாயாக.

கற்பநாளின் வகையாவது:—பதினெட்டுக்கண்ணி மை கொண்டது ஒரு காட்டை. காட்டை முப்பது கொண்டது கலை. கலைமுப்பது கொண்டது கணம். கணம் பன்னிரண்டு கொண்டது ஒரு முகூர்த்தம். முகூர்த்தம் முப்பதுகொண்டது ஒருநாள். நாள் பதி னைந்து கொண்டது பக்ஷம். பக்ஷமிரண்டுமாதம். மாச மிரண்டு இருது. இருதுமூன்று அயனம். இத்தக்ஷிணு

யன உத்தராயணத்து இரவும் பகலும் கூடியது தேவர்களுக்கு ஒருநாள். அந்நாள் முந்நூற்றறுபது கொண்டது ஒருவருஷம். இங்ஙனம் நூறுவருஷம் கொண்டது தேவர்களுக்குப் பூரணாயுள். இப்படித் தேவர்களுக்கு எழுபத்தொரு யுகமாறுதல் ஒருமனுப்பிறப்பர். இவ்வாறு பதினான்கு மனுக்களுடைய காலம் உனக்கு ஒரு பகலாகும். இத்தகைய கணக்கிலமைந்த ஒரு நூறு வருஷம் உனக்கு ஒரு கற்பகாலம் என்று திருவாய் மலர்ந்து கடவுள் மறைந்தருளினர்.

உடனே பிரமதேவர் சிவபெருமானருளியதை எண் செவியிலுமேற்றுச் சரீரபுழுதும் உரோமாஞ்சங்கொள்ளக் கண்களினின்றும் நீருகிவாயப் பணிந்து விடைபெற்றெழுந்தாராகிப் பிரமேச நாயகருக்கு ஈசான திசையில் இருக்கின்ற ஒரு தீர்த்தத்தைப் பார்த்தார். தன் பெயரால் விளங்கத்தக்க அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து நவவஸ்திரமுடுத்துச்சிவசின்னங்களாகிய விபூதி ருத்திராக்ஷ தாரணத்திற்பொலியப்பெற்று, நித்திய கருமங்களை முடித்து, வேதக்கொழுந்தாய் நின்றொளிரும் சிவலிங்கப்பெருமான் சந்நிதியிற் சென்று அஞ்சலித்து மனமுருகி இருகண்களினின்றும் ஆனந்த பாஷ்பஞ் சொரிய அஷ்டாங்க, பஞ்சாங்க, திரியாங்க நமஸ்காரஞ்செய்து தன்பெயர்த் தீர்த்தத்தால் அபிஷேகஞ் செய்து வழிபட்டு, மலர்கொண்டருச்சித்து, நாற்றிசையிலும் சூரியனை நோக்கும்படித் தன் எண் கண்ணையும் பரவச்செய்து, தனதைம்புலக்குறும் பகற்றி, ஆயிரமாண்டு அருந்தவம்புரிந்து, காற்றையே யுணவா

கக்கொண்டு ஐம்பதத்தையும் செபித்துக் காமாதி அறு வகைக் குற்றங்களையும் அடக்கி ஆராதனை புரிந்து,

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கோவே போற்றி யாதிமறைக் கொழுந்தே
போற்றி யருள்குழைக்குங்
காவே போற்றி மெய்ஞ்ஞானக் கண்ணே
போற்றி யென்னிடும்பை
மாவே தனைச்சோர் மருந்தாகி
மதிமா சகற்றி மறித்தாண்ட
தேவே போற்றி தோணிபுரச்
செல்வா போற்றி சிவபோற்றி.

பின்னல் மௌலிப் பெருமுனிவர் பெட்ப
மறையின் பொருளனைத்தும்
மன்னுங் குருவாய் வடவிழற்கீழ்
வதிந்து புகன்ற வியல்போற்றி
முன்ன மறையின் விரிவையெல்லா
முழங்குந் தவளக் கிண்கிணிக்காற்
கன்னல் மழலை மகவுரைப்பக்
காது கொடுத்த சீலபோற்றி.

என்று பலவுந் தோத்திரஞ்செய்யும் மலரோன் முன்னர் உமையொருபாகந் தெரிந்தோன்ற முக்கண் எம்பெருமான் முன்னெழுந்தருளி, வேண்டியது என்னவென, விதிமகன் கூறுவான். என்மனத்தகத்தில் நின்றிருவடிதான் அன்புடன் தங்க அருளுதல்வேண்டும்; படைத்தற்றொழிலுங் கிடைத்தல் வேண்டும்; நின்னன்பர்தங் குழுவோடு அணையவும் வேண்டும் எந்தையே யென்று பிரமதேவர் துதிக்க, எம்பெருமான் அவ்வரங்களெல்லாவற்றையுங் கொடுத்து இடபவாகன

ருடராய் எழுந்தருளிவந்த மூர்த்தி அந்தர்த்தானமாயி ஞர். கடவுள் மறைதலும் திருமிலை யழகியின் திருவடி பரவி சுவாமிக்கும் அம்மைக்கும் ஒரு பெருங்கோயில் பொன்சிகரத்தாற் பொற்றுறவமைத்து நாற்புறத்திலும் நன்மதில் விளங்கப் பிரமதீர்த்த முதலிய தீர்த்தங்களையும் உண்டாக்கி, நான்கு பக்கத்தும் தளவரிசை செய்து, மேலுலகம், கீழுலகம், அஷ்டதிசை, சப்தசாகரம், தாவரசங்கமம், இருபெருஞ் சுடர் எனையவும் தன்றிருக்கரத்தாற் படைத்துச் சிவலிங்கப் பெருமானுக்குச் சமீபித்ததர்கப் பஞ்சவிருக்ஷங்களுள் பாரிசாதத்தைப் பண்புடன் நாட்டிப் பரமன் முன் நடிக்கும் பொதுமகளிரையும், கஞ்சக்கருவி, மிடற்றுக் கருவி, நரப்புக்கருவி, தோற்கருவி, துளைக்கருவி இவைகளையியக்கும் இசைத்தொழிலாளரையும், திருமாலைகட்டுவோரையும், சிவவேடப்பொலிவினரையும், திருவிளக்கேற்றுவோரையும், திருமஞ்சன காரணரையும், இன்றியமையாதுள்ள மற்றும் சிவதர்மத்திருப்பணித்தொழிலாளரையும் படைத்துப் பூசைபுரிந்து வணங்கவும், பிரமதேவர் காணப் பெருமான் தோன்றி உனது பணியால் மனமகிழ்வுற்றோம். உன்னைபொப்பவர்கள் ஒருவருமில்லை யென்று, முற்காலத்தில் முன்னொரு பிரமர் படைத்த இத்தடத்தில் சித்திரைமாதச் சித்திரை நக்ஷத்திரத்தில் நன்றாய் மூழ்குவோர் ஞானத்தைப் பெற்று, உன்னையொழியாத உயர்ச்சியும் அடைவார். மனவொருமையோடு இந்நீரில் மூழ்கின் மலடிகளும் மகப்பே றடைகுவர்கள். 'இதன் சிறப்பை' முழுவதுஞ் சொல்ல நெடுநாட்செல்லுமாதலின் முன்னரே யுனக்கு

மொழிந்த ஐந்தெழுத்தை மனவன்பிலார்பாற்சொல்லா தொழிக. உன்கற்பநாள் வருங்கால் நம்மிடம் வருவாய் என்றருளி மூலலிங்கத்தில் மறைந்தருளினர்.

எல்லாந் தொலைந்த தொன்மைக்காலத்திலும் இத்தலம் தொலையாது பிரமனைப் படைத்துப் பின்னர், மற்றைப் பொருள்களைத் தரலால், இந்நகர்க்குப் பிரமபுரம் எனஅழியாத ஒருபேர் யாவரும் அறைகுவார். இப்பிரமேசரின் இனிய சந்நிதியில் தோன்றுமிதுதான் பிரமதீர்த்தமென எக்காலத்தும் விளங்கும் என்க. இப்பிரம புரத்தின்திருக்கதையினைப் பிரமபுரேசன் சந்நிதியில் நினைத்துச் சொன்னவர் எவரேனும் முத்தியை யடைந்தே சித்தராய் வாழ்வார். இந்தக் கடவுளின் எழில்பெறுமான்மியம் இனிமையாக் கேட்பார் பிரமதேவரின் உலகத்தில் கற்பநாள் காறும் வாழ்ந்து பின்னர் நற்குடிப்பிறந்து ஞானயுகத்தால் முன்னைவினையின் முளையினையகழ்ந்து மோக்ஷத்தையடைவார்.அருந்தவம் புரியுந் திருந்திய முனிவர்காள்! பிரமபுரத்தின் கதையினைப் பேசினேன் என்றார் சூதபுராணிகர்.

பிரமபுர வத்தியாயம்

முற்றிற்று.

---

நான்காவது

## திருவிழா வத்தியாயம்.

---

பிரமபுரத்தின் கதையை யுணர்ந்த முனிவர்களுக்குத் திருவிழாச் சிறப்பைச் சூதமுனிவர் சொல்லுவார்.

உண்மைநூலாராய்ந்து, அடியார்களின் அநுக்கிரகம் பெற்று நெடுநாள் விரத முதலியவற்றைச் செய்தவர்களே சிவசரிதை கேட்க வல்லுநராவார். சிவனருள் விளையாட்டை யன்போ டோதினோரும், மகிழ்ந்தாரும், அந்நூலை வைத்து அருச்சனைபுரிந்தாரும் அல்லவா? கடவுள்தம் அடிகளிற் கலந்து வாழ்வார். கிடைத்தற்கரிய மானுட சரீரம் கிடைத்தும் சிவகதையினைச் சற்று மறியாது, பசும்புல் நிலங்கழிந்து, மெய்தளர் பசியால் வெறுங் களர்நிலத்தில் சென்று, வருந்தும் பசுவைப்போல காமனது உலகத்திற், கலந்து கலங்குவார். மெய்த்தவமுனிவர்காள்! வானுலகம், நரகவுலகம், பூவுலகம் இவற்றுள் வாழ்கின்ற தாவர சங்கமவுயிர்த்தொகுதிகளுள் மனவன்போடு நல்வினை செய்தவர்கள் சொர்க்க லோகத்தை யடைந்து சுரரருள் பெறுகுவார். யாதொரு துன்பத்தையும் அறியமாட்டார். அரம்பை முதலிய மாதர்களுடன் அடைதற்கரிய அருஞ்சுகத் தழுந்துவார். அந்தப் பெண்களின் அரிய வாயமிர்தம் உம்பர்தமமுதம் இடைவிடாதுண்பார். கற்பகநீழலிற் கலந்தினிதிருந்து, இனிய வாத்தியத்தால் இருசெவி மகிழ நாள்பல சென்றபின் மேலுலகிருப்பார்.

இனித்தீவினை புரிவோர் செய்கையுங் கூறுவாம்:—காலதூதுவர்கள் கடுஞ்சொற், புகன்று அக்கினிக் கலப்பையால் அழுந்தத் தாக்கி, அக்கினிவாளாலறுத்து, அலைத்து, அடித்து, சுடுமணல் கீழும் சுடுநீர் மேலுமாகச் சகிக்க முடியாமற் சொரிந்தும், அக்கினி யூசிகளை யடியிற் சொருகியும், இத்தகைத் துன்பம்

அளப்பிலசெய்து வருத்தியே சிவனடிவணங்காத வரையும், அன்பரைக்கண்டா லடிபணியாரையும், கால் கை துணித்துக் கவலையுறும்படி செய்வார். சிவகதையினை விரும்பிக் கேட்காத பாதகர்களைத் தலையும் காதும் வெட்டுண்ண நூறுகோடி இடியைப்போலக் காலதூதர்கள் அடித்து வருத்துவார். சிவனடியாரை வருத்துபவரிடத்து யாவராயினும் சிநேகிப்பார் படும் துயரம் இவ்வளவினது என எடுத்துரைக்க, எம்மால் இயலாது. நரகத்துன்பத்தை யநுபவிப்போர் செய்கை யிவையாம்.

இத்தீவினைச் சரீரத்தை நீக்கி நல்வினை வயத்தால் ஞானவுடல் எய்தினும் புண்ணியச் சிவதலம் பொருந்த உதித்தல் யாவர்க்கும் அரிதாம். அதினும் வேடர் முதலாம் இழிகுலம் நீங்கி யுயர்குலத்துதித்தல் அரிதாம். அதினும் பெண்ணுரு அகற்றி ஆணுருப்பெறுதல் யாவினும் அரிதாம். பெறினும் யாதொரு பழுதுமில்லாது நல்லுடல் பெற்று ஞானமடைந்து தீவினையழித்து நல்வினை புரிந்து யாக்கை நிலையாமையைக் கண்டுணர்ந்து அரனடிக் கலத்தலு மரிதாம்.

யாக்கை நிலையாமையின் இலக்கணங்களைச் சிறிது சுருக்கிச்சொல்வாம். கருப்பையினின்றும் பிறந்தவுடன் இச்சரீரமானது மின்னலையும் நீர்க்குமிழியையும் போல அழியினும் அழியும்; அற்றேல், வெண்ணெயைப்போல உருத்திரண்டு பிறக்கினும் பிறக்கும்; அதுவே வளர்ந்த முதுகினையுடைய கூர்மவடிவத்தையொத்தடைந்து உடனே நீங்கினும் நீங்கும்; இன்றேல், ஏழுவகைத் தாதுவும் நிறையும் சமயத்து ஒழியினும்

ஒழியும்; அன்றேல், கொப்பூழ்த்துளையில் கொடிசுற்றி
சுரத்தன்மை பொருந்தி தோன்றினும் தோன்றும்;
பூரண சந்திரன்போல் சில நாள் தங்கித் தேய்பிறை
போலத் தேயினும் தேயும். அல்லையேல், சில நாள்
வாழ்ந்து இயன்றன சற்பாத்திரருக்குக் கொடுத்துக்
கழியினும் கழியும்; தாமரைமலர்போல் மலர்ந்தும்
வாடியும் முரியினும் முரியும்; பெரியோர்கள்பாற் கேள்
விஞானம்பெற்று நற்றுறைசென்று நாரிய சிரங்கமாயி
னும் மாயும்; இம்மட்டோ! நற்றிருமகளிர் பொற்புய
வின்பம் நெடுநாள் அநுபவித்து, உறவினரநேகர்
உளமழுன்றலற, கூற்றுவனாகக் குறையினுங் குறை
யும்; மழலைச் சிறுசொற்பயங்கிபே மூப்புற பிணிப்புலி
வருத்தப் பேதையருகி ஆருயிர் நீங்கச் சுடுகாடெய்த
அணையினும் அணையும்.

இவ்விலக்கணங்களை ஆராய்ந்தறிந்தவர் ஒருகணப்
பொழுதாயினும் வீணாகக் கழிப்பரோ? சிவபெருமா
னுடைய கீர்த்தியைச் சொல்லவும் கேட்கவும்விருப்பங்
கொள்ளும் தவப்பேறினும் உயிர்க்குறுதி வேறு முண்
டோ? அத்தவப்பேற்றால் யாதொரு களங்கமு மற்று
நல்ல பசுவின் வயிற்றில் சொல்லுதற்கரிய பல நூறு
காலங் கிடந்தாற் பிராமணனாவான். மறையவன்
எல்லாராலும் வணங்கத்தக்க குலத்திலே யுதித்தானே
னும் பரமன் சரிதத்தைக் கேளாதொழிவனேல் அவ
னுடல் மரப்பாவைக்குச் சமமாகும். அவன் முகத்
தைப் பார்த்தலா லுண்டாகுந் தீவினையின் பரிகார
மாக மதிநுட்ப வல்லோர் சூரியன், அக்கினி, புண்ணிய
தீர்த்தம், மறைநூ லுணர்ந்தோர், பசுக்கள், ரிஷபம்

முதலியவர்களைத் தரிசிப்பார்கள். பரிசுத்த ஜனனத்தில் பரமசிவனின் புகழினைக் கேட்டலும், அவரை யாராதித்தலும், சிவனடியவரைத் துதித்தலு மியலாதேல், அடையும் உறுதி யாது? இச்சரிதத்தைக் கேட்க விரும்பும் உம்மைப்போல இவ்வுலகத்தும் மேலுலகத்தும் யாவருளர்?

அச் சவுனகாதி முனிவர்கள் கேட்க, விநாயகரைக்கொண்டு ஐந்தாம் வேதமாகிய பாரத கதையை மகமேருவில் எழுதுவித்த அம்மறை வாசக கர்த்தராகிய வியாச மகாமுனிவரின் திருவடி வணங்கிய சூத புராணிகர், சந்திர சடாதர ராகிய பிரமேசருக்குப் பிரமதேவர் செய்த திருவிழாச் சிறப்பைச் சொல்லிய வாறே கூறத் தொடங்குகின்றனர்.

சந்திரசேகரர் மகிழச் சித்திரை மாதத்தில் பூர்வ பக்ஷத்தில் மூன்றுலகத்தவரு மறிய யானையின் முதுகின்மேல் முரசப்பறையைக்கொண்டு அந்நகரமெங்கும் திருவிழா மங்களவொலி யொலிப்பித்தலும், பிராமணர் முதலிய நான்கு வருணத்தினரும் உருத்திரர் உலகத்தைப்போல மகிழ்ச்சி கொண்டாராய் அரிய மனைகள், மாடவீதிகள் தோறும் அலங்காரம் புரிவாராய்க் குப்பைகளைக் களைந்து திருவலகால் தூசிபோக்கிப் புழுதி யடங்கப் பனிநீர் தெளித்து, மாலைகள் தொங்கவிட்டுப் பூரண கும்பங்கள் நிறுத்தி, தூபதீபங்களேற்றி வைத்துச் செங்கோலம் மாக்கோலம் முதலியவைகளிட்டு, இப் பிரமபுரத்தில் துவஜாரோகணம் என்றைக்கு என்பார்க்குச் சித்திரை மாதத்தில் மிருகசீரிஷ நக்ஷத்

திரத்தில் என்று சொல்லவும், உவகை மேற்கொண்டு,
வேண்டுநிதி யளித்து, அத்தினம் வரும் வரையும் ஒரு
நாளை ஒரு யுகம்போற் கழிப்பாரும், அவ்விழாவணி
காணக் கண்களும், மார்பும் துடிக்கின்றன என்
பாரும், வெண் சுதையினால் சுவர் தீற்றுவாரும், தோர
ணங்கள் நிரல்நிரையாய்த் தூங்க விடுவாரும், நிறை
குடமும், பூரண கும்பமும், பாலிகையும் விதம் வித
மாய் அமைப்பாரும், குங்குமச் சாந்தால் திண்ணைகள்
மெழுகி அலங்கரிப்பாரும், சுவர்களில் பற்பல சித்திரங்
கள் வகைவகையாய் எழுதுவாரும், வீதிகளில் சலம்
தெளிப்பாரும், பந்தரமைத்துப் பழக்குலைகளும், கதலி
மரங்களுங் கட்டி, கமுகங் குலைகளும் வைப்பாரும்,
சுவர்களில் நிலைக்கண்ணாடி பதிப்பாரும், பொற்பாவை
விளக்கைத் திண்ணைகளில் பொற்புற நிறுத்துவாரும்,
வேதப் பொருள் உரைக்கும் வேதியர் இருக்கைகளும்,
வேதாத்தியயனப் பாடசாலைகளும் பொற் பீடிகைக
ளுஞ் சமைப்பாரும், பொற்சுண்ணம் மரைத்துப்
பூசுவாரும், வாரி இறைப்பாரும், பூமாலை யசையக்
கட்டுவாரும், முத்துமாலைகள் மாட்டுவாரும், யானை
முகத்தில் நெற்றிப்பட்ட மணிவாரும், குதிரைக் கதி
யின் குணந்தெரிப்பாரும், தேரை மலைபோலச் சிங்
காரிப்பாரும், பொற் பாத்திரத்தில் விளக்கேந்துவா
ரும், கலவைச் சாந்தும், பச்சைக் கற்பூரமும் மணக்கப்
பொற்கலமேந்தி, குயிலிசைபாடி யாழிசையேற்றி மங்
கலம் பாடுவாரும், பிராமணர்களுக்கு அறுசுவையோடு
நால்வகை உண்டியும் இனி தூட்டுவாருமாய் ஒருவரை
விட ஒருவர் உவகைக் கடலில் அழுந்துவா ராயினர்.

இவ்வாறு எங்குங் களி தூங்க, கமலாசனக் கடவுள் சுப்பிரபேதச் சைவாகம விதிவழியே செய்வான்றொடங்கி, அரதனத்தானுஞ், செம்பொன்னானும் மணி மண்டபமொன்று செய்வித்தார். குலைகளோடு கூடிய கமுகங்கள் நிறுத்தி, செவ்வாழை முதலியவைகளைத் தாற்றுடன் நாட்டி, முத்து வடங்களை முறையாய்த் தூக்கி, பஞ்சதருக்களையும் நாற்றிசையும் நடுவும் வைத்து, நிலைக்கண்ணாடிகளை நிரையே பதித்துச் சிறு சாளரங்களைச் செவ்வனே யமைத்து, அரும்பிய பாலிகைகளை யழகுபெறப் பணித்து, சங்கநிதி பதுமநிதிகளைப் பொருத்திச் செங்கோலங்களைச் செவ்வையாய்த் தீட்டுவித்து; வெண் கோலங்களை விதம் விதமாய்ப் போடுவித்து, அஷ்ட மங்கலங்களும் அமையச் செய்து பூமாலைகளைப் பொருந்தக் கட்டி, விளைய அணியும் எழில் பொலிய, இனிய நல்விழாவை இறைஞ்சும் வண்ணம யாவரும் எழுந்தார்கள். பதினொரு கோடி உருத்திரக் குழாங்கள் மகா விஷ்ணு, இந்திரன் முதலாம் எண்டிசைத் தலைவர், மருத்துவர்கள், சூரிய சந்திரர், சித்தர், இயக்கர், அஷ்டவசுக்கள், நாகர்கள், அரமாதர்கள், வேதாளர், நிருதர், கந்தருவர்கள், வித்தியாதரர்கள் முதலிய விண்ணவர்களும், நாரதர், ஜனகர், வியாசர், பதஞ்சலி வியாக்கிரபாதர்கள், அகத்தியர் முதலிய அருந்தவ முனிவர்களும், வருஷாயனம் முதலிய காலக் கடவுளர்களும் தங்கள் தங்கள் ஊர்தி மேற் கொண்டாராய் பிரமபுரநகரின் வீதியை யடைந்து, வேதியன் செய்யும் விழாவணி காணா நின்றார்கள். பிரமபுரத்தில் வாழ்கின்ற பெரிய சிவனடியார்களும்,

மேற் குறித்த தேவர், முனிவர்களும் சூழ, பிரமதேவர் உட்சென்று, தோணியப்ப துணையடி துதித்து, எம்மடிகாள்! அடியேனுல் செய்யப்படும் திருவிழாவை அன்புடன் ஏற்றுக்கொள்ளுதி! என விண்ணப்பித்து, அநுக்கிரகம் பெற்று, விக்கினேசுவர பூசை முதலியன விதியாற் புரிந்து, வீதிகள்தோறும் சுத்த சாந்தி செய்து தனக்கே யுரிய தலைநாளாகிய மிருகசீரிட நக்ஷத்திரத்தில் பற்பல சமயத் துறைகளினும் ஏற்ற முடையது பாசுபத சமயமென்றும், சிவனடியார் மாட்டு அடையப்பெறுதலை மும்மலமென்றும், அடியார் களின் பவப்பிணிக்கோர் அருமருந்து இத்தீர்த்த மென்றும் சொல்லி, யாவர்க்கும் முத்திகொடுக்கும் பிர மேசருடைய ரிஷபத் துவஜாரோகணஞ் செய்து மங்கல வாத்தியங்களெங்கும் ஒலிக்க, பூதானம், கோ தானம், சொர்ணதான முதலியவைகளைச் செய்து யா வர்க்கும் மகிழ்வடையச் செய்தனர்.

விநாயகக்கடவுள், சுப்பிரமணியக் கடவுள் மூர்த் தங்களை அலங்காரத்துடன் எழுந்தருளப்பண்ணி, சுவாமி அம்பிகை சந்நிதி முன் கொண்டுவந்து சிறுத்தி வாத்தியங்கள் ஒலிக்க, அரம்பையர்கள் நடிக்க, நந்தி தேவர் கைப்பிரம்பு கொண்டு வழிபாடு செய்ய, இந் திரன் பூமாரி பொழிய, வருணன் பனிநீர்மழை பெய்ய, சூரிய சந்திரர் இருபக்கமும் வர, அக்கினி தூபம் கொடுக்க, அளகையதிபதி (குபேரன்) பொன் மலர்தூவ, முனிவர்கள் வாழ்த்த, நதிவடிவாம் நங்கை யர்கள் சாமர மிரட்ட; மன்மதன் பூமாலைதர, ஆதிசே ஷன் அரதனச் சுடர்கொண் டரும்பணிசெய்ய, குண்

டோதரன் குடைதாங்க, பிரமதேவர் சிவபெருமான் திருவருள்வழி நிற்க, கருடக்கொடி, அன்னக்கொடி, இடிக்கொடி, மீனக்கொடி இவை சேவித்துப் பின்வர, இடபக்கொடி நடுநாயகமாக நண்ண, நாரதமாமுனிவர் யாழிசை பயிற்ற, படகம், பம்பை, மொந்தை, துடி, உடுக்கை, துந்துபி, மத்தளம் முதலிய வாத்தியங்கள் முழங்க, பிரமேசர் திருநிலை நாயகி சமேதராய் வந்தாரென்று மயிற் பீலிகளசைய, மகா விஷ்ணுவின் கைம் மலர்த்துணைமேற் றமது காமலர் சேர்த்தி, விண்ணவர் தொழுதிட, விமானத்தேறி, முனிவர்கள் கண்கள் மலர்ந்து புஷ்பாஞ்சலிசெய்து துதிக்க, எம்பெருமான் வீதிவலம் வருவாராயினர். அடியார்களெல்லாரும் சோனைமேகம்போல் ஆனந்த பாஷ்பம் பொழிய நின்று வாழ்த்த செந்தமிழ்களாலும், வடமொழி மாலைகளாலும் வித்தியாவிற்பன்னர்கள் துதிக்க, நம்மை ஆண்டவராகிய பிரமேசமூர்த்தி ஆலயப்பிரவேசமாயினார்.

இரண்டாநாட் காலை விழாவும், அன்றிரவு பூதவாகனத்தின்மேல் எழுந்தருளும் பொலிவும், முதல் நாள் நடந்த வைபவத்துடன் நடக்க, மூன்றாநாட் காலை விழாவும், இரவு பரிதியஞ்சுடர்மேல் எழுந்தருளும் பவனியும், நான்காநாள் காலைவிழாவும், இரவு இரத்தின விமானத்தில் எழுந்தருளுங் காட்சியும் இனிமையாக நடத்தினார்கள்.

ஐந்தாநாட் காலைவிழாவும், இரவு திருநிலைநாயகி சமேதராக இடபவாகனத்தில் எழுந்தருளும் எத்தருங் காட்சியும், ஆறாநாட் காலைவிழாவும், இரவு யானைவா

கனரோகணை தெரிசனமும் கொடுத்தருளி, ஏழாநாட் காலைவிழாவும், இரவு கைலாயவாகனத் திவர்ந்தருளும் மாட்சியும், எட்டாநாட் காலைவிழாவும், இரவு குதிரை வாகனத்தெழுந்தருளும் சிறப்பும், பிக்ஷாடன அருந் திருவுருவப் பெருமான் தரிசனமும் காட்டியருளி, ஒன் பதாநாட் காலை ரதாரோகணராய், பார்வதி சமேதராய் வீற்றிருந்து, வீதிநான்கும் வலம்வந்தருளி, அன்பர் கட்குத் தெரிசனமளித்து, பத்தாநாள் பிரமதேவர் கண்களிக்கப் பிரமதீர்த்தத்தில் தீர்த்தங் கொடுத்தரு ளினர்.

ஞானியர்களும் விண்ணவர்களும் அப்பொழுது அப்பிரமதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து மண்டபத் தின்கண் பதினொன்றாநாள் பிரமேசரையும், தோணி யப்பரையும் வணங்கித் திருவருள்பெற்று, சர்ப்பகங் கணமும், கமண்டலமும், பூணுநூலும், கையில் தண்டா யுதமும், புழுகணிந்த திருத்தோளும், கஞ்சுகந் தரி த்த திருவடிவுமுடைய சட்டநாத சுவாமியின் திரு வடிகளைத்தொழுது; விடைபெற்றுக்கொண்டு தங்கள் தங்கள் வாசஸ்தானமடைந்தார்கள்.

பின்னர் பற்பலவிதமான திருப்பணிகளையும் செய்துவரும் பிரமதேவரைப் பார்த்து, இனி உன்னு டைய சத்தியலோகத்தை யடைந்து படைத்தற்றொழி லைப் புரிவாய் என்று தோணியப்பர் ஆஞ்ஞாபிக்க, அவ் வாறே செய்வாராயினர். முனிவர்காள்! பிரமபுரே சன் திருவிழாச்சிறப்பு இவ்வாறாகுமெனச் சூதபுரா ணிகர் கூறியருளினர்.

திருவிழா வத்தியாயம்

முற்றிற்று.

ஐந்தாவது

## பூதவிமோசன வத்தியாயம்.

பிரமதேவரானவர் பேரன்போடு செய்த திருவிழாச்சிறப்பைச் சுருக்கிச் சொன்னும், ஒரு அரசன் பூதவுருவத்தின் நீங்கின அத்தியாயத்தையும் சொல்கின்றும்.

மாளவ தேசத்தில் சந்திர வம்சத்துக்கு ஒரு மறுவாகப் பிறந்த விரோதன் என்னும் வேந்தன் என்பான் சந்திரனை விழுங்கும் அரவைப்போல் தன்குல கீர்த்தியெல்லாம் விழுங்குகின்ற தீயனத்தினனும், பகலெல்லாம் சூதாடற் றொழிலும், இரவெல்லாம் பரத்தையர் போகங்களும் கொண்டானும், தருமமாகிய காட்டைக் களைந்து, தீவினையாகிய விதையை விதைத்து, அன்பாகிய களையை யறுத்து, சினமாகிய ஜலத்தை யூட்டி, சிற்றின மாகிய வேலியைக் கோலி, பாவமாகிய பயனை யடைகின்றவனும், உயிர்களுக் கெல்லாம் இயமனை ஒத்தவனும், விலங்குபறவைகட்குச் சுடுகாடாகிய உதரத்தை யுடையனும், கொடுங் கோலால் பஞ்சமாபாதகங்களையுஞ் செய்து, தீவினையா லீட்டிய பொருளெல்லாவற்றையும் பொதுமகளிர் விஷயத்திற் செலவிடுபவனும், வேதாகம விதிப்படி செய்யும் வேதியர்களின் வேள்வி யவியும்படி துன்புறுத்தி, அவர்கள் வயிறு அக்கினி சுவாலிக்கும்படி செய்பவனும், வேற்றரசர்கள் புறங் கூறும்படி கள், காமம், கொலை, புலால் இந்நான்கினையும் ஒருங்கு சேர, பிறந்த புத்தி

ரனைப்போல் வளர்க்கின்றவனும், அவ்வரசன் நீதி செலுத்துவான். மேகங்களால் போற்றப் படுகின்ற சிறு புன்செய்ப்பயிர்களையும் யானையினிடத்தில் தேடிக் கொடுத்தால், அந்த யானையின் பசி நீங்கும். அந்த யானையே உண்ண விரும்பப் புகின், வேலியாற் சூழப் பட்டபயிராயினும்வாலினாலும் கால்களினாலும் துவைக் கப்பட்டு வாயிற் புகுதற்கும் உபயோக மின்றி அழிந்து போகும். அதுபோல அரசன் ஆளுகைக்குட்பட்ட தேச முழுவதும் பொலிவிழந்தது. நாயகனை யிழந்த மங்கையர்தங் கொங்கைபோலப் பொலிவு குன்றி மழை வறப்ப, பூமியெங்கும் கலி மிக, கரையிழந்த தடாகம்போல் பெருமையழியப் பெற்று விளங்கினன்.

அவ் விரோத வேந்த னென்பான் தீப்பிணி வருத்த ஆயுள் குறைந்து, செல்வமும் அரசும் வேற்றரசர் கவர, இயம வேதனைக்குள் அகப்பட்டவனாய், நரகத் தில் நெடுநாள் துன்பம் மிகவும் அநுபவித்தவனாய்த் திரும்பவும், இராக்கதனாகவந்து பூமியில் பிறந்தான். அசுரனாய்ப் பிறந்ததும் பலமிருகங்களையும் தாழ்ந்த பள்ளங்களில் அமுக்கியும், அந்தணர்களின் ஆருயிர் கவர்ந்தும், பெண்கள்மேல் விருப்பம் வைத்தும், நா டோறும் கொலைத் தொழில் மிகுந்தும், அக்கொலைத் தொழிலால் இயமனினும் மேன்மை பெற்றும் முற்பிறப்பிற் செய்த சிறிது நல்வினையான் ஆங்கீர முனிவன் ஆச்சிரமத்திற் புகுந்து ஆங்கீரனை புண்ணு வான் வாய்மடுக்குங் கருணத்து, மறைந்து இவண் வந்த கள்வன் நீயார்? எங்களை வருத்தி உன்கொடும் பசிப்பிணி தணிக்க வந்தனையோ? இங்கு நில்லா

தேகுதி என்று ஆங்கீர முனிவர் சொல்ல, அதற்கு ஏருவது உன்உயிர், எடுப்பது என்வாய்; அல்லாமல் வீணைகப் பலவார்த்தைகள் சொல்வதால் என்ன பிரயோசனம்! என்னுடைய வடிவப்பொலிவெல்லாம் பிராமணர்களுடைய மாமிசப் பொலிவின்றெல்லவோ ஒளிராநின்றது? என்று பூதவுருக் கொண்டு உண்ணுவான் கைதூக்கி எதிர்நிற்க, முனிவர் கண்டு கையிலுள்ள கெண்டிகை நீரால் அவன்மேற் றெளித்து, அவன் பூர்வ ஜென்மத்தையும், குடிப்பிறப்பையும் கூறி, வஅவுணனே! இப்பூதவுருக் கொண்டே எங்குந் திரிகவெனக் கடுஞ்சாபமிட்டனர். அவ்வாறே பூதாகாரனாகி எங்குந் திரிந்து வருகின்றான்.

கண்டிகை நீர்த்துளி தெளித்த மாத்திரத்தில், பூதாகாரனை அவுணன் நல்லுணர்ச்சி பெற்று, எளிமையின் வந்த எமபெரும் முனிகாள்! உன்றனைப் பிழைத்த இப்பழி ஒழிப்பது எங்ஙனம் என்றே யிரங்கிடும் போதினில், ஐராவதத்தே யமரிந்திரனும், கருநிறவண்ணனுங் கலங்கிடச் சாபம்பெற்றன ரென்றால், பேதையா மிவனும் சிவனடியவர்பாற் செயற்கரும் பிழையால் கூளியுருக்கொண்டே குலைந்தனனென்பது இரும்பூதென்று இசைத்திடல் என்னே! இது இங்ஙனமாக, ஆங்கீரனும் அம்முனி அவ்வுருவம் நோக்கி வெம்பழி யிதுதான் விமலமாம் ஆற்றினை விளம்புவன்; அதனைக் கேண்மதியென்று, தென்றேயத்தே திகழ் சோணாட்டில் பொன்னியங்கீரால் பொலிவு பெற்றோங்கும் தோணியம் பழம்பதி தோற்றமும் கண்டு, தோணிநாயகரைத் துணைவியோடேத்தி, ஏலவே, தவ

ஞ்செய்யுங் காலவமுனிவரைச் சந்திரயாகம் பத்தியோ
டியற்றுஞ் சமய மறிந்தே தவனெதிர் நின்றால், முனிவ
ராகுதியால் மொழியு மிவ்வுருவும், பழவினையாவும்
பாறவே, பாம்பு சட்டையுரித்தே சார்வது போலச்
சுத்தனாகவே தோன்றுவை யென்றார். என்றலும்,
பூதம் இசைத்திடுங் காழி நன்னகரடைந்தே நான்
மறையோர்க்குள் நடுவாய் விளங்கும் நாயகமான கால
வநாதரை, இருகண்களினால் இசையவே பார்த்து,
மூவாயிரராம் முனிவர்கள் சூழத்தீர்த்தந் தெல்லாஞ்
செவ்வனேயாடி, வீதிவலம்வந்து, தோணிநாயகன்
றாள் போற்றியே, யாகம் பொருந்தச் செய்திடும் கா
லவ முனிவரைக் களிப்புறக்கண்டது. அக்காலத்துக்
காலவ மகாமுனிவர் அப்பூதத்தைக் கண்டவுடன் யா
கத்துக்கு இடையூறு செய்யுமோ என அஞ்சி, சங்கம
வடிவினராகிய பட்டைநாத சுவாமியின் சந்நிதானஞ்
சென்று, அவரை வணங்கி, பூதத்தால் வரும் துன்பத்
தினை அகற்றுவாயென்று துதிக்க, அவ் வடுகேசன்
அசைகின்ற செந்நஞ்சியும், அகோர முகமும், உடுக்
கையங்கையும், தெண்டபாணியும், கருஞ்சட்டையும்,
சர்ப்ப கங்கணமும், குழை கொளுவுஞ் செவியும், அழ
லவி ரொளியும், திரிநேத்திரமும், புழுகணி மேனியு
முடைய ஒரு பேருருக் கொண்டே வாத்தியங்கள்
ஒலிக்க, கந்தருவர்கள் பாட, சட்டநாதர் வந்தார்
என்று திருச்சின்ன மூத, அக்காலவரின் வேள்விக்கள
மடைந்துழி,

நேசசரணஞ்சரண முத்தியடி யார்க்குதவு
சித்தியர்வாண சரணம்

வாசசர ணஞ்சரண மாதியிடை யீறுதவிர்
மானசிவ ஞான சரணம்
தேசசர ணஞ்சரண யோகசன காதியர்
தெளிந்தகுரு நாத சரணம்
ஈசசர ணஞ்சரண மென்றுமுனி காலவனு
மேவரு மெழுந்து தொழுதார்.

காலவ முனிவர் இவ்வாறாகத் தோத்திரஞ் செய்துழி, சட்டநாதசுவாமி அம்முனிவரைப் பார்த்து, யாம் யாகம் முடியும் வரையும் இங்கு இருக்கின்றோம் என்றலும், அப்போது அம்முனிவர் அச்சட்டநாதரைப் பார்த்து, சுவாமீ! நாங்களஞ்சும்வண்ணம் பூதம் ஒன்று வந்து நிற்கின்றது என்று சொன்னவுடன், அப்பூதம் அம்முனிவர் எதிர் நின்று அடிகாள்! பிரமதேவரின் குமாரரால் வந்தடைந்த பழி பெற்றுள்ளேன்; அதன் வரவு என்னவெனில், யானோ மானுவதேயத்தில் சந்திரவம்சத்துப் பிறந்து, தீவினைக்கு ஆகரனாகி, விரோதன் என்னும் நாமத்தை யடைந்து ஆவி பிரிந்ததும், காலதூதர்கள் நிரயத்திற் கொண்டு போய்த் துன்புறுத்தவும், பின்னர் எஞ்சிய கர்மவிசேஷத்தால் இராக்கதவுருக் கொண்டு ஜீவகோடிகளை இம்சிக்குங் காலத்து, ஒரு முனிவரை உண்ணுவான் செல்ல, ஆங்கிரமுனிவர் இப்பூதவுருக் கொண்டே திரிவாயெனச் சபித்தலும், அதன்பின் நான் இரங்க, பிரமபுரத்தில் வேள்வி செய்யும் காலவமுனிவரிடம் சென்றால் இப்பழி நீங்குவையென அருள வந்தமையால் அநுக்கிரகஞ் செய்யும் எனப்பிரார்த்திக்க, அக்காலவ முனிவர் யாக அவிப்பாகத்தில் ஒரு சிறிது அளித்தலும், உண்டு அப்பூதவுரு நீங்கி ஞானவுரு வடைந்து நின்றது அப்

பூதம். ஆனபோது தேவேந்திரன் ஆஞ்ஞைப்படி சூரியப் பிரகாசமும் மழுங்கும்படியான பிரகாச முள்ள ஒரு தேர் வந்திட, சட்டநாதரையும், காலவ மகாமுனிவரையும் மனம் வாக்குக் காயங்களினாற் றொழுது, விரோத வரசன் அத்தேர்மீது ஆரோகணித்தவ னாய் சிவாநுபவம் பெற்று விட்டனன். பின்னர் அம் முனிவரும் அவ்வபிகேசன் றிருவருளால் யாகத்தை நிறைவேற்றி நின்றவுடன், நீ விரும்பியதைக் கேட்பா யென்று சட்டநாதர் சொல்ல, உம்முடைய திருவடி யின் கீழ் வாழ்கின்ற செல்வமே விரும்புகின்றே னல் லாமல் வேறொன்றும் இல்லையென்றார். அன்றியும். இப் பிரமபுரத்தின் பக்கத்தில் வாழ்கின்றவர்களுக்கும் பூதம், தரித்திரம், நோய், பிசாசம் முதலானவைக ளால் வருந் துன்பம் நீங்கவும், உம்முடைய திருவருட் செல்வம் எளிதில் அடையவும் அநுக்கிரகஞ் செய் வை யென வேண்ட, ஓம் என்று அளித்துத் தோ ணிச் சிகரத்தில் அந்தர்த்தான மாயினார் என்று, இவ்வாறு பூதவிமோசன வரலாற்றைச் சூதபுராணி கர் சொன்னவுடன் மாதவகணங்கள் மகிழ் வெய்தினார் கள்.

பூதவிமோசன வத்தியாயம்

முற்றிற்று.

---

# ஆறாவது

# ஸ்ரீகாளிபுர வத்தியாயம்.

இவ்வாறு பூத விமோசனத்தின் மாட்சிமையை நன்குணர்ந்த சௌனக முனிவரை நடுநாயகமாகக் கொண்ட முனிசிரேஷ்டர்கள் பௌராணி கோத்தமனாகிய சூதபுராணிகரைப் பார்த்து, எங்கள் குலதீபமே! பவப்பிணி நீக்கும் ஞானவைத்திய சிகாமணீ! தெவிட்டா வமுதினை செவிக்கருள் தேவே! என்றிவ்வாறு தோத்திரித்தவர்களாகி, இத்தோணிபுர நகர்க்குச் சீகாழியென்னுந்திருநாமம் வந்த வரலாற்றினைத் திருவாய் மலர்ந்தருளுக என்று பிரார்த்தித்தார்கள்.

அம்முனிவர்கள் வேண்டிக்கொண்ட கதையினைக் கூறுவான் றொடங்குகின்றார். பவக்கடல் புடைக்கும் படிறில் மாதவத்தீர்! முற்காலத்தில் தில்லைநகரின் எல்லை யமர்ந்த திருவுடையந்தணர்கள் செவ்விலை சூழ, பதஞ்சலிமுனியும், புலியடி முனியுந் தெரிசித்துய்ய, சிவகாமவல்லியின் திருநோக்கமரத் திருநடனஞ் செய்வான் எண்ணங் கொள்ளும்போது, காளியானவள் எழுந்து சிவபெருமான் றிருமுன்சென்று, பெருந்தகைமையினையுடைய தேவரீருக்கு இத்தொழில் சிறு நகைக்கிடமே யென்று கடவுளை இழித்தவளாய், மடவார்க்குரிமை நடனமேயன்றி, ஆடவர்க்கென்றும் கூடுமோ ஐய! உரைத்திடும் அங்கம், பிரத்தியங்கம், உபாங்கம் முதலாகிய நடனவிகற்ப மெல்லாவற்றினும் வல்லவனாகில், என்னுடன் நீயும் நடனமியற்ற நாடிவா

என்றாள். என்றலும், எம்பிரான் இசைந்து, அவைக் கணுள்ளீர்! அறிவீரென்று, வாணாசுரன்றான் குடமுழா வொலிக்க, புலிபாத பிருங்கிகள் பொலியவே துதிக்க, பிரமதேவர் தாளம் போட, மகாவிட்டுணு உடுக்கை யடிக்க, சரசுவதி வீணைவாசிக்க, சூரியசந்திரர் புள்ளாங் குழல்பாட, நந்திதேவர் மத்தளமடிக்க, முனிவர்கள் வேதபாராயணஞ்செய்ய, மற்றைத் தேவர்களும் முனி வர்களும் மற்றை வாத்தியங்களை யொலிக்க, பிரவருத்தம் முதலாகிய நடனவிகற்பங்களை உணர்ந்து நடனஞ் செய்கின்ற கடவுட்கெதிரே, காளியும் அவ்வாறே பல நாள் செய்தல்கண்டு நடராஜப்பெருமான் திருவுளத்து ஓரெண்ணங்கொண்டார். வருமாறு:—

கனகசபைக்கு நடுஸ்தானத்தில் நடனஞ்செய்யா நின்ற எம்பெருமானது திருமேனிப்பொலிவானது ஊழிகாலத்தில் அநேககோடி கிரணங்களோடு உதய கிரியில் தோன்றுகின்ற கோடிசூரியர்களை யொத்து விளங்கும். முயலகனுடைய முதுகு நெளியத்திருவடி யூன்றலால் ஆதிசேடன் சிரசும் நசுங்க, மலைக் குழாங் கள் சுழல, பூமிகுலுங்க, திருக்கரமலர்கள் சென்று அண்டகூடத்தை யளாவ, மார்பிலுள்ள உத்தரீய மானது மகாமேருமலைமேற் படி மருவிபோலசைய, மகரகுண்டலங்கள் பிரகாசிக்க, கங்காதேவி விளையாடு கின்ற சடைத்தொகுதிகள் அஷ்டதிக்கையும்மறைக்க, வாசுகியாற் பிணிக்கப்பட்ட மந்தரகிரியைப் போல வாகுவலயமாட, ஒரு பாதத்தைப் பூமியிலே பொருத்தி, மற்றொருபாதத்தை வானுலகத்தையளாவும்படி விட்டு நடனஞ் செய்தார்.

இத்தன்மையாக ஊர்த்த தாண்டவஞ் செய்தலால் ஏழுலகங்களும் மகமேருவாதி மலைகளு மசையக் கண்ட காளிதேவியானவள் வெட்கமடைந்து தலைகவிழ்ந்து நிற்க, கண்ட அருந்தவ முனிவர்களுந் தேவர்களும் எம்பெருமானோடு நடனஞ்செய்வேனென்று சபதங்கூறிய நீ அக்கினிச்சபையினடுவில் வெண்ணெய்ப்பாவை யாடுகின்ற தன்மைபோலவலிமை குன்றித் தோற்றனை யன்றே! ஏ காளி! எம்பெருமானுக்கு நீ தவறு செய்தனை! ஆதலால் குற்றமில்லாத உன்றன் மேனியும் கறுக்க, உன்றன்வெற்றியும் கறுத்தது; விஷத்தைக் காலுகின்ற பாம்பானது பிறருக்கு நடுக்கத்தைக் கொடுக்குஞ் சினந்தவிர்தலின்றி, ஞானம் வருவதும், கற்றோணி கொண்டு கடல்தாவுவதும், மனமொருப்படாமல் மாண்கதிபெறுவதும், அதிதியர்க்கு ஊட்டாது இல்லறத்தில் வாழ்வதும், வேதப் பயில்வின்றி வினை முடிபறிவதும், சந்திரசேகரனோடு தனிநடமாடுவேனென்றுசபதங்கூறித் தானிழுக்குற்றதும் குற்றமாகுமே யன்றிக் குணமாய் என்றைக்காவது விளங்குமோ? "நுண்ணறிவுடைய நூலொடு பழகினும், பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்தே;" ஆதலால், ஏ பெண்மணி! நீ ஆங்காரத்தால் சிவபெருமானிடம் குற்றஞ்செய்தனை! ஆகையால் அக்குற்றத்தை அவனருள் கொண்டே யகற்றுவை? நீரின் கீழுறுஞ் சேற்றினைக் கழுவல் நீரினாலன்றோ?என்று இவ்வாறு கூறியதை முழுதொருங்குணர்ந்த மோடியு மறிந்து, தீயேனிடத்தில் சிவனருள் புரிவனோ என்றுஐயுற்று இரங்குவதைக் கண்ட துணையிலாமூர்த்தி துணைவியை நோக்கி, அஞ்

சேலென்றே அபயங்காட்டி, பாவத்தொகுதி நின் பக்க லில் மருவும், அனையது அகற்ற வினையமொன்றருள்கு வேன்; என்னெனின், பொற்றிருத்தோணிப் புண்ணி யப்பதியில் எம்பதம் வணங்குவான் ஏகுவாயென மோடியும் நன்றென்று, ஓடி, அப்பதிபோய், பொன்னி யாற்றினில் கன்னியுமூழ்கி, நாற்கோபுரத்தையும் நன் றாய்த் தொழுலால், இடரெலா நீங்கி யின்ப மடைந்து, வண்டலைவாவிகள், கொண்டலை மேல் கொளும் தண்டலை பலவும் கண்டு கண்களிகூர்ந்து, இறுகிடை மகளிர்கள் மறுகிட லெம்வரும் ஆலயத்துள்ளே நீளி தான் புகுந்து, ஐயன் மூழ்கும் அயன்றடந் தமூழ்கி, விதியின் நியமமும் துதியொடு புரிந்து, வெண்ணீற ணிந்து, கண்ணீர் சொரிய, உழுவலன்பினிற் கழுமல நாதன் துங்கமாகுஞ் சிவலிங்கங்கண்டு, திருமஞ்சனத் தால் தேவனையாட்டி, பூசைகள் முடித்து, நேசமாய் வலம் வந்து, தோணிநாயகனை அம்மையை யர்ச்சித்து, இட்டம் நிறையச் சட்டநாதன்பால் சென்று வணங்கி, மேற்றிசை சேர்ந்து, சுத்த தீர்த்தடாகம் பத்தியிற் படைத்து, மூழ்கிப் பாங்கரில் முழுச் சிவலிங்கம் தாபி த்து, அங்குறும் தீர்த்தத்தால் அபிஷேகம் புரிந்து, தோத்திரம் பண்ணிச் சுகமாய் நிற்கவே, இடபவாகன ராய் எம்மான் வந்து நிற்றலும், காளிதான் பொற்றிரு வடிகளில் வீழ்ந்து வணங்கி,

மறையோ னறியா தருவரையாய் வானங்கடந்து மேனிவந்து
இறைவா னரக்கி நறைமாலை நீட்டக்குனிந்த வியல்போற்றி
நறைமா மலர்க்கோ னிறைமாற னகையா ருருவம் புகையூட்டிக்
கறைநீ ரிரதி மனங்களிப்பக் காத்த கருணைப் புகழ்போற்றி.

வேணி முடித்த பெருந்தவத்து முனிக்கார் தமக்கு மிக்கான
காணி வணத்தி லரனுருவங் காட்டி நடந்த கதிபோற்றி
யாண மலிதாய் வரும்வழிபார்த் தழுதகுலிக் கன்னையெனப்
பேணி யெழிலார் பெண்ணுருவம் பெற்று நடந்த நெறிபோற்றி.

எண்சாற் பறவை யுருக்கொடுமா னிடவா ளரியி னிசுறடிந்து
தண்பூமடந்தை மங்கலநாண் டகையா லளித்த நகைபோற்றி
பண்பா வலர்சூழ் மணிமன்றிற் பரமா வுனது திருமுன்னர்ப்
பெண்பே தைமையா லியானிழைத்த பிழையைப் பொறுக்கு
மருள்போற்றி.

இவ்வாறு தோத்திரித்து நின்ற மாதரைக்கண்ட பரமன் சற்றேனும் மனம் வருந்தாதே! உன்னைத் தொடர்ந்த சிவநிந்தை மாபாதகவினையும் ஒழிந்தன. உன் பெயரால் இந்நகர்க்கு எஞ்ஞான்றும் பெயர் விளங்கக்கடவது. நின்னால் வழிபடப்பட்ட இச்சிவலிங்கமும் நின்னால் தாபிக்கப்பட்ட இத்தடாகமும் நின்பெயரால பொலிந்தோங்குக. இத்தடாகத்தில் மூழ்கினவர்கள் செய்த அதிபாதகம் யாவும் அக்கணமே ஒழிந்திடும். சூரியன்முன் பனிபோல் தொலைந்திடும். விடியற்காலையில் விளங்கும் உன் பெயரால் இப்பதிதன்னை முக்காற் பகர்ந்தால், வினைபல போக்கி நம் அருள் பெறுவார். அமாவாசைத் தினமன்று இத்தீர்த்தத்தில் மூழ்கிப் பிதிர்க்கடன்களை முடித்தவர்கள் இருவினைப்பந்தம் எளிதிற் போக்குவர். கார்த்திகைத் திங்கள் கதிரோன்வாரம் மூழ்குவோரிடத்தில் மும்மலம் நெருங்கா. இந்நீரில் மூழ்குவோர் அழுக்குகள் மற்றொருவர்மேற் படினும் அம் மும்மலமகல்வது நிச்சயம். இங்ஙனம் பலவரங்களைக்கொடுத்து எம்பெரு

மான் மறைந்தருளக் காளிமாதேவியும் கனக சபையை அடைந்தாள்.

காளிவணங்கலாற் காளிபுரம் என இந்நகர்க்கு ஒரு பேர் எய்தியது. அன்றி, காளிதன் என்னும் கடு அரா என்று வணங்கலாலும், காளிபுரமென மற்றொரு வகையிற் சொற்றிடலுண்டு. அருந்தவமுனிவர்காள்! அக்கதை முற்றும் இக்கணம் உரைப்பேன். கேண்மின்! கேண்மின்!! கேண்மின்!!! கேண்மின்!!!!

காசிபன் மனைவியாம் வினதையின் காதலன் தன்னிகர்வலியால் பன்னகக்குழாங்கள் பலவற்றையுண்டு பசிப்பிணி போக்கி, நாள் பலகழிக்க, காளிதன் என்பான் கருடனை நோக்கிக் கழறுவான். மற்றையவர் போற் சற்றும் நீ எண்ணல்! எக்காரணத்தால் என்னை நீ உண்பாய்! என்றே கூறி, இசையாதொழிய், பன்னகவைரியும் பன்னகம் அதனொடு போரினைச் செய்ய, போர்வலி குன்றிய காளித அரவோன் எளனமடைந்து எங்கேயே சென்று யமுனைத்துறையில் ஓர் மடுவில் மறைந்தான். கண்ணனங்கொருநாள் கொன்றையங் குழலினால், இசையினைப்பாடிப் பசுநிரை மேய்க்க, யமுனை நதியைப்பசுக்கள் கண்டு, கன்றுகளொடும் போய் அந்நீரை உண்டவுடன் உயிர்போய்க்கிடக்க, கண்ணனறிந்தே, தண்ணீர் இறங்கலும், காளிதன் வந்து காலினிற் சுற்றியது. அப்போது மாதவனென்பான் மகிமாசத்தியால் பெருருக்கொள்ள, பிழையினைச்செய்த போரரா எதிரில் நின்றுழி, அணிமாசித்தியால் அருங்குறளுருக்கொண்டு அரவின்வால் பிடித்தேறிப் படத்தினை மிதித்து அதன் மேலே மெல்லடியூன்றி, பவுரிக்கூத்தாடி நின்றான் கண்

MAHAMAHOPADHYAYA
Dr. U. V. SWAMINATHA IYER LIBRARY

ணன். அக்காளிதனும் மெலிந்து என்னை நீ விடுதி. அறியாமற் பிழை செய்தனன். நான் செய்த புண்ணியத்தால் உம்முடைய திருவடி சுமக்கப் பெற்றேன். உம்மை இன்னாரென்றறிந்தேன். உம்மைச் சுமக்கும் கருடனால் வலியிழந்த நான் இப்பொழுது உம்முடைய திருவடிசுமக்கச் சகிப்பேனோ? என்று இரந்து கூறியதைச் செவிமடுத்த மாதவனும் இழிந்து அவன் மனக்கருத்தறிந்து கருடனால் வலிகுன்றியதையும், காலினை விட்டு ஈண்டு வந்ததையும் தெரிந்தோம். என்னை இப்பொழுது துதித்த நீ அலமரேல் என்று அநுக்கிரகித்தார், உடனே அவ்வரவு கண்ணனை நோக்கிக் கருடனை வெல்லும் வலியும், என் உறவினர்களுக்குச் செய்த கெடுதி நீங்கு மாறும் அருளுவை எனவேண்ட, தோணிபுரிசென்று பிரமதீர்த்தத்தில் மூழ்கி, பிரமேசரை வணங்குவால் அவ்வரங்களைப் பெறுவை யென்றுரைத்து மறைந்தருளினார். மறைதலும், அவ்வரா பிரமபுரஞ்சென்று சிவலிங்கத்தை வணங்கித் துதித்து நின்றகாலே, சிவபெருமான் வெளிப்பட்டு வந்து கருடனை வெல்லும் வலியும், கிளையை யிழந்த வினை நீங்கும் வழியும், தன்னடி பிரியாத்தன்மையும் அருளி, நின் பெயராலே இத்தலம் விளங்குக என்று மறைந்தருளினார். பின்பு தோணிபுரேசன் விடைகொண்ட அக்காளிதன் சிவபதமடைந்தது. இக்காரணத்தாலும் காளிபுரம் என் இப்பதிக்கு அபிதானம் ஒன்று அடைந்தது என்று, சூதபுராணிகர் சொல்ல வுவந்து கேட்டார்கள்.

ஸ்ரீகாளிபுர வத்தியாயம்

முற்றிற்று.

ஏழாவது

## வெங்குரு வத்தியாயம்.



கேட்டுணர்ந்த சௌனகாதி முனிவர்கள் ஓ முனி
புங்கவா! ஓ அநாதரக்ஷகா! ஏ கருணாகரா! என் றன்
புடன் விளித்து, ஸ்ரீ காளிபுர நாம வரலாற்றை நன்
குணர்த்திய தலைவா! இனி வெங்குரு நாமம் இப்
பதிக்கு வந்த சரித்திரத்தையும் எடுத்துத் தெற்றென
வுரைப்பாயாக வென்று வேண்டினார்கள். வேண்டிய
வேண்டுகோட் கிணங்கிய அஷ்டபிரமாணிகராகிய
சூதபுராணிகர் சொல்வாராயினார்.

முன்னாளில் அவுணக்குழாங்கள் வந்து வணங்கு
கின்ற ஒரு செருக்கு தங்கிய மனத்தோடு சுக்கிராசாரி
யர், சத்தியலோகத்திற்கு ஒரு காலத்தில் வர, பிரம
தேவர் சினந்தோட்டினர். உடனே வெள்கி வீழ்ந்த
சுக்கிரன் தான் பிரமனிடத்திற் சென்றதையும், அதற்
குச் சதுர்முகன் அகங்கரித் துரைத்ததையும், அவுணக்
குழாங்களுக் கன்புடனுரைத்து, வானவர் மேலே
வன்போர் செய்வான் தானையோ டெழுந்த சமயங்
கண்டு, நாரதமுனிவர் நாடியே வரலும், ஆதனத்
திருத்தி அன்புமொழி கூறிய சுக்கிரன் வதனம் அக்
கணம் நோக்கி, முனிவர்தம் மாட்சியை, முண்டகன்
பதவியை நின்போலப்புனிதம் இல்லவர் அடைவது எங்
ஙனம்! என்று சொல்லி, பெண்கள்தம்பாவம், கொண்
கனைச் சேரும்; மாந்தர்தம் பாவம் வேந்தனையடையும்;

சீடர்செய் வினைகள் குருவினைப் பொருந்தும்; அறிவிலா அவுணர்செய் தீவினைகள் நின்னைப்பற்றிய தன்மையால், அவுணகுருவாகிய சுக்கிரனே! கொலைஞர், புலாலுண்போர், போர்செய்குநர், அதர்மவிர்த்திகள் இவர்கள்தம் புன்மதி வளர,உணர்த்தற்கேற்ற குருவாக நீ இருத்தலால், உன்னைப்பார்க்கினுந் தீயோர் உலகத்தின்கண் யாவருளர்? ஆசாரியன் பேரறிஞனாயினும் சீடர்கள் தீயவர்களானால் நிலக்கமர் உகுத்த நன்பால் போலத் தீயோனாய்த் தானும் இகழப்படுவானன்றோ? அத்தகைபோல் அறிவின் மிக்க நீ உன் சீடர்களின் தவற்றினால் கீழோனாயினை. அதன் நிமித்தம் மனக்கவற்சி யடையாதே,தாழ்க. சிவபூஜை நியமத்தால் எத்தகைய பாவமும் அழியும் என்று, ஐம்பதத்தையும் அருளி, பிரம்புரஞ்சென்று, பிரமேசரைச் சேவித்து நன்னெறி யடைவாயென்று நாரதர் கூறி மறைந்தனர்.

அவ் வுபதேச வார்த்தையைக் கேட்ட அசுரகுரு எழுந்து, காளியம்பதியைக் களிப்புடன் கண்டு, அருச்சனை புரிந்தே அருந்துதி செய்து, தென்றிசைக் கண்ணே தீர்த்தமொன் றியற்றி, இந்து சேகரனை யின்புடனிருத்திக் கடுந்தவம் பன்னாள் கருத்துறச் செய்து, பணிந்தெழும் அவன்முன் பார்வதி சமேதராய் எம்பிரான் வரலும், தருமசுந்தரனே! சச்சிதானந்தா! பாண்டரங்கனே! பாவரக்ஷகா! பிஞ்ஞக மூர்த்தீ! பிரளய விடங்கா! என்று துதித்து இருபதம்பணிந்த பிருகுவை எம்மான் கண்டு மகிழ்ந்து, விழைந்தது என்னென, வெண்பிறைக் கண்ணியாய்! அவுணர்

தங் குழுவாம் அம்மொழி நீங்கி, சுத்தமெய்வடிவம் துணையிலிக்கு எய்த அருள்குவை என்ன, அமலனு மருளி, உம்பர் தேசிகன் சமத்துவம் பெறுவாய்! மிருத சஞ்சீவனி வித்தையை யடைவாய்! என்று வரங்கொடுத்து, ஈசன் மறைதலும், பொன்வடி வெய்திய சுக்கிரனும் தன்பதம் சேர்ந்தான். அவன் பெயராலே அமைந்திடும் தடத்தில் அன்னவன் றினத்தில் ஆடுவோர் யாவரும் கனவிலும் வறுமை காணார்காணார். ஐப்பசி மாசத்தில் சுக்கிரவாரத்தில் மூழ்குவோர் எவரும் வினையெலாந்தொலைந்தே மேன்மையோ ராவர். இருபடர் நாள்வரை இரும்புகழடைவார். அமாவாசைத்தினத்திலன்புடன் படிந்து பிதிரர்தங்களைப் பிழையறச் செய்வோர் தென்புலத்தவரொடும் கயிலையை யடைவார். ஆசாற்குச் செய்த பாவமகலும். தைத்திய குருதான் பணிதலா லித்தலம் வெங்குரு நாமம் மேன்மையோ டடையும். அல்லாமல் வேறொரு காரணத்தாலும் வெங்குரு நாமம் விளங்கிய கதையும் பேசுவன், கேளும்:—

நரகத் தமிழ்ந்தி நல்வினை செய்யாது வருந்திக் கிடக்கும் மற்றவர் யாவரும் தருமராசனைச் சமயமறிந்து கிட்டி மொழிவார், அமரர்தம் உலகில் அமிழ்தினை யருந்தி விண்ணரமடந்தையர் மென்கூடமடைந்து வாழுந்தரத்தினர் ஒரு பால் நிற்க, மண்ணுலகடைந்தே வாழுந்தரத்தினர் மற்றொருபால் நிற்க, நாங்கள் உம்முடைய சுற்றத்தாரால் தண்டிக்கப்பட்டு, இனித் தாங்கேம். ஏ! தறுகண்ணு! கிருபை என்பது ஒழித்தனை! ஒழித்தனை!! தீனதயாளுவெனச் செப்பிட நின்

றிலே. என்றிவ்வாறாகத் தருமராசனைத் தாக்கியே யிரக்க, தண்டனை செய்யத் தவம் பலபுரிந்து வந்த யான், உம்மால் மயங்குவேனல்லேன் என்று மொழிந்து தன்னூர் நீங்கிப் பிரமபுரஞ் சென்று பிரமதீர்த்தத்தில் மூழ்கிப் பிரமேசரைவணங்கி அபிஷேகஞ் செய்து அருச்சனை புரிந்து தூபதீபங்காட்டி,

அந்தமறை காணு தாதியிடை யிறிசுந்த
சுந்தரமாய் நின்றிலங்கு தோணிநிலே போற்றி
தோணிநிலை யூர்ந்து சுலவுங் கடல்புதைத்த
பாணிநிலே கண்ட பகவானின் றாள்போற்றி.

சாயைமறை காணுத் தாவா விழுப்பொருளாய்
மாயமயத் தோணியின்மேல் வந்தநிலே போற்றி
வந்தநிலேயான் மலரோன் முதலெவர்க்கும்
பந்தமறுத் தாளும் பகவானின் றாள்போற்றி.

என்று துதித்த இயமன்முன் எம்பெருமானடைந்து வேண்டியதென்னென, கூற்றனும் மகிழ்ந்து, நின்றிருவடியை என்றும் நினைக்கவும், என்னுடைய உலகத்தவர் என்னைப்பார்த்தவுடன், இருவினைத் தொடர்பை இயற்கையால் அறிந்து மகிழ்ந்து நிற்கவும் வேண்டுமென்று இரக்க, இறைவனும் அருளி, உன்னைக் கண்டவுடனே அவர்கள் தத்தம் வினையை அக்கணம் அறிந்து மகிழ்ந்தே செல்வார்கள் என்று வரங் கொடுத்து நின்பெயராலே இத்தலம் என்றும் பேசுதற் குரித்தாம் எனவும் சொல்லி மறைந்தார். தருமனும் வணங்கித் தன்பதஞ் சென்றான். முற்றெருருங் குணர்ந்த முனிவரும் அறிந்தார்.

வெங்குரு வத்தியாயம்
முற்றிற்று.

எட்டாவது

## காகவிமோசன வத்தியாயம்.



அன்பிற்சிறந்த அருந்தவ முனிவர்காள்! வியாசர் தம் அருளால் விளம்புவன் கேளீர்! இவ்வெங்குரு நாமம் விளம்பும் பதியில் வேந்தனொருவன் காகவடிவம் நீங்கப்பெற்று மேன்மையடைந்த கதையினைச் சொல்லு வேன்.

விகடாங்கன் என்னும் ஓர் அரசன் மனுசாஸ்திர முறைப்படி செங்கோல் செலுத்துபவனும், சந்திர வட்டக்குடையினனும், பகைவர் முடியெலாம் பர ந்துகிடக்கும் கால்களுடையவனும், அக்கினிட்டோ மம், வாசபேயம், சோமயாகம் முதலாகிய யாகங்க ளைப் புரிபவனும், பொறுமையாற் பூமியையும், அழ கினில் மன்மதனையும், கல்வியாற் சூரியனையும், தருமவி தியாற்றருமனையும் ஒத்துவிளங்கு மொழுங்கினனும், எண்ணென்கறமும் வழுகட்கியற்றி வாழும் நீதிமானு பும் பேர்பெற்று விளங்குங்கால், வேட்டையாட வே ணவாக்கொண்டு, சதுரங்கசேனையுடன் வீரர்பலருஞ் சூழ, விலங்குகள் வாழும் விபினம் அடைந்து, தானைத் தொகுதியைத் தலைத்தலை நிறுத்தி, வேல்முதலான ஆயு தங்களை எறிந்து, ஞாளியைக்கொண்டே வல்லொலி யெழுப்பி, பல்லியம் இசைக்க, வல்லியம் முதற் பலமாண் டன. சூரியன் உச்சியிற் சுடச்சுடச் சென்றனன். சது ரங்கசேனையும், தாகமடைந்து வருத்தம் உற்றன.

சேனைகளெல்லாம் திசைதிசை ஓடின. சூரியன் வெயிலால் சுடுபசி மிகுந்தன. அரசனும் பசிமிகுந்து அலறியே வருந்தினன். உள்ளே உதராக்கினி சுட, வெளியே சூரியாக்கினி சுட, இருதலைக் கொள்ளியின் எறும்பொத்தவனாய் நடக்கவும் வருந்தலும், மேதாதிதினனும் மாதவமேன்மையன் சாலையின் ஒண்புகைமேலே யெழுதலைத்தேடி யேகவும், மாதவச்செய்யோன் முகமன் கூறி வந்தது வினவ, பசிநோய் கனற்றப் பதைப்புடன் வந்தேன் என்று பார்த்திபனுரைப்ப, அம்மொழிகேட்டு ஐயனும் உரைப்பான்; மகமொன்றன்புடன் மகிழ்ச்சியிற் செய்கிறேன்; முற்றவும், உன்பசி அற்றிடச் செய்கிறேன் என்றலும், மன்னன் எதிர்சினங்கொண்டு, தான்வாழில்லம் தழலினுற்பற்ற, மற்றும், ஓர் சிற்றிடம் மகிழ்வினிற் பேணல்போல் இருக்கிறது என்ன, முனிவர்பார்த்து ஓ மன்னவா! பிராமணர்களைப் பசியுடன் ஒதுக்கிவைத்து உனக்குமுன் ஊட்டினால், யாகங்குறைதலே யன்றிச் சாபமும் வந்தடையும் ஆதலால் சற்றே பொறுப்பையென்றனர். என்றலும் கோபித்துத் தன்சேனையை ஏவி யாகத்தை யழித்து, சேமித்து வைத்திருந்த வுணவைக் கவர்ந்துண்டு நின்ற அரசனை மாதவர் கோபித்து, காகவடிவங்கொண்டு காடுகள் எல்லாஞ் சுழன்று, நாட்டினையிழந்தே நல்லறிவகன்று, திரிகுவாயென்று சாபமிட, உடனே காக்கையுருவடைந்து பன்னிருவருஷம் அலைந்து திரிந்து, கௌதமன் வாழும், பர்ணசாலையை யடைய, சிறையினை யடித்துக் கரைகின்ற காகவடிவத்தைக் கௌதமன்கண்டு, அவனுடைய முற்பிறப்பை யறிவினு

லறிய, காக்கைகண்டு காப்பாயென்று, அம்முனிவர் திருவடியில் வீழ்ந்து வணங்க, முனிவரு மிரங்கி, ஒரு சிறுநேரம் நிஷ்டையிலிருந்து நிமலனை யெண்ணி மொழிவான். காழிப்பதியை யடைந்து அகத்தியனு லும் தன்பெயராலும் தாபித்துள்ள லிங்கத்தையும், பிரமதீர்த்தத்தையும் நிகழும் மாசிமாதத்து மகநாளத னில்வணங்கினு லுன்பழி வல்லையின் மாயும். ஆதலால் என்னுடன் வருதி; இக்கணமேயென்று அழைத்துச் சென்று, காவிரியாடிக் காழியுட் கோயில் கருத்துடன் புகுந்தார். புகுந்து பிரமதீர்த்தம், சூலதீர்த்தம் முதலிய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து அக்காகவடிவத்தின் மேல், அத்தீர்த்தங்களால் தெளித்தலும், உடனே பழையவுருவம் அடைந்து பார்த்திபனுகி நின்ற ஆச்சரி யத்தை நெடுந்தகையான கௌதமன் பார்த்து, ஐம்ப தத்தையும் அவனுக்கு உபதேசித்துக் கெடுத்த வேள் வியைக் கிட்டி முடித்து நல்லவனுகி, நாதனை நிறுத்திவிட் டுப் பிரமநாயகரைத் திருநிலையுமையை வணங்கித் துதி த்து, அபிஷேகம் பூஜை நைவேத்தியம் முதலியன பலபொருள்கொண்டு பாங்காச்செய்து, திருவிழா செய்திடச் செல்வமும் கோடிகொடுத்து, திருப்பணி நவமாய்ச் செவ்வனே புரிந்து, நவரத்தினத்தாற் பதிக் கப் பெற்ற விமானமொன் றீந்து,

நிருமல போற்றி குன்று நித்திய போற்றி ஞானக்
குருபர போற்றி யொற்றைக் குழைவலாய் போற்றி மேனுள்
அருமுனை யாழி யான்மா லலர்வழி கவர்ந்து தெண்ணீர்
இருமணிச் சூலத் தாலென்னிருவிழி யளித்தாய் போற்றி.

இவ்வாறு துதித்துத் தன்னுடன் வந்த முனிவ

ரையும் வணங்கித் தன்னுடனடைந்து செங்கோலோச்சி மகளிர்போகமுதலான போகங்களை மனமார அநுபவித்துக் கீர்த்தியை வளர்த்தும், பகைவர் வந்து தம் அடிமேற் பணியப்பெற்றும் வாழ்ந்து, சிவபெருமானுடைய திருவடி நீழலின்கண் வதிந்து சிவாநுபவம் பெற்றனன். காகவிமோசனமான இக்காழியில் யாரேனும், ஒருநாள், அரைநாள், சாமம், கணம், அரைக்கணம் வாசஞ்செய்தால் சிவனுலகடைதல் திண்ணம் திண்ணம். ஸ்நானம் பண்ணாற்கியைந்த எண்ணெய்த் தானமும், அறுசுவையொடு கூடிய அன்னதானமும் இத்தலத்திற் புரிவோர் மறுஜனனம் அடையார். சாபத்தாற்பெற்ற காகவுருநீங்கி நல்லவடிவம் பெற்ற தகைமையால் இப்பதி புனர்சன்மபுரம் எனப் பொருந்திய பேரொன்று சொல்லுவார் யாரும் என்று, சூதபுராணிகர் திருவாய் மலர்ந்த திருவமுதுண்டு, சிவமுனிவரர்கள் தேக்கியே மகிழ்ந்தனர்.

காகவிமோசன வத்தியாயம்

முற்றிற்று.

---

ஒன்பதாவது

## புகலி யத்தியாயம்.

---

ஏனக்கே யிசைந்த இருந்தவ முனிவர்காள்! காழியா மிப்பதி கலந்திடு நாமம் பன்னிரண்டு; அவற்றுள்

நான்கு பெயர்கள் நண்ணிய வகையை மொழிந்தனன். ஐந்தாம் பெயராம் புகலியின் வரலாறு முறையாற் கூறுவேன் என்றே தொடங்குவார் சூதர்.

முன்னொரு காலத்தில் அறம் தலைவணங்க, மறம் தலை யெடுக்க, செங்கோல் கோட, நான்கு வருணமும் தத்தம் நிலை பிறழ, மாதர் கற்புகெட எங்கும் கலி மிகுந்தது. அவ்வாறு மிகுந்த கலித் தெய்வத்தைப் பொய், வஞ்சகம், புறங்கூறல் முதலாகிய மந்திரங்களைக் கொண்டு, அழுகின்ற கண்ணீரால் நீராட்டி, இகழ்ச்சியாகிய மலர்சூட்டி, பேதைமையாகிய ஆலயத்தினுள் தாபித்து, காமமாகிய அமுதூட்டிப் பாவமாகிய பூசையை அரசன் செய்தான். இவ்வாறு செய்ததால் கிடைத்த பயன்களாவன:—பெரியவர்களின் யோகங்கள் பெண்களா லவிந்தன. யாகாக்கினிகள் அவிந்தன. பொய்யுரை வாழ்த்துகளும் பொய்யாசீர்வாதங்களும் எங்கும் நிறைந்தன. அன்னதானங்களும் வேதாத்தியயனமும் அழிந்தன. வணங்கத்தக்க மேற்குலத்தவர்கள் மயக்கமடைய, சுருதித்துறைகளைத் தாழ்குலத்தோர் பழக நேர்ந்தது. இத்தகையால் உலகமாவது அரசனாவது இல்லை யென்றும், நல்வினை தீவினை கிடையாவென்றும், எல்லாம் தாமே யென்றும், தாங்கள் பேசிக்கொண்டு எல்லாம் உணர்ந்தவர்போல வேஷம் பூண்டு கயவர்களோடு சிநேகித்து இறுமாந்து நிற்பார்கள்.

பின்னரும் பெண்களெல்லாம் தங்கள் வார்த்தையை நாயகர்கள் கேட்கும்படியாக மதிபுகட்டித் தண்டிப்பார்கள். தகப்பனுக்குப் பிள்ளைகள் புத்திபுகட்டு

வார்கள். மறுத்தால், உன்னைவிடப் பித்தன் உலகி லில்லையென்று இகழ்ந்து தள்ளி விடுவார்கள். இது நிற்க. அக்கலிபுருஷனால் பற்றப்பட்ட ஆன்மகோடிக ளெல்லாம் கொண்ட கொள்கைகளாவன:—மறப்பது ஆசான் வார்த்தை, உண்பது மது, தள்ளுவது பெரி யோர் சகவாசம், கொள்ளுவது பிறரை இம்சித்தல், சூது பொய் முதலியன ஆடல், சிறப்படைவது கயவர் களிறுலோசனை, விருத்தி செய்வது காமப்பயிர், விடுப் பது தெய்வபூஜை, தொடுப்பது அறிவிலாச் செய் கை. இவை முதலியவைகளாம்.

அப்பொழுது, யாகம் முதலியவைகள் தேய்ந்து மழைவளஞ் சுருங்கப் பெற்று மாதர் கற்பழிந்து பசு நிரைகுறைய, தேயங்கள் பொலிவிழந்து, தீயொழுக் கங்களாகிய பொய், கொலை, களவு, காமம் முதலிய வைகளின் விளையாடுதலே விழாக்கொண்டாட்டமா கக் கொண்டு கலிபுருஷன் பொழுது போக்குவான். புல் முதலிய களைகள் சூழ்ந்த பயிர் வளர்ச்சியடை யாது தளர்ச்சியடைதல்போல உலகமெங்கும் கலி புருஷனாகிய களையானது பற்ற, மிகுந்த வருத்தம் அடைதலை நினைந்து நினைந்து, அறக் கடவுள் ஒரு பக் கம் ஒதுங்கியிருந்து சிந்திப்பாராயினன்.

இங்ஙனமாக அறப்பெருங் கடவுள் வருந்திக் கொண்டு இருக்கும்பொழுது, கைலயங்கிரிசென்று பரமேசுரனை வணங்கித் திரும்பி வருகின்ற நாரத முனிவர் நடுவழியில் அறக் கடவுளைக்கண்டு ஏ தர் மா! நீ இப்படி இங்கு இருக்கவேண்டிய காரணம் என்னை? உன் சரீரமோ மிகவும் வாட்டமுற்று இருக்

கின்றது; முகமலர்ச்சியோ சிறிதுமின்றி; நடந்தது என்ன? சொல்வாயாக என்னலும், அறப் பெருங் கடவுள் வெட்கி விளம்புவான். முதல் யுகத்தில் நான்கு பாதத்தை யடைந்து, இரண்டாவது யுகத்தில் முக்கால் பெற்று, மூன்றாம் யுகத்தில் இருபதம் அடைந்து இக்கலியில் ஒருகாலோடு உலைந்து வருந்தினேன் வருந்தினேனே.

இவ்வாறு இக்கலியுகத்தில் வலிசுருங்கி ஒற்றைக் காலினால் திரியச் சகிக்ககில்லேன். எப்பொழுதும் நான்கு பாதமும் பெற்று வாழவேண்டுமென்று பிரார்த்திக்க, நாரதர் சொல்லுவார்.

ஏ நீதிதவறாத செங்கோற் கடவுளே! விலங்கு பறவைகள் தாய் பிரிந்தழி, அப்பொழுதே உணர்ச்சி பெற்றுத் திரிகின்றவாறுபோல் உன்னைப் பிரிந்த அக்கணமே கலிபுருஷனால் சூழப்பட்டது இவ்வுலகமானது, நீயோ சிவபெருமான்றன் திருவுளத் திருந்தும் அவதரித்தாய்! அவதரித்தும், நின்வலி குன்றப் பெற்றாய். உனக்குத் தவம், ஆசாரம், அருள், மெய் ஆகிய நான்குகாலும் முதல் யுகத்திலுண்டு; அடுத்த யுகத்தில் தவம் நீங்கிய முத்தாள் பெறுவாய்; மற்றை யுகத்தில் தவம், ஆசாரம் நீங்க இருதாள் எய்துவை. கடையுகத்தில் மெய்யாகிய ஒருகாலால் நடப்பாய். ஆகலின் வருத்த முறுகின்றனை. ஆயினும் தருமனே! நீ மனம் வருந்தா தொழிக. இப்பரதகண்டத்தின் கண், தென்றிசையில் காவேரிக்கு வடபால் சூரனுக்குப் பயந்த தேவர்களெல்லாம் தங்கள் தங்கள் நாரியர்களோடு சூழ்ந்து வந்து உன்னை விடப் புகலிடம் வே

றில்லை யென்று போற்றிய வாற்றால் புகலி என்னும் திருநாமம் வாய்க்கப் பெற்ற சிறந்த மகா க்ஷேத்திரத்தின்கண் எமது கருணாநிதியாகிய பரப் பிரம மூர்த்தி வீற்றிருக்கின்ற குருலிங்க சங்கம வடிவத்தை அருச்சித்து வணங்குவா யானால், பாத நான்கும் பெற்றுப் பழியெலாம் பறக்கப் பரிசுத்த னாகுவை யென்று திருவாய் மலர்ந்தருளி நாரதர் சென்றனர்.

உடனே அறப்பெருஞ் செல்வன் சோழநாடணுகிக் காவிரி தோய்ந்து, பிரமபுரப்பதியடைந்து, பிரம தீர்த்தத்தில் மூழ்கிப் பின்னர் பிரமேச மூர்த்தியை வழிபட்டுத் துதித்துப் பஞ்சாக்ஷரத்தைச் செபித்தலோடு முக்கணனை ஒருசார் பிரதிட்டை செய்து, நாறு வருஷம் அருந்தவம் புரிந்துழி, அவ்விடம் சந்திர சடாதரர் தோன்றக் கண்ட தருமன் அடியற்ற மரம்போற் கீழே விழுந்து எழுந்து துதிக்க, எம்பெருமான் ஏ தர்ம! வேண்டிய தென்னென அவ்னும் விளம்புவான். நான்கு தாள் பெற்றுத் தேவரீரைச் சுமக்கவும், இடபத்தைப்போற் பெருவலி பெறவும் அருள்குவா யென்ன, பார்வதி நாதன் கொடுத்தேனென்று அறக் கடவுள் உச்சிச் சிரசில் திருக்கரம் வைத்து, இடபமாகி உறைவாயென்ன, நான்கு வேதமும், நஞ் சிவகண்டிகையும், திருவெண்ணீறும், திருவைம்பதமும், எல்லாம் எம்மோடு ஒரு தன்மை யென நீ அறிவாயாக. வேறொன்றும் விளம்பா தொழிக. உண்மை விரதமாகிய திருநீறும் பஞ்சாக்ஷரமும் நிறைந்த ஒருவன் பொறுமை உடையவனாய்ப் பிறன்மனை விழையாமல் சிவபூஜைகள் செய்கின்ற

இடம், அரசு, துளசி, வில்வம், ஆல், வேதமுதலிய உச்சரிக்கு மிடம், சிவாலயம் மடாலயம், வேள்வி செய்யும் இடம் ஆம் இவ்விடங்களில் விடாது நீ விளங்குவாயாக. என்னால் ஏவப் படுவது தவமும், அத்தவத்தாலேவப்படுவது நம் அருளும் ஆம் என்று அறிகுவை. ஈண்டு உன்னால் தாபிக்கப்பட்ட இலிங்கத்தை வணங்குபவர்கள் பாவங்க ளெல்லாம் நீங்கப் பெற்று அசுவமேத பலனை அடைவார்கள். கைலாயத்தில் வாசஞ்செய்வார்கள். அத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து நவவஸ்திர முடித்தினவர்கள் வருண பாக்கியத்தை யடைவார்கள். வழிபடுகிறவர்கள் ஒருகோடி யாகபலனையடைந்து எப்பொழுதும் வாழ்வடைவார்கள். இவ்விடத்தில் வேதாத்தியயனஞ் செய்தவர்கள் பௌண்டரீக யாகபலனை யடைவார்கள். ஒரு கணநேரம் இங்கே வசிக்கினும், யாதொரு துன்பமு மற்று முதலீறில்லா முழுதுல காள்வார் என்றருளி, எம்பெருமான் மறைந்தனர். அது முதல் சிவபெருமானைச் சமைக்கும் பாக்கியமும், நான்கு பாதமும் பெற்று, வாழ்வு பெற்றனன் அத்தருமன் என்று சூதபுராணிகர் வேத வியாசர் உரைத்தபடியே சவுனகாதியருக்கு மொழிந்தருளினர்.

## புகலி யத்தியாயம்

## முற்றிற்று.

---

பத்தாவது

# சிரபுர வத்தியாயம்.

தருமன் வரலாறு அறிந்த நீவிர் ஆறுவதான சிரபுரநாமம் வந்த வகையினையும் சொல்கின்றேன் கேட்பீராக. பூர்வகாலத்தில் தேவர்களும் அசுரர்களும் மந்தரமலையைக்கொண்டு திருப்பாற்கடலைக் கடைகின்றகாலத்தில் அமிர்தமுண்டாயிற்று. அவ்வமிர்தத்தைத் தேவர்களும் அசுரர்களும் உண்ணுதற்குத் தொடங்குங்கால், மாயவிஷ்ணு எழுந்து, மோகினியுருவங்கொண்டு, அசுரர் கூட்டத்திற் சென்று, உங்களுக்கு வேண்டுவது யாது, அமிர்தமாகுமே, நீதான் என, விரும்புவார் யாரென, நான் நான் என்றே ஒருவர்க்கொருவர் கடிய யுத்தஞ்செய்து யாவரும் மடிந்தழிழி, அம் மோகினியுருக்கொண்டே அமிர்தத்தைத் தேவர்கட்குப் படைக்குங் காலத்தில், அவ்வசுரர் குழுவுள் தப்பிய சயிங்கிகேயன் என்பான் கூடஇருந்து உண்ண, அதுகண்ட இருபக்கத்திலுமிருந்த சூரிய சந்திரர்கள் அமுது படைக்கின்ற விஷ்ணுவுக்குக் குறிப்பாகக் காட்ட, அவர் படைக்கும் சட்டுவத்தால் படீர் என்று அடிக்க, உடனே தலைவெட்டுண்டு, காழியந்தலத்தில் தெருவீதிக்கண் திடீரெனச்சிரம் வீழ்ந்தது. உடற்பாக முழுவதும் வீதியின் கீழ்பால் ஒரு கூப்பிடுதூரத்தளவில் விழுந்தது. இந்த இரண்டு கூறும் இரண்டு பாம்புருவினராக, அவ்வருள் முடிக்கூறுள்ள முன்னவன்றானும் சூரியனைச் செயிக்கும் வண்ணம் நினைத்துப் பிரமேசனை யர்ச்சித்து வட

மேற்றிசையில் இரண்டுகோல் தூரத்தின்கண் ஒரு தீர்த்தமொன்றியற்றி, ஆண்டே சிவலிங்கந் தாபித்து வழிபாடு செய்து, அநேக நாட்கள் தவம்புரிய, அவனெதிரே பிரமேசர் தோன்ற, கண்டலும், வணங்கி யெழுந்த தலைக்கூற்றரவைத் தலைவன் பார்த்து வேண்டிய தென்னென, சூரியனை வெல்லுமாறு அருள்வை என, அவ்வாறே கொடுத்துத் தலைக்கூற்றரவையும், உடற்கூற்றரவையும் நோக்கிக் கடகராசியைக் கடுங்கதிரோனும் சிங்கராசியைத் தண்கதிரோனும், இருபக்கத்திலுமுள்ள ராசிகளை முறையே புதன், வெள்ளி, செவ்வாய், குரு, சனி இவர்களுங்கொள்ள, நீங்கள் நின்ற வீடே உங்களுக்கு நிலையாக இருந்து, மற்றவர் போலன்றி மாறிமாறிச் சூழ்ந்து, இராகுகேது என்னும் நாமம் அடைந்து, ஒருவர்க்கு ஒருவர் ஏழாமிடத்தில் வசித்து, அமாவாசை, பௌர்ணிமை திதிகளன்றி மற்றைநாட்களில் இருசுடர்களையும் தீண்டாமல் வசிப்பீராக். ஏ தலைக்கூற்றரவே! நின்சிரம் வீழ்ந்த நேர்மையா லிப்பதி சிரபுரம் என்ற மரபாற் செப்புக. நின்னாற் கண்ட நீர்நிலை மூழ்கியும், நின்னாற் பதித்த நிமலனை யேத்தியும் வருவோர் அட்டமாசித்திகளை யுடைவார் என்று வரம் பலகொடுத்து எம்பிரான் மறைதலும், சிவபிரா னருளாற் றீயோரிருவரும் இருசுடர் தம்மை ஈருவாத்தினத்தும் நினைத்தபோது வருத்தியே யேகுவர். இத்தகையாலே எழுகோளோடு இவ்விருபாம்புஞ் சேர நவகோளாயின. இக்கதை படித்தவரும், கேட்டவரும பிறவிப்பிணியற்றுப் பேருலகடைவார் என்று சூதபுராணிகர் முனிவர்களுக்குச் சொல்லியருளினார்.

சிரபுர வத்தியாயம்

முற்றிற்று.

## பதினேழாவது
## குருத்துரோக விமோசன வத்தியாயம்.

செவிக்குணு விரும்பிய சீர்பெறுந்தவத்தீர்! சிர புரநாமச் சிறப்பினை யறிந்தீர். இனிக்குருத்துரோக விமோசன கதையையும் கூறுவேன் கேளுங்கள். இந் நைமிசாரணியத்தின்கண் வாழ்ந்து போந்த முனிவர் குழாங்கள் சூதரையடைந்து வினவுவார்கள். என்னை னில், சிவபெருமானும் நந்திதேவரும் தேவரும் ஆக மூவர்களும் உலகத்தின்கண் ஆசாரியரென்று பேசப் படுவார்கள். அவர்களு ளெம்பெருமான் கைலாசபதி ஜீவகோடிக ளுய்யும்வண்ணம் சிவசின்னங்க ளாகிய திருவெண்ணீறும், திருவைந்தெழுத்தும், சிவகண்டி கையும் உண்டாக்கிய வாறுபோல் எங்களை யெல்லாம் ஆட்கொள்ளும்வண்ணம் தேவரையும் அக்கைலாச பதி படைத்தருளினார். ஆகையால் ஆசாரியரின் இலக்ஷ ணமுந் தவறாமல் எங்களுடைய ஒழுக்கமு மாறாமல் அருளுவதோடு, ஆசானைப் பிழைத்தவர்களின் கதியும் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார் கள்.

இவ்வாறு வேண்டிக்கொண்ட சவுனக முனியை யுள்ளிட்ட முனிவர் கணங்களை முகமலர்ச்சியோடும் பார்த்துச் சொல்வாராயினார். நீங்கள் வினவிய விஷ யம் மிகவும் நன்றே. ஞானசாரியர் பிரமேசரே யென்று சொன்னது நன்றெனினும், அவ்வாசானருள் பெற்ற வேதவியாசர் உணர்த்தியவாறே ஆசாரியரின் இலக்ஷ ணங்கள் வருமாறு:—

எல்லாராலுந் தொழுத்தக்க மேற்குலத்தி லவதரித்து, தெய்வ பூஜைகளில் மேன்மையடைந்து, வேதப் பகுதியினை விளக்கமாயறிந்து, வைதிக சைவத்தில் வழியாய் நின்று, உள்ளவனெவனோ அவனே பரமாசாரிய னெனப்படுவான். அவனிடத்தில் மேகத்தை யொத்த ஈகையும், சூரியனைப் போன்ற தொல் பெருங் கல்வியும், சுத்த நீர் நேருந்தூய்மையும் பெற்று, நிறைகோலன்ன நீதியுங்கொண்டு, பூமியைப் பொருவும் பொறுமையும் படைத்து, மால்வரையுறழும் தோற்றமும் வகித்து, சீர் நிறைநோன்பு, திரைநிகர் கேள்வியடைந்து, நடை, அடக்கம், வாய்மை, இரக்கமுதலிய நிறையப்பெற்றுப் பலதெய்வங்களும் தன்னிடத்தே வசிக்க விரும்பும் மேன்மை பெற்று, சீடர்களின் வினைப் பகுதியினைப் போக்கிக் கதிகாட்டும் அவனே ஆசான் என அறிவீராக. அன்றியும், ஐம்பதமும், ஆன்மதத்துவம் இருபத்துநான்கோடு வித்தியா தத்துவத்தையும் சிவதத்துவமும் உணர்ந்த சன்மார்க்கனும் முப்பத்திரண்டறங்களை ஓதும் மன்னவனும், காமாதிமுக்குற்றங்களை வென்ற முதல்வனுமுள்ளவன் குரவனாவான். பின்னரும் விரதப்பாகுபாடறிந்து நோற்கும் மேன்மையனும், சிவ வாக்கியமுணர்ந்த செல்வனும், சாரமுணர்த்துந் தன்மையனும், அச்சமகற்றும் உச்சிதனும் உள்ளவனும் குருவென மொழிகுவர். ஆக முதலிலே சொல்லப்பட்ட இலக்கணத்தையுடைய ஆசானும், பின்னரறிவுறுத்திய இலக்கணங்களைப் பெற்றமைந்த ஆசானும் என இருவகையுண்டு. இரண்டுமொன்றே.

இனி, சீடனிலக்கணஞ் செப்பக் கேண்மின்! ஐயம், திரிபு, அறியாமை மூன்றுமற்று, முக்குற்றமு நீங்கி, அறத்தாறறிந்து, தன்னுயிர்போல் மன்னுயிரையும் பாதுகாக்கும் அன்புகொண்டு, சாந்தம் முதலிய நற்குணமமைந்து வழிபடுகின்ற சீஷனுக்கே உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உண்மைப் பொருள் காட்டல்வேண்டும். இனி, கற்பனை கடந்த சிற்பரமூர்த்தி மன்னுயிர்க்காகத் தன்முக மைந்தில் உண்டாக்குவித்த ஒரு மறைநான்கும், இருபானெட்டா, இசைத்திடாகமமும் பேசும் முப்பொருளாம் பதிபசுபாசப் பிரிவினின் விரிவை முறையாய்ப் பேசுவேன்.

பதியாவது நித்தியத்துவம், சர்வவியாபகத்துவம், அநாதி மலமுத்தத்துவம், சர்வஞ்ஞத்துவம், சர்வ கர்த்திருத்துவம், நித்தியானந்தத்துவம், சுவதந்திரத்துவம், அலுப்த சத்தித்துவம் ஆகிய குணங்களை யுடைய பொருள். இவற்றுள் நித்தியத்துவமாவது என்று மழியாத்தன்மை. சர்வ வியாபகத்துவமாவது எவ்விடத்தும் நிறைந்திருக்குந்தன்மை. அநாதிமல முத்தத்துவமாவது இயல்பாகவே பாசங்களினின்றும் விடுபடுந் தன்மை. சர்வஞ்ஞத்துவமாவது எல்லா மறியுந்தன்மை. சர்வகர்த்திருத்துவ மாவது எல்லாவற்றிற்கும் தலைமையா யிருக்குந்தன்மை. நித்தியானந்தத்துவமாவது என்றும் சந்தோஷமாயிருக்குந் தன்மை. சுவதந்திரத்துவம் எல்லாவற்றையும் தம்வசமா வுடைத்தா யிருக்குந்தன்மை. அலுப்தசத்தித்துவமாவது பேரருளுடைமைத் தன்மையாம்.

பசுக்களாவன:—நித்தியமாய், வியாபகமாய், சேதனமாய், பாசத்தடையுடையவைகளாய், சார்ந்ததன் வண்ணமாய்ச், சரீரந்தோறும் வெவ்வேறாய், வினைகளைச் செய்து வினைப்பயன்களை அநுபவிப்பவைகளாய், சிற்றறிவும் சிறுதொழிலும் உடையவைகளாய், தமக்கு ஒரு தலைவனை உடையவைகளாய் இருக்கும். [பசு-ஆன்மா, சேதனம்-அறிவுடைப் பொருள்.] சார்ந்ததன் வண்ணமாவது:—பளிங்கு தன்னைச் சார்ந்த பொருள் நிறமாகவே நிற்றலைப் போன்றது. அவ்வான்மா, விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்படும். விஞ்ஞானகலர் ஆணவமல மொன்றே யுடையவர். பிரளயாகலர் ஆணவமலம், கர்மமலம் ஆகிய இரண்டு முடையவர். சகலர் ஆணவமலம், கன்மமலம், மாயாமலம் என்னும் மூன்றும் உடையவர்.

இனிப்பாசங்களாவன:—ஆணவம், கர்மம், மாயை என மூவகைப்படும். இம் மூன்றோடு மாயேயம், திரோதாயி இரண்டுஞ் சேர பாசம் ஐந்தென்று கொள்வது முண்டு. [பாசம் என்பது பந்தித்து நிற்றலெனப் பொருள்படும். பச்-பந்தித்தல்] அவற்றுள் ஆணவமலமாவது ஒன்றேயாய், தனக்குள் அநேக சத்திகளை யுடையதாய், ஆன்மாக்களிடத்தில் செம்பிற் களிம்புபோல அநாதியே உடன் கலந்து நிற்பதாய், ஒவ்வொரு ஆன்மாக்களிடத்தும் வெவ்வேறாகி, ஆன்மாக்களுடைய அறிவையும், தொழிலையும், இச்சையையும் மறைத்து நின்று, அஞ்ஞானத்தைப் புகட்டுவதாய் பக்குவ கால இறுதியில் அவ்வவ் வான்மாக்களினின்றும் தன்சத்தி பிறிந்து நிற்பதாய், ஜடமாய், ஆன்மாக்களை

அணுத்தன்மை செய்கின்ற காரணத்தால் ஆணவமென்னும் பெயருடைத்தாய் நிற்பது.

கர்மமலமாவது:—ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என முத்திறத்ததாகி ஆன்மாக்கள் தாங்கள் எடுத்த பிறப்பிலே மனம் வாக்குக் காயங்களினாலே செய்யப்பட்ட புண்ணிய பாவங்களைச் செய்தபொழுது மேற்குறித்த நாமங்களுள் ஆகாமிய நாமத்தை யடைந்து, இப்படி ஒவ்வொரு பிறப்புக்கள் தோறும் சம்பாதித்துப் பக்குவப்படும் வரையும் புத்தி தத்துவத்தை ஆதாரமாகக்கொண்டு மாயையில் ஆன்மாக்கள், அழுந்தி நிற்கும்போது சஞ்சிதம் என்னும் பெயரினதாகி, இச்சஞ்சித கன்மங்களுள் பக்குவ முற்றவை யெல்லாம் இனி எடுக்கும் சரீரத்தையும் அதனால் அநுபவிக்கப்படும் இன்பதுன்பங்களையும் தந்து பயன்படும் பொழுது பிராரத்தாபிதானத்தை யடையும். [அபிதானம்-பெயர்.]

மாயையாவது :—சுத்தமாயை, அசுத்தமாயை பிரகிருதிமாயை யென மூவகைத்து. அவற்றுள் சுத்தமாயையாவது நித்தியமாய், வியாபகமாய், அருவமாய்ச், சடமாய்ச்,சொல்வடிவமும், சுத்தமாகிய பொருள் வடிவும் தோன்றுதற்கு முதற்காரணமாய் ஆன்மாக்களை மயக்கஞ் செய்யாததாய் நிற்பது. அச்சுத்தமாயையினின்றும் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் பிரிவினவாய அக்ஷரங்கள் தோன்றும். இச்சுத்த மாயையை விந்து என்றும் சொல்வார்கள். அசுத்தமாயையாவது நித்தியமாய், அருவமாய், ஏகநிலையதாய், உலகத்திற்கு ஒரு வித்துமாகி, சடமாகி,

எங்கும் வியாபகமாய், எம்பெருமானுக்கு ஒரு சத்தி யுமாகி, ஆன்மாக்களுக்கு சுத்தம், அசுத்தம், சுத்தா சுத்தம் ஆகிய தனுகரண புவன போகங்கள் தோன்றுத ற்கு முதற்காரணமாய், ஊழிகாலத்தில் அவ்வான்மாக் களுக்கு உறைவிடமாய், மயக்கஞ் செய்வதாய் நிற்பது. பிரகிருதி மாயையாவது மேற்கூறிய அசுத்த மாயை யினின்றுந் தோன்றித் தன்னினின்றும் கன்மேந்திரி யம், ஞானேந்திரியம், மனம், புத்தி, சித்தம், அகங்கார மாகிய அந்தக்கரணங்கள், பஞ்சபூதம் முதலாகிய தத் துவங்களை உண்டாக்கிக்கொண்டு ஆன்மாக்களை மயக் கஞ் செய்வதாய் நிற்பது. இதை மூலப்பிரகிருதி என்றும் சொல்லுவார்கள். மாயேயமாவன:—மாயை யாலாகிய தத்துவங்களும், அவைகளாலாகிய தனுகரண புவன போகங்களுமாம். [தனு-உடம்பு. கரணம்-மனம் முதலிய கருவி. புவனம்-உலகம். போகம்-அநுப விக்கப்படும் பொருள்.] திரோதாயியாவது ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களையுந் தொழிற் படுத்தி, ஆன்மாக்கட்குப் பரிபாகத்தை வருவிக்கும் சிவ சத்தி. இது மலத்தைச் செலுத்துதலினாலே மலம் என உபசரிக்கப்பட்டது.

ஆன்மாக்களைப் பந்தித்த ஆணவமலமும் கன்ம மலமுமாகிய நோய்களைத் தீர்த்துச் சிவானந்தப் பெரும்பேற்றை அவ்வான்மாக்களுக்குக் கொடுக்கும் பொருட்டு மாயாகாரியமாகிய தனுகரண புவன போ கங்களைக் கொடுத்தார் முழுமுதற் கடவுள். மேற் குறித்த தனு முதலிய நான்கும் மலமாக இருந்தும், மலம் என்பதற்குப் பொருள் அழுக்கெனை இருந்தும்,

ஆணவமலமாகிய அழுக்கை மாயாமலமாகிய அழுக்கி ஞலே நீக்கலாம் என்றும் கூறியதன் கருத்தாவது, வண்ணான் கோடிவஸ்திரத்திலே சாணியையும் உவர் மண்ணையும் பிசறி, மிகக் கறுத்தது என்னும்படி செய்து, முன்னேயிருந்த அழுக்கோடு பின்னையதாகிய அழுக்கையும் போக்கி, அவ்வஸ்திரத்தை மிக வெண் மையுடையதாகச் செய்வது போலவே, சிவ பெரு மான் ஆன்மாக்களிடத்தே மாயாமலத்தைச் சேர்த்து, அநாதியே பந்தித்து நிற்பதாகிய ஆணவமலத்தோடு ஆதிபந்த மாகிய மாயா மலத்தையும் நீக்கி, அவ்வான் மாக்களைச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வு உடைய தாகச் செய்வார்.'

இவ்வாறு பஞ்ச மலங்களாகிய ஆணவம், கன் மம், மாயை, மாயேயம், திரோதாயி என்னும் இவை களின் இலக்கணங்களை உபதேசித்தல் வேண்டும். அன் றியும், சரியை, கிரியை, யோகம், ஞானமாகிய நான்கு பாதங்களையும், இவற்றால் அடையும் சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய பதவிகளின் இலக்கணங்களையும் நன்குணர்த்தவும் வேண்டும். அத்துவா ஆறினையும் அன்புடன் காட்டல் வேண்டும். நிவர்த்திகலை, பிர திட்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியா தீதகலை களையும் விளக்கல் வேண்டும். இவைகள் முதலிய சைவசித்தாந்த சாத்திரங்களை ஆசாரியனறிந்துரைக்க வேண்டும். அவ்விலக்கண முழுவதும் ஈண்டு விரிப் பிற்பெருகும். ஆதலால் இம்மட்டோடே நிறுத்தப் பட்டது.

இனி அந்நாளில் வடவாலின்கீழ் சிவபெருமான்

தெக்ஷிணாமூர்த்தி வடிவத்தோடு, எழுந்தருளிநின்று சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் ஆகிய நால்வர்க்கும் சொல்லாமற் சொன்ன சூக்ஷுமத்தை அறிந்துகொள்ளும் ஆற்றலுடையவனும், அத்தக்ஷிணாமூர்த்தி சொரூபமே இப்பிரமேசரின் திருவடிவம் என்று தெரிந்து கொள்பவனும், அப்பிரமேசரின் திருவருட் சொரூபமே ஞானசாரியராக எழுந்தருளி வந்திருக்கின்றா ரென்று அறிந்து வழிபடுவோனும் சீஷனாவான். அப்படியன்றி, மண்ணாற் கறியுஞ் சோறும் அமைத்துண்கின்ற சிறு மகார்களின் சிற்றறிவு போல, யாம் பரமம் யாம் பரமம் என்று உரைக்கின்ற பேதையர்களைப் போல் தம் புத்தி கெடுதலே யன்றி சீடர்தம் புத்தியும் வருந்திக் கெடுக்கின்ற அவிவேக பூர்ண சிகாமணிகளுக்கு இவ் விஷயம் கூறத் தகுவனவல்ல. அம்மட்டோ! மிகக் கஷ்டப்பட்டு அரிதிற் பஞ்சடர்ந்த பருத்திக் குண்டிகையையும் வளர்த்தவர்க் குதவாமல் பிறருக்கு உதவும் கோடிய தெங்கினையும் கூந்தற்கமுகையும் ஒத்தவர்களுக்கு ஓதுதல் ஆகாது. நிற்க.

குரு, என்கின்ற சொல்லின் உண்மைப் பொருள் யாதெனின், தன்னைத் தெரிவிக்கும் புற விருளைப் போலாது, மயக்கத்தைத் தருவதான ஆணவ மலாந்தகார சத்தி குகாரமாகவும், அவ்வாணவ மலசத்தியை மாற்றும் சத்தி ருகாரமாகவும் கொள்ளக் கிடந்ததென்று மனத்துட்கொண்டு விளங்குவீராக.

குற்றமற்ற ஆசானை யடுத்து, இரவும் பகலும் அன்பு மேற்பட, இடை விடாமல் சரீரத்தோடு நிழல்

பற்றுவது போல் பின்ரொடர்ந்து குற்ற மற்ற நன் மனத்தோடும் நற்குணத் தோடும் பழகி அவர் குறிப்பறிந் தொழுகி, பொருளுள்ளவ ரிடத்தில் ஏழைகள் நடப்பதைப் போன்றும், அரசரிடத்தில் குடிகள் நடப்பதைப் போன்றும், பழகுபவன் மாணாக்கன். பின்னருஞ் சீட னிலக்கணம் வருமாறு:— அச்சம் பொருந்திய மனத்தினனும், ஐம் பொறி வழியே புலன்களைச் செலுத்தாத சிவவிரதத்தினனும், மூவகை அக்கினியையும் (ஆகவனீயம், காருகபத்தியம், தெக்ஷிணாக்கினீயம்) வளர்ப்பவனும், மனுதர்ம சாஸ்திர விற்பன்னனும், தாய் தந்தை குரவர்களின் அடித் தொண்டினனும், எக்காலத்தும் எவ்விடத்தும் தம்மைப் போல மனித னென்று ஆசானை யெண்ணாதவனும், பொறுமையனும், வாய்மையனும் நன் மாணாக்க னவான். அன்றியும் வாழைத் தண்டில் தீப் பிடிக்கு மாறு போன்ற மந்ததர அறிவினனும், விறகிற் றீப்பிடிக்கும் மந்த புத்தியனும், கரியிற் றீப்பிடிக்கும் தீவிர மதியனும், பஞ்சிற் றீப்பிடிக்கும் பேரறிஞனும் ஆகிய நால்வருள் கடையவனே தலை மாணாக்கன். அம்மாணாக்கன் தனக்கு இருவினை யொப்பு மலபரி பாகம் வருகின்ற காலத்தில், பல கலைகளையு முணர்ந்த பரமாசாரியனது இரண்டு திருவடிக ளாகிய தோணியைத் தன்னுடைய இரண்டு கைகளாகிய கோல் தள்ளிக்கொண்டு, இருவினையாகிய சமுத்திரத்தைத் தாண்டும்படி, உருத்திராக்ஷ மாலையையும், விபூதியையும், ஆபரணமாகத் தரித்து, பஞ்சாக்ஷரத்தை இடைவிடாமல் எஞ்ஞான்றும் மானசம்,

உபாஞ்சு, வாசகம் என மூவகையில், மானசவகை யாற் செபிப்பவனாகிய நிலையை யுடைய மாணவக னும், அம் மாணாக்கனுக்கு ஞானோபதேசஞ் செய்த மூர்த்தியுமே அழிவில்லாத வீடுபேறடைவார்கள். அல்லாமலும், திரிபுரதகனராகிய பரமசிவனுடைய அடியவர்களை வணங்குதல், அப்பரம சிவனை ஆரா திக்க விரும்புதல், அவ்வாறே வேணவாவொடு செய் தல், சிவ பிரானடியை வணங்குதல், இருவர்களுடைய புகழைக் கேட்டல், கண்களினின்றும் நீர்ததும்ப உரோமாஞ்சங் கொள்ளல், கடவுளைப் பூசித்து உணவு செய்தல், நீக்கமின்றிப் பணிதல் ஆகிய எண்வகைப் பத்தியொழுக்கங்கள் இல்லாதவர்க்கு எவ்விதமான ஞானோபதேசங்களையும் ஓதுதல் மிகத் தவறே யாகும் என்று ஆசான் அறிந்து கொள்ள வேண்டியது. ஐம் பூதத்திலே எழுகின்ற சூரிய சோதி ஒரு பொரு ளிடத்தில் பொருந்துதலால் கண்ணாற் பார்க்க முடி யாது. அதிலும், அரிதாகி யாதொரு பிரிவில்லாமல் உயிர்க்குயிராய் வாக்கு மனோதீதராய்க் குணங்குறி நீங்கி யாதொரு வாதமும் அற்று போக்குவரவு கடந்த புண்ணிய சோதியைக் காட்டியருள்கின்ற ஞானாசா ரிய னுடைய திருவடியே, பொருளெனக் கருதா தவ னுக்கு ஒன்றையும் உணர்த்துதல் கூடாது. சலத்தை நீக்கிப் பாலை உண்ணுகின்ற அன்னத்தைப் போல, உறுதியை யுணர்ந்தும், கிளியைப் போலச் சொல்லி யதை உறுதியாய்க் கொண்டும், பசுவைப் போலக் குரு மொழியின் நுட்பந் தெரிந்தும், மேற்கோளையடைய விரும்பியும், ஆசா[illegible]யின் கீழே

MAHAMAHOPADHYAYA
DR. U.V. SWAMINATHA IYER LIBRARY

இருந்து மேற்கூறியுவைகளைப்போலப் பழகுபவர்க்கேயன்றி மற்றையர்க்கு உரைத்தலும் பழுதாகும். சிரிப்பை மேற்கொண்டவனும், ஆசானைப் போல ஆசனத்தி லிருப்பவனும், ஆசானுடைய உத்திரவில்லாமல் அவன் பொருளைக் கவர்தலும், ஆசான் வாக்கை மறுத்தலும், அவரைக்கண்டா லெதிர்சென் றழைத்து வந்து, ஆசனத்தமர்த்தி வணங்காதவனும், அவரிடத்திற் கடுஞ்சொற்பேசுபவனும், நித்திரை செய்வோனும், பேதையனும், மறதி, சினம், காமம் ஆகிய இவைகளையுடையவனும், ஆகிய இயல்புடைய மாணாக்கனுக்கு உபதேசிக்கின், களர்நிலத்திற்போட்ட விதைக்குச் சமமாகிவிடும். கோட்டில் வாழுங் குரங்குகள் கல்லெறிபட்டவுடன் பதிலுக்கு எறிகின்ற விளாங்கனியைப் போலாது, பல இடங்களிலும் படர்ந்து கிடக்கும் பச்சிலையைத் தேடியலைகின்ற ஆட்டைப்போல ஒவ்வொரு ஆசானிடத்திற் போய் அலையாது, மான்காட்டி மான் பிடிக்குந் தன்மையைப்போல, மானிட சென்மமாகக் கடவுள் எழுந்தருளித் தம்முடைய குற்றேவல்களை, நான் செய்ய வந்திருக்கிறார் என்று எண்ணுதவனுக்கு யாதொரு உபதேசமுஞ் செய்தல் தவறும். மாட்சிமை தங்கிய மாதவ முனிவர்காள்! தாழ்ச்சியைக் கடந்த சான்றீர் சான்றீர்? ஆசானிடத்தில் அமைந்திடு மன்பீர்! ஆசாற்கிசைந்த அரும்பெருஞ் சீடர்காள்! ஆசானடிகட் கரும்பிழைசெய்யும் பேதை மாணாக்கன் பெருநர கடைவான். பரமற் பிழைத்தோன் பரிகாரத்தால், நல்லோனாகி ஞானமெய்துவான். ஆசாற் பிழைத்த அதிபாதகத்தான் தெய்வத்தாலுஞ் சிறப்பினையடையான்.

முன்னொரு காலத்தில் ஒரு அரசன் குருவுக்குத் தவறு செய்து, கொடியவனுகிக் கடுஞ்சாபம் பெற்றுக் காழி வந்தடைந்து, ஞானவானுகி, ஊனமில்பதவியை உற்றகதையைக் கடைந்த தெள்ளமுதுபோல் கழறுவன்! முனிவீர்காள்! களிப்புடன் கேளீர்!

கலிங்கநாட்டில் சிங்கக்கொடியினனுகிய ஒரு அரசன் தன்குலகுருவாகிய வெகுசுருதமுனிவரைப் பார்த்து, சுவாமீ! அடியேன் அசுவமேதயாகம் ஒன்று செய்ய விரும்புகிறேன் என்றலும், முனிவர் அரசனே! புத்திரனில்லாமல் அந்த யாகஞ் செய்தல் கூடாதாகையால் புத்திரனை நாலு வருஷத்திற் பெறுவை! பெற்றபின்னர் நானே நீ விரும்பிய அசுவமேத யாகத்தை உன்னுடன் கூட இருந்து முடித்துவைக்கிறேனென்று சொல்லிவிட்டு வசிட்டருடைய ஆச்சிரமஞ் சென்றுர். அப்பொழுது அரசன் குலகுருவின் வார்த்தையை மறுத்தவனுய் இரதிதரமுனிவர் முதலியவர்களைக்கொண்டு அவ்வசுவமேத யாகத்தைச் செய்ய, அது தெரிந்த குலகுருவும், அரசனேடு கோபிக்காமல், திரும்பித் தன்னுடைய ஆச்சிரமத்துக்கும் போகாமல் வசிட்டரோடே கூடிக்கொண்டு நெடுநாட்டங்கி விட்டார். பின்பு அரசன் செய்த யாகமும் முடிவுபெருமல், கஷ்டப்பட்டு இறக்கவும், யமதூதர்கள் வந்து வருத்தி, கொண்டுபோய் பதினுயிரம் வருஷம் துன்புறுத்தினுர்கள். நரகவேதனையெல்லாம் முடிந்த பின்னர், பூமியில் வந்து பேய்ரூபமடைந்து, இமயமலைச் சாரலில் அங்குள்ள ஜீவகோடிகளை இம்சித்துக் காலங் கழித்து வருகின்ற தருணத்தில், அப்பேய் ஒரு நாள்

தனித்திருந்தழுழி, சிறிது பூர்வவுணர்ச்சி தோன்ற, குல குருவைத் தியானித்துக் கொண்டு,தான் செய்த குற்றங் களைச் சொல்லிச் சொல்லி வருந்துவானாயினன். அவ் வாறு வருந்துகின்ற பேய்க்குறையொலி வசிஷ்ட ருடைய பரணில் இருக்கின்ற வெகுசுருதமுனிவர் செவியிற் பட்டமாத்திரத்தில், இரக்கமுடையவராகி, சீரெலென எழுந்து, எதிர்வருகிறபொழுது, அவ ருடைய திருமேனியிற் பட்டுவரும் இளங்காற்று அப் பேய்த்தலைவன்மேற் படவும் நல்லறிவுண்டாக, ஆசான் எதிரில் வந்தவுடன் சிரசின்மீது கைகூப்பி குருவி னுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, அடிகாள்! என்குல தீபமே!கிருபா சமுத்திரமே! அடியேன் செய்த குற்றத்தை நீக்கி இப்பேயுருவங் கழிய,பின் சுத்தனுகு மாறுள்ள கதியை அநுக்கிரகம் செய்வாயென வணங் கிப் பிரார்த்திக்க, அக்குருவானவர் அவனுடைய வருத் தத்தைச் சகிக்காதவராய் கடவுளைத் தியானித்துச் சொல்வார்:—

பரதகண்டத்தில் சோழநாட்டில் காவிரிநதியின் வட எல்லையிலுள்ள பிறவிப் பிணி மருந்தாகப் பேசப் படும் புகலிப்பதி சென்று வடமேற்றிசையில் இரண்டு கோல் தூரத்திலுள்ள இராகுவினுல் முன்னர் அமைக் கப்பட்ட தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, ஆலயத்துட் புகுந்து, பிரமதீர்த்தத்தில் மூழ்கிப் பிரமேசரையும், திருநிலையழகியையும், பெரியநாயகி சமேத தோணி யப்பரையும், சட்டநாத சுவாமியையும் நமஸ்கரித்துத் துதித்தால், இக்குற்றம் நீங்கும் என்று அப்பேயுடன் சொன்னதன்றி, உடனே அப்பேய் வடிவமாகிய சிஷ்ய

அரசனுக்குச் சுத்தோர்தகங்கொடுத்து, தாகத்தை மாற்றிப் பதினைந்துநாளில் உடனழைத்துக்கொண்டு, சோழநாடணுகி, பொன்னிநதியில் ஸ்நானஞ்செய்து இளங்குழந்தையின் நோய் நீங்குமாறு தாய் மருந்தை உண்ணுதல்போல, அவன் பேயுருவம் நீங்குமாறு அந்நதிக்கு வட எல்லையிலுள்ள பிரமபுரம் வந்து, ஆலயத்துட்புகுந்து பிரமதீர்த்தத்தில் மூழ்கிப் பிரமநாயகரை விதியாற் பூசித்து, வணங்கித்துதித்துப் பின்னர் இராகு தீர்த்தத்தில் படிந்து, அந்நீரைப் பஞ்சாக்ஷர மந்திரத்தோடு அப்பேய்மேற் றெளிக்க, சிங்கக், கொடியுடையவனுய் பழையவுருவத்தோடு நின்றான். அப்படிநிற்க அருள்புரிந்த இராகு தீர்த்தமானது சித்தநீராக, அம்முனிவர் சித்தராக, நீர்த்துளிகள் குளிகையை ஒக்க, அப்பேய் குளிகை படுவதற்கு முன் இரும்பாகவும், உருவம் மாறியபின் குளிகைநீர் பட்ட செம்பொன்னைப்போல அரசனைகவும் செய்தது. கலிங்கநாட்டரசன் அப்பொழுது சந்திரனைப்போன்ற முகமும், புன்சிரிப்போடு கூடிய நகையும், உச்சியிற் றரித்த சுடிகை ஆபரணமும், வாகுவலயமும், எழுவை யொத்த தோளும், ஈகைத்தொழில்புரியும் இருகரமும், செழுமையான இருவிழியும், மன்மதனையும் வென்ற அழகும் வாய்ந்து பொலிவு பெற்றுநின்ற காக்ஷியை யாவர் தாம் புகழவல்லவர்கள்? உடனே அவ்வரசன் பின்னரும் அத்தீர்த்தத்தில் மூழ்கி இராகுவாற் பூசிக்கப்பட்ட சிவலிங்கத்தையும் துதித்துத் தன் நாடடைந்து ஆசானைக் கொண்டு அசுவமேதயாகம் செய்து முடித்து இராசராசனைவிளங்கினன். அவ்வரசன் ஆசாற் பிழைத்த

அருவினை கெடுத்த புகலிப்பதியின் புண்ணிய மூர்த்திக்கு, நாடியே கோடி பொன் ஓடி வந்தளித்து, குலகுரு முன்னர் நலமுறநின்றான். பின்னர் அவனருள் பெற்று, அநேக நாள் வாழ்ந்து சிவபதம் பெற்றுச் சிவானுபவப் பெருவாழ்வடைந்தான். ஓ முனிவர்காள்! புரட்டாசி மாதத்தில் மாளயபக்ஷ அமாவாசையன்று அவ்வரசன் இராகு தீர்த்தம் மூழ்கி வேந்தர் வேந்தனாகிச் சகல பாக்கியமும் பெற்று, ஆக்ஞா சக்கரத்தைச் செலுத்தி, அருங்கதி பெற்றமையால், நீவிரும் அம் மாசத் திதியில் அந்நீர் மூழ்கி, அருவினை நீங்கி, அமலமாகி, அரனருள் பெற்று, அநுபூதிமான்களாகுவீ ரென்று அருமறை தேர்ந்த ஆசாரிய மூர்த்தியாகிய சூதபுராணிகர் சொல்லியருளினார்.

குருத்துரோக விமோசன வத்தியாயம்

முற்றிற்று.

---

பன்னிரண்டாவது

## சண்பை யத்தியாயம்.

---

தொழுகுலத்துதித்த சூத புராணிகீர்! அருங்கதி காட்டும் அருட்செல்வமே! ஆசா னிலக்ஷணமும், சிஷ னிலக்ஷணமும், தெருட்டியருளிய தேசிக மூர்த்தி! உரவோனாகிய குரவசிகாமணீ! என்று, பெருந்தவஞ் செய்யும் திருந்தும் அம்முனிவர் வேண்டுகோட் கிணங்

கித் தாண்டவா கொண்டு சண்பைநாமக் கதை சாற்று
வார் சூதர்.

கிருஷ்ணரானவர் முற்காலத்தில் பாண்டவர்
களுக்கு பாகம் பல புரிந்து பாரத யுத்தத்தையும் பின்
னர் முடித்து, அதனால் பூமி பாரத்தை நீக்கித் தன்னுல
கடைவான் எண்ணி, நம்மோடு கூட உறவினர் பலர்
இருப்பின் தீங்கு வருமே; அல்லது அவர்களை யெல்
லாம் அழித்தால் உலகம் பழிக்குமே என்று உளத்திற்
கொள்ளுங்கால் சூரிய கிரகணகாலம் வந்தது. அப்
பொழுது பிரபாத நதியில் ஸ்நானஞ் செய்யுமாறு
சதுரங்க சேனைகளோடு கிருஷ்ணர் வந்தார். அங்
ஙனம் ஸ்நானஞ் செய்யவந்த பிராமணக் குழாங்களி
னுடைய பூஜா நியமங்களைப் பார்த்து, அவர்களைப் பரி
காசஞ் செய்யுமாறு கிருஷ்ணரின் உறவினராகிய யாத
வத் தொகுதியினர்கள் தங்களுக்குள்ளே அழகுடைய
சாம்பனுக்குக் கைந்து வளையிட்டு, நற்புடவை யுடுத்தி,
பந்திறைற் றனமும் பொருத்தி, கர்ப்ப ஸ்திரீ என
மதிக்குமாறு வயிற்றில் பல கந்தற்றுணிகளையும்
திணித்துக் கட்டி, கூந்தலைச்சீவி முடித்து, நடக்க
முடியாமற் றவிப்பவளைப்போல மெதுவாக நடத்திக்
கொண்டு ஒருபக்கத்தில் இருக்கவைத்துச் சுற்றித்
திரையிட்டு, ஸ்நானஞ் செய்ய வழியிற் போகும் வை
திகப் பிராமணர்களைக் கூப்பிட்டு, ஓ மறை விற்பன்னர்
களே! திரிகால முணர்ந்த சிவ வேதியர்களே! இக்
கர்ப்ப ஸ்திரீ பெறுவது ஆணோ பெண்ணோ வென்று
அறிந்து சொல்லுங்கள் எனக்கேட்க! அவ்வந்தணக்
குழுவுள் கபில முனிவர் பார்த்து, திருப்பாற் கடலில்

தோன்றியும் அழுக்கையே யுண்ண விரும்பும் மீனைப் போல, கிருஷ்ணரின் உறவினராகிய இவர்கள் நயமை யறிவினர்களாயினார்கள் என்று அறிந்து, ஒ யாதவர் களே! இக்கர்ப்பஸ்திரீ வயிற்றினின்றும் நீங்களும், நுங்கள் வம்சத்தினர் யாவரும் அழியும்படி ஒருலக்கை தோன்றுமென்று சொல்லிப் போந்தனர். பின்னர் அக் கபிலமுனிவர் சாபமிட்டவாறே அச்சாம்பன் வயிற்றிலிருந்து இடிவிழுந்தாற்போலே படியினிற் றிடீரென வீழ்ந்தது. அங்ஙனம் வீழ்ந்ததற்கு உவமை யென்னவெனின், பாம்பானது அமாவாசைத் திதியி லேயே இருசுடர்களையும் விழுங்கி, யாதவகுலத்தையும் விழுங்கும்படி படத்தை மறைத்துக்கொண்டு பூமியில் இறங்கி வருதலை யொத்தல்தான். நிற்க, அந்த யாத வர்கள் அந்த வுலக்கையைக் கண்டதும், பயந்து தெ ளிந்து குடாரியினால் வெட்டித் துகள்பண்ணி நீரிலே கரைத்துவிட, அத் துகளெல்லாம் ஒவ்வொரு வேலையும் வாளையும் ஒத்த கோரைப்புல்லாக வளர, பின்னொரு காலத்தில் மடமையினால் ஒருவர்க்கொருவர் அச்சாபப் படி அக்கோரைப் புற்களைப்பறித்து, அடித்துக் கொள்ள, எல்லாரும் மாய்ந்தார்கள். இதனால் "வல்ல வன் கைப்புல்லும் ஆயுதம்" என்னும் பழமொழியை உண்டு பண்ணினார்கள். அதுகண்ட கண்ணன் நான் நினைத்துக்கொண்டு இருந்தவாறே முடிந்தது. ஆயி னும், அச்சாபம் தன்னைத் தொடராவண்ணம் சிவ பூஜை செய்வேன் என்று முற்காலத்தில் பகீரதன் பூஜித்து வணங்கிய பிரமபுரநாதரை யானும் அடை ந்து பூசிப்பேன் என்று, பாண்டவர்களை ஆங்கே நிறுத்.

திப் பெண்கள் சூழப் பிரமபுரம் அடைந்து, ஆலயம் புகுந்து, பிரமதீர்த்த மூழ்கிப் பிரமேசரைத் திரிபுர சுந்தரியோடு வணங்கிக் கோயிலுக்கு வாயுதிசையில் மூன்று கோல் தூரத்தில் காற்சக்கரத்தில் தீர்த்தடஞ் செய்து, அந்நீர்கொண்டு அமலனை யபிஷேகித்துப் பூஜித்து, வெண்ணீற்றால் மேனி விளங்கச் செய்து, உருத்திராக்ஷத்தைத் தரித்து ஐம்பதம் தியானித்து, ஒருவருஷம் அருந்தவம் புரிவான் முன்னர், கடவுள் உமாதேவியொடு செல்ல, கண்டு வணங்க, விரும்பிய தென்னென, கபில முனிவர் சாபம் என்னை நலியா வண்ணமும், உன்றனன்பு குன்றா வண்ணமும், தருவா யென்னத் தான்றொழுதிரக்க, அவ்வாறாக அமலனுங் கொடுத்தே, சண்பை (நாணல்) உன்னைத் தான் தொடராது. அன்றி எல்லார்க்கும் அறிவினில் விளங்கச் சண்பை எனப்பெயர் தலமிது விளங்குக, என்றே யருளி யிறைவன் மறைந்தான்.

பின்னர், அக்கிருஷ்ணர் காழிநகர்க்கு உத்தர திசையில், இரண்டு கூப்பிடு எல்லை தூரம் ஓரிடத்திற் றெய்வதீர்த்த மொன்று, சிறப்பாறச் செய்து, சந்திர சேகரனைத் தாபித்து, அருச்சனை துதிகள் அன்பாற் செய்து, கோடிதானம் குலவக் கொடுத்து, ஆயிரங் காலம் அருந்தவம் புரிந்து அநுக்கிரகஞ் சிவன்பாற் பெற்ற அச்சிறப்பானும், இறைவன் வந்து வரந் தரலானும், சண்பை எனப்பெயர் தான் பெறலானும், புடவி தன்னில் நடமிது சிறந்தது. மாசித்திங்கள் முழுவதும் நேசித்து, இத்தடம் மூழ்கிற் சித்தத்து எண்ணிய எண்ணமெல்லாம் திண்ணமாய் எய்தி, முத்

திக்கரையை நத்தியே யடைவர். மூந்நாள் அந்நீர் மூழ்கி அடியார்க்கு அன்னதானஞ் செய்தார் அரிசிக் கோராண்டு அருஞ்சிவலோகம் வீற்றிருப்பார். ஐந் தாம் எழுத்தை ஒருக்கால் ஓதின் ஒரு கோடிதரம் செ பித்த பலனை யடைவார்கள். மாசி மாதம் முழுவதும் இந்நீரில் மூழ்கினவர்கள் பெரியார் சாபம் பலவும் நீங் கிச் சிவபதம் அடைவார். முன்னாள் கைலையில் பரம சிவனார் விஷ்ணுவுக் குபதேசித்த பஞ்சாக்ஷரத்தை இத்தடாகத்தில் உச்சரிப்பவர்கள் சீவன் முத்தராவார். ஞானதேசிகரருளால் பிரணவத்தோடு ஆம் ஆடுறழுத் தைச் செபிப்பார்க்கு விரும்பிய இடம் யாதெனில், ஆசானெதிர்ப்பட்ட இடம் ஒன்றே போதும். அல்லா மலும், சுயம்புலிங்கம் முதலிய ஐவகை லிங்கங்கள் தோன்றிய இடமுமாம். காசி, பிரயாகை, கயை, ஸ்ரீசைலம், ஸ்ரீகாளஸ்தி, கச்சி, தில்லை, மாயூரம், திருக் கழுக்குன்றம், திருஅண்ணுமலை, திரு இடைமருது, குடமூக்கு, திருவையாறு, விருத்தாசலம், திருவெண் காடு, திருக்கடவூர், திருமறைக்காடு, திருக்கோடிகா, திருக்கோகர்ணம் இந்தத் தானங்களிலும் ஐந்தெழுத் தை உரைத்தல் வேண்டும். சுப்பிரமணியர், சிவபெரு மான் வேலைச் செய்கின்ற திருநந்திதேவர், இவர் சீடர்கள் இவர்கள் உபதேசித்தால் பெற்றுக்கொள்ள லாம். பிரமபுரத்தின் கண்ணே வீற்றிருக்கும் ஒப் பற்ற முழுமுதற் கடவுள் ஞானசாரிய வடிவமடைந்து உண்மைப் பொருளை உபதேசித்த காரணத்தால் சிவா சாரியார்புரம் எனலாம். இன்னும் முனிவர்களே! கேளுங்கள்! ஆதிசைவர்களாகிய சிவப்பிராமணர்கள்

முதல் நான்கு வருணத்தினரும் உபதேசம் செய்யக் குற்றமற்ற திருவருள் ஞானதேசிகராய் விளங்குவார்கள். அவர்களின் திருவடி நீழலின்கீழே தாழ்ந்து வருபவர்களும் வைகுண்ட உலகம் அடைந்து பின்னர் பழித்தற்கரிய மோக்ஷ நிலத்தையும் அநுபவிப்பார்கள்.

ஒரு ஞானமுமில்லாதவரும் காழி நகரடைந்து சிவவேடந் தரித்தனராகில், அல்லது இப்பதியிலுள்ள நாய்க்குப் போசன மிடுவாராகில் அப்போதே ஆசாரியத்துவம் அடைவார் என்பதற்கு ஐயமேயில்லை. நான் சொல்வதிற் சந்தேக மிருந்தால் என்தலை வெடித்துப் பூமியிற் புரளுக. இங்ஙனம் யான் சபதங் கூறியது என் மனச்செருக்காலன்று. மற்றென்னை யோ வெனின், முன்னாள் கௌடதேசத்தரசனுக்கு இப்பதியில் வீட்டில் வளர்ந்துகொண்டு இருந்த கிளியொன்று பஞ்சாக்ஷரத்தால் அவன் ஆணவமலத்தினைப் போக்கி மேன்மைப் படுத்திய வாற்றால், இந்த க்ஷேத்திரத்திலுள்ள மக்களின் வலிமையின் ஆச்சரியத்தைக் கூறுவது எற்றுக்கென்று விளங்கலா மன்றோ? குருலிங்க சங்கம வடிவமாக எம்பெருமான் இத் திவ்ய க்ஷேத்திரத்தில் வீற்றிருக்கக் கண்டும், இதை அறியாதவராகி, இவ்வுலகத்தில் விளக்குக் கையிலிருந்தும், நெருப்புக்கு அலைவார்போல மயக்க முறுகின்றார்கள். இந்த க்ஷேத்திரத்தில் பூதானங் கொடுத்தவர்கள் புண்டரீகன் தானத்தையும், கன்னிகாதானஞ் செய்தவர்கள் கண்ணனுந் தானத்தையும், பிராமணர்களுக்கு யாதானும் ஒரு தானங் கொடுத்தவர் உருத்திரர் தானத்தையும், கோதானங் கொடுத்தவர்கள்

சிவபெருமான் தானத்தையும் சித்தமாயடைகுவார். இத்திருப்புகலியின் வரலாறு எல்லாம் சொல்லப்புகின், „சிவபெருமானே விரித்துச் சொன்னாலன்றி நம்மால் முடியுந் தரத்ததோ! என்று வாதராயணன் மலரடி மறவாச் சூத புராணிகர் சொல்லியருளினார்.

சண்பை யத்தியாயம்

முற்றிற்று.

---

பதின்மூன்றாவது

## கொச்சை யத்தியாயம்.

---

இழுதகைமையாட் டுழவலம் புடையீர்! முழும திக்காகர முன்னருள் மேலாய்! கண்ணனார் சரிதம் கழறிய தலைவா! கொச்சையெனும் பேர் குறித்திடும் பதிக்கு இச்சகந் தன்னில் எய்தியகாரணம் உரைத்திடும் என்றே விரித்திடும் ஆசையால் விண்ணப்பித்த எண்ணத்தவர்க்கு மருண்மலம் மருள அருள்வார் சூதர். „

பிரமதேவரை யொத்த முனிவர் பெருமானும் வசிட்டருடைய மாதவம் போல் வளர்கின்ற சத்திய முனிவரின் திருக்குமாரருமாகிய வேதவிற்பன்ன பராசரர்மேனாளில் தலங்கடோறுஞ் சென்று, தீர்த்த யாத்திரையும், மூர்த்தி தெரிசனமுஞ் செய்து கொண்டு கடைசியில் கௌதமியாற்றில் ஸ்நானஞ்செய்து அவ்

வாற்றைக் கடக்கக் கருதி, ஓடஞ் செலுத்தும் மீகா மனைக்காணாது அமிர்தமொழியும், தமிழ்த் தென்றலைப் போலசைசையும் இடையுமுடைய ஒருவலைஞ ஸ்திரீயைக் கண்டார். கண்டதும் எ நங்காய்! இவ்வோடஞ் செலுத்துநர் யாவர்? நீ சமர்த்தியேல் இக்கணமே விடு வாயாக எனலும், அப்பெண் சுவாமீ! ஆயிரவர் ஒருங்கு சேர்ந்தால் அன்றி, இந்நாவாய் விடலரிது என்றாள். அதற்கு அவர் ஏ பெண்மணீ! ஆயிரவரின் அரும்பார த்தை யான் ஒருவனே கொள்வல். தாமதியாது உடன் உய்ப்பாய் என்றார். கோலை ஒரு பக்கத்தும், குடத்தை ஒரு பக்கத்தும் ஆக இருதலையும் வைத்து மச்சகந்தி யாகிய பெண்ணோடு தானும் கடக்கும் சமயத்தில், மன் மதனைவன் புஷ்பபாணங்களினால் பராசரரை வருத்த, ஆற்றாதவராகி, வலைஞதலைதீபத்தைப் பார்த்து, அழகு மிகுந்த ஆனந்த மயிலே! ஆற்றைக்கடத்தற்குரிய ஓடத் தைச் செலுத்துதலில் நீ வல்லை! மன்மதன் போர்க் கடலைக் கடத்தற்கு நீ ஓடமாகவும் இருக்கின்றனை! உன்னை இப்பாரில் ஒப்பார் யாண்டுமில்லை. உன்னோடு மன்மதன் போர்க்கு எழுமுயன்றால், அவனுடைய சது ரங்க சேனைகளுள் யானைபாகிய இருள் உன்னுடைய குறுநகை நிலவால் மறுகியே ஓடும். மீனக்கொடியோ உன் அன்ன நடையால் அழியும். தென்றற்றேரோ உன் ஒசிகின்ற இடையால் நசித்துப்போம். சந்திரவட்டக் குடையோ உன் தந்திரதனத்தால் அந்தரஞ் செல்லும். கிளிக்குதிரையோ உன் விற்புருவத்தாலே மேன்மை யழியும். நுதற்பொட்டாலே மகரச்செருக்ககலுமென்று இனிய வசனத்தால் கனியச்செய்தும், என் உள்ளக்

கிளர்ச்சியை மெள்ளி அழித்த கள்ளப் பெண்மணீ! எள்ளற்புரியாது! என்றன் அவாவை, வெள்ளக்காம அள்ளல் நீர் கடத்தி என்றும், பிரமன் படைத்த பெண் வர்க்கத்துள் உன்னைக்கண்டு உருகியவர் ஒடிட, அமைந்த அழகை அயனுங்கண்டு, அழுக்காறடைந்து உன்னுடல் என்றும் புலால் மணங்கமழப் பொருந்தச்செய்தான் என்று புகழ்ந்து சொன்னபின், மன்மதன் அம்பால் வாட்டமடைந்து, காமாக்கினியால் கலங்குறும் என்னை விரைமுலைப் புளக மேவுது கொண்டு ஒத்தி, இலவிதழ்போலும் வாய் மருந்தூட்டி, வளையணி கரத்தால் தளையெனப் பிணித்துப் புதுமணஞ் செய்தால், பெண்ணே! உன்னுடல் நறுமணங்கமழ நானினிச் செய்வன், எனச்சொல்லாது சொல்லிக் குறையிரந்து வேண்ட, அம் மச்சகந்தி பார்த்து, தொழுகுலத்துதித்த விழை தரும் மறையோய்! என்று விளித்துப் புன்சிரிப்போடும் புது மொழிதன்னால் என்னை உயர்த்தியே யிச்சைகொளலாமோ? முடைமணங் கமழுங்கடையளாம் என்றன் தடமுலை மயங்க மடமதிகொண்ட மாப்பெருந்தவத்தோய்! என்னைப் பெற்ற அன்னையுந் தந்தையும் மற்றும் உறவினர் சுற்றியே நிற்பார். அவர்கருத்து என் என்று அடியேன் அறியேன், ஆதலால் காந்தர்வ மணத்தால் என்னைக் கலந்திட, மறுமுடை மணம் போய் நறுமணங் கமழ, வித்தகா! செய்தால், சித்தத்தெண்ணம் முடியும் என்றே கொடியும் மொழிந்தனள். உடனே பராசரர் தன் தவவலிமையினால் மச்சகந்திப் பெயர்தான் மறையப் பரிமள கந்தியெனும் அபிதானம் விளங்கச் செய்து, அவளின் குரும்பைநேர் முலைகள் குழையத்தழுவி,

முகத்தோடு முகந்தான் இறுகப்புல்லி, அதரபானமுதல் அன்பாற்பருகி, பெண்மணிமயங்க லீலைகள் பலவும் கருத்துடன் முடித்துத் திருத்தமாய் இன்பம் பெற்று மகிழ்ந்தார் பெருந்தவமுனிவர். உடலிரண்டென்ன, உயிரொன்றாக, நாவாய் நடுவில் நல்லிளம் பெண்ணும் பாராசரமுனிவரும் பண்புடன் கூட, அப்பொழுது, குற்றமற்ற குணமுந், தவமும், சொற்றிடு மறுவும், தொழுதகு வேள்வியும் நான் மறையங்கமும், நன்றாய் ஓர்ந்த ஒரு பெருந்தனயன், உயிர்கட்கருள்வான், மச்ச கந்தியின் அச்சமார் வயிற்றில் அச்சகமகல, விச்சாகர னாய் மண்ணவர்வாழவந்து பிறந்தான். வந்தகுமரனும் தந்தையைத் துதித்துத் தயங்கியே நிற்றலும், மயங்கிய நாரி முனிவரைப் பார்த்துத் தனிவருஞ் சேயைத் தருதியென்று வருந்த, அவ்வழி, முனிவன் அறைகு வான் மங்கையே! நீ வேண்டிய காலத்து ஈண்டு இவன் வருவான்; உன்னிடம் அளிப்பின் உன் கன்னிமைக்கு இழுக்காம் ஆதலின் என்னுடன் விடுதி என்று உரை த்து, அவள் முற்கதையை அன்பாய் மொழிவார். என் னெனின், யாழ்வழி குலத்தே வசு எனுந்தலைவன் வைய மேற்கொண்டு வான்வழிச் செல்லுங்கால் மனைவியை நினைக்க, அப்பொழுது உடனே தாதுவும் இளகி இவ் வாற்றின் நடுவில் வீழ, நாடியே ஒரு மீன் விரிப்பம் விழு ங்கலும், சீரிய அதன் வயின் பெண்மணி நீயும் பிறந்து வளர்ந்தாய். திரிகாலத்தினையும் அறிகின்ற ஓரியல்பால் உன்னிலக்கணமறிந்து உன்னை மணந்தேன். ஆதலின் வருந்தேல்! உன்னால் ஐவர்கள் (பாண்டுபுத்திரர்) அழ கிய சேயாக முடிபுனைந் தரசாய்ப் பூமியில் வரு

வார். பாரத வம்சத் தரசனும் சந்தனு உன்னை மணக்க, உயர்ந்த சித்திராங்கன், சித்திரவீரியன் ஆகிய இருவரைப்பெறுவாய்; அவர்களும் காசி அரசன் புத்திரிகள் இருவரை மணந்து அரும் உயிர்நீங்க, முன்னவனிவனால் தன்னிகர் புதல்வர் திருதிராட்டிரன், பாண்டு, விதுரன் மூவரைப் பெறுவித்து எவரும் மகிழ வாழ்வாய் என்று மாதவனவனும் வெதிரிகாச் சிரமம் மேவினன். ஆண்டுறும் முனிவர் ஈண்டுறு மிவ ரைநாடியே நலமெலாங்குறையக் கன்னி காமிக்கள்வனு மிவன்றன் வருவதை அறிவீர் அறிவீரென்றே வாச கங்கேட்டலும், மாசுகொள் முனிவனும் இப்பழிகொச் சை என்னைவிட்டகல, அப்பெருமானை யன்புடன் பணி வேனென்று, காழிநகரடைந்து, முன்னவன்மலரோன் தடத்தினில் மூழ்கிப் பிரமேசரையும், திரிபுரசுந்தரி யையும் வணங்கி, ஆலயத்தின் வடபிராகாரத்தில் தன் பெயராலே கூபமொன்றியற்றி, ஆங்கே யீசனையமைத்து, அபிஷேகித்து, ஐம்பதம் போற்றி, அருந்துதி செய்து, பன்னிருவருஷம் வன்னி (தீ) மத்தியின் மாதவம் புரிய, சோதியுந்தோன்ற, வணங்கித்துதிக்க, வேண்டியுதுயாதென, மாறண்டகுமூர்த்தி! என்னைத் தொடர்ந்த கொச்சையாமிப்பழி, அழிந்தே போக அருள் குவை என்ன, அமலனு மளித்து, அச்சமார் கொச்சை யகல்வத னிமித்தம் இப்பதிதானும் கோச்சை என்ற பெயரால் விளங்குக என்று விளம்பிமறைந்தார். இப் பராசரதீர்த்தத்தை வணங்கித் துதித்து இவ்விடத்தில் நெற்றுணங்கொடுத்தவர்கள் ஒவ்வொரு நெற்கு ஒவ் வொருவருஷம் கைலையில் சாரூபம் பெற்று இருப்

பார்கள். பிறர்மனை விழைதல், புலாலுணல், கள்ளு ணல், பெரியோர்களைக் கடுற்சொற்பேசல், கூடா நாளிற் றலைவியைக்கூடல் முதலியவற்றால் வரும் பாவமும், மற்றைவினையும் சொற்றிடும் இக்கூபத்தில் மூழ்கிய வுடனே மாழ்கிப்போகும். அன்றியும், சிவலோகத்தில் நூற்றெட்டு தலைமுறை வாசஞ்செய்வார்கள். சித்திரை விஷு, ஐப்பசிவிஷு, உத்தராயண, தக்ஷிணாயன, கிர கண புண்ணிய காலங்களில் இதில் ஸ்நானஞ்செய்து பிதிர்க்கடன் முடித்தவர் மேல்வீடடைகுவர். இக்கலி யுகத்தில் ஈதையிறைற்றன் மோக்ஷமெய்தலாம். இப் பராசரேசரின் பெருமைகூற நம்மால் முடியாது. பரா சருக்குக் கொச்சை போனமையால் கோச்சையம்பதி எனவும், அவரால் வணங்கப் பெறுதலால் பராசர க்ஷேத்திரம் எனவும் இக்காழியைச் சொல்வார்கள் என்று சூதபுராணிகர் சவுனகாதி முனிவர்கட்குக் கொச்சை நாடவரலாற்றைச் சொல்லியருளினார்.

கோச்சை யத்தியாயம்

முற்றிற்று.



பதினைந்தாவது

## கிளி யுபதேசித்த வத்தியாயம்.

செவிக்குறு வொன்றே தேவையென் றைம்
பொறி அவித்திடும் முனிவர்காள்! அருதினம் எண்ண

லால் இன்னமுங் காழியினெழில் பெறுகதையொன் றுன்னரு மன்பாலுரைப்பேன் கேளீர்.

கவுடதேசத்து அரசனாகிய கோவிதாரத்துசன் என்பான் செங்கோலோச்சி அரசுபுரியுங் காலத்தில், ஒருமுனிவர் அரசகொலுமுகத்து வந்து ஒரு நாழிகை யளவும் நின்றும் அரசன் எதிர்கொண்டு வழிபாடு செய் யாததால் முனிவர் செல்ல, அவரைப் பிழைத்த அதி பாதகத்தான் யாவகை நிதியும், சுருங்கியே வரவும், வறு மைமேற்கொள்ள, மலரவள் மறைப, பிரமப்பேய்தான் பின்தொடர்ந் தழுத்த, வருந்தினனாகித் திரிந்திடும் பொழுது, நாரதமுனிவரும் நாடியே வரலும், அந்நகர்க் காவலன் மனைவி பதுமமாலினி எதிர்கொண்டு ஐயாவெ னப் புகழ்ந்திறைஞ்சிப் பாத நீரைப் பருகியே, அவர்க்கு நல்லமுதூட்டி நயமொழிகூறி, குறையிரந் திருவிழி வெள்ளநீர்பாய, குணமலை முனிவர் முன் குலைந்து வருந் தினள். அப்பொழுது முனிவர் ஏன் வருந்துகிறாய் என்ன, நாயகனுக்கு நேர்ந்துள குறையைக்கூற, அத் தருணம் ஞானம் அடைந்த அரசன் முனிவர் அடி பணிய, இன்று என்னை மறியாதிருந்ததுபோலவே முன்பும் முனிவரொருவர்பால் தவறு செய்தனைபோ லும் என, நாரதர் வினவ, ஆம் என அரசர்கூற, அப்போது அருந்தவமுனிவர் பெரியோர்ப் பிழைத்த பெருந்தவற்றாலே மறைப்பேயடைய, தாயிலாச் சிசு போல் முகமலர்வாடி உன்னரசு இழந்தாய். அருஞ் சிவயோகிகள் அருவருத்தொழித்த பொருளை மதித் தே செறுவமடைந்தாய். சிவயோகிகள் சேர்ந்த இடம் சிவதானமென் றறியாயோ? கங்கை முதலிய

தீர்த்தங்களில் ஆடிய பலன்களெல்லாம் ஞானிகள் அடி யில் விழும் ஒரு துளியால் எய்தும் என்பது இதுவரை நீயும் அறிந்திலே கொல்லோ? அரசே! அரசே!! வருந்தலே! வருந்தலே!! விருந்தாக வந்தயோகியைப் போற்றுனின், இல்லறத்தினன் செய்யும் அறங்களை யிழந்துவிடுவான். அவரைப் பூசித்தால் முனிவர்தேவர் ஜனகாதியர்கள், வசுக்கள், மும்மூர்த்திகள் முதலியோர் களைப் பூசித்தபலன்களை யடைவான். சிவபெருமான் கண்ணிமையளவு கொன்றையினிடத்தும், அதனுக்கி ரட்டைப்பொழுது வில்வத்து அடியிலும், கடிகைநே ரம் இலிங்கத்துமையும், ஒருமாத்திரைப்பொழுது அர சன்பாலும், எக்காலத்தும் யோகிகளிடத்தும் எழுந்த ருளியிருப்பார். இவ்விதமறியாது, இப்பழி தேடி ஞய். இப்பழைப் பழிகெடக் காழிப்பதி செல்? எல்லாவி னையும் எளிதில் ஓடும். ஆண்டுச் சென்று ஆலயம் புகு ந்து பிரமநீராடிப் பிரமேசரையும், திருநிலை நாயகியை யும் துதித்து, ஐம்பதத்தை யன்புடன் உச்சரித்தால், பிரமகத்திமுதற் பேசரும் வினையெலாம் சூறைமுன் பஞ்சுபோற்றொலைந்தே போகும் என்று மொழிந்து, இருந்தவன் மறைய, மன்னவனும் கொச்சை நகர டைந்து வீதிவலம் வரலும், பொதுமகளிர் ஒருத்தி வீட் டில் பஞ்சாக்ஷரத்தின் ஒலி காதில் உறக்கிளிதான் மொ ழிந்ததைக் கண்டு கேட்டலும், வினைய்து நீங்க, தேசி க்கிளியின் றிருவடி வணங்கிப் பலமுறையும்உபதேசம் பெற்று, முத்தியடைந்த சித்தன்போல ஆலயத்துட்புகு ந்து, அயன் தடம் மூழ்கி, மூவுருவத்தை முறையாற் பணிய, முன்வடிவ மடைந்து மன்னவனுகித் தானவகை

யெலாந் தப்பறச் செய்து, கொச்சைப் பதியை மெச்சியே திரும்பித் தன் நகரடைந்து, முன்னரசியற்றி, முன்னருங்கதியை மன்னவ னடைந்தான். அம்மறிணைப் பொருளா மருஞ்சுகங்குருவாய் வந்து ஐந்தெழுத் தன்பால் அருளிய திறத்தால் இப்புகலிச்சீர் செப்பருந்தகைத்தோ? எனச் சூதபுராணிகர் கிளியுபதேசச் சரிதத்தைச் சவுன காதியர்க்குச் சொல்லியருளினார்.

கிளி யுபதேசித்த வத்தியாயம்

முற்றிற்று.

---

பதினைந்தாவது

## வேணுபுர வத்தியாயம்.

---

அங்ஙனஞ் சொல்லிய அப்பெருமுனிவர் புகலிப் பதிக்கே பொருந்திடு வேணுபுரப் பெயர்க் காரணம் வேதவியாசர் சொல்லிய வாறே புகல்வார்.

பண்டைக் காலத்துப் பிரபாகரன் என்பான் ஒருவனுடைய இரட்டைக் குமாரர்களாகிய சூரனும் பதுமனுந் துணைவர்களோடும் வெகுநாள் தவம் புரிந்து பூதங்களாகி வளர்கின்ற காலத்தில் பெரியோர் சாபப்படி அசுரர்களாகி இருவரும் ஓருருவடைந்து தாசிபரிடம் வந்து கொடிய வலிபெற்று அமராவதியை யாளும் இந்திரனோடு போர் செய்ய, இரண்டுருவாகிச் சதுரங்க சேனைகளோடுஞ் சென்று

யுத்தஞ் செய்ய, இரு பக்கத்துச் சேனைகளும் எண்ணிலர் இறக்க, நாட்பல கடந்த பின் சூரனும் இந்திரனோடு எதிர்த்தான். எதிர்க்குங்கால் சதுரங்க சேனைகளும் ஒன்றோடொன்று தாக்கும்படி சோனைமேகம்போல் பாணங்களை வருஷிக்க, ஒருவர்க்கொருவர் ஒன்றுக்கொன்று எதிர்மறையான அஸ்திரங்களை விடவும், இந்திரன் சூரன்மேற் கோபித்து, தானவர் பிணமலையாகப் பெரிய யுத்தஞ் செய்ய, அச்சூரனும் அவ்வாறே கடும்போர் செய்ய, அது கண்ட மேகவாகனன் சூரனுடைய தேரையுங் கொடியையுங் குதிரைக் கூட்டத்தையுட் அவன் அணிந்த கவசத்தையும் அழித்து அவனுடைய தலையையும் வச்சிராயுதத்தால் அக்கணமே யரிந்தனன். உடனே சூரன் மாயையா லிணங்கிய பதுமனை யடைந்து ஈருருவும் ஒருருவாய்ப் பொருந்தி சூரபத்மன் என்று யாவருஞ் சொல்ல நின்றான். பின்னர் வெற்றிகொண்ட வெள்ளி நாதன் தன்னுலகதனிற் சார்ந்து வீற்றிருந்தான். மற்றி நின்ற மற்றை அவுணர்கள் போருக்கு ஆற்றாது ஊருக் கேகினார்கள். போன காலையில் சூரன் தோல்வியும் இந்திரன் வெற்றியு மிகுந்து பார்த்தவர் எடுத்துப் பேச, அடுத்த சூரனும் கேட்டு வருந்தி வாட்ட முற்று, சிவ பூசனையால் சிறப்பும் வலியும் செல்வமும் பெற்ற தன்மையைக்கேட்டே, அவ்விதம் யானும் அருவலி வாழ்வும் செல்வமும்பெறுவான், குலகுரு இடம் போய் அவரைத் துதித்து ஐம்பதம்பெற்று வெண்ணீறணிந்து, செம்மேனியனாய் மணி வடந் தாழும் மார்பனுமாகி, ஆகமந்தேர்ந்த நடையினனாகி, புக

லிப்பதியடைந்த பொருந்திய உவப்பால், திருக்கோயி லுட் புகுந்து பிரம தீர்த்தத்தாடிப் பிரம நாயகரை வணங்கிஅளவில் காலம் காற்றுணவுண்டு செய்தற் கரிய தவத்தைச் செய்தான். செய்தலும், எம்பிரான் மூங்கி லுருவாய் முன்னே முளைத்து இலிங்க உருக் கொடு சங்கதீர்த்த மொன்று தோன்ற வருள் செய்தார். அத னைக் கண்ட அரும்பெருஞ் சூரன் வேணுவிற் றோன் றிய தாணுவை நோக்கிக் கண்கள் நீர்ததும்பக் கர மலர் கூப்பிப் புளகத்தழுந்திக் கலைகளுய் எங்கும் தோன்றிநிற்கும் சோதியைக் காண்டலும், திருவடி பணிந்து,

பாய்விடை யூர்ந்து பசுங்கொடி புணரும்
பவளமால் வரையினிற் பொலிந்த
தூயவ ளிணைத்தா மரையடி பணிந்து சுந்தரா
போற்றிமா லயன்பால்
மீயுயர் கடவுட் குன்றென முளைத்த வியப்பென
விதியிலேன் காண
மாயிருந் திறலார் வேணுவாய் முளைத்த
வரதனே போற்றியென் றிசைத்தான்.

என வாழ்த்திய அசுரனை ஐயனும் நோக்கி விளம் பிய தென்னென விளம்புவான் சூரன். அச்சுதன் பிரமன் அச்ச மெய்தவும், இந்திரன் வந்தே வந்தனை செய்யவும், மன்னுயிர் எவற்றினும் துன்னியவலியும், ஆயிரத் தெட்டா மண்ட மவற்றை நூற்றெட்டு யுகங் கள் அரசு புரியவும், வச்சிர சரீரமும் வலி கெழும் ஆயுதம் பலவும் எனக்கு உலவா தருளவேண்டுமென் றிரப்ப வேணுவாய்த் தோன்றிய புங்கவனளித்துச்

சங்கதீர்த்தத்தில் படிவனோர் சுந்தர வடிவமும் வலி யும் பெற்றே யோங்குக. கால முடிவினில் கந்தன் வேலால் எம்மிடம் வருவாய் என்று திருவாய் மலர் ந்தார். பார்த்தீரா! முனிவர்களே! சிவ பூசனையால் செல்வமும் வலியும் எனப் பலவரும்பெற்று மகிழ் ந்த பெருங்கதையிதுகாண். வேணுவழியாய் விமலன் தோன்றிய அக்காரணத்தால் வேணுபுரம் என யாவ ரும் மொழிவார். வேறு காரணமும் இப்பெயர்க் குண்டு வருமாறு:—

என்னையெனின், முன்னைநாள் இந்திரன் அரம் பையர் ஆடலில் அறிவினைப் புகுத்தி யமருங்காலையில் ஆசான் வரவே, கண்டு வணங்காக் கயமையை யறிந்து குருவுஞ் செல்ல, செல்வமெல்லாஞ் சிறுக வலியுங் குன்ற, மலரோனையடைந்து யான் செய்த குற்றம் என் னென இரக்க, ஆசாற் பிழைத்த அரும்பழி யென்ற லும், தன் பதியடைந்து, தன் குருவைத்தேட, காணாது மயங்கி விசுவரூபனைத் தற்காலக் குருவாகக் கொண்டு யாகஞ் செய்ய, அகத்தினில் அவுணர் வாழ்க வென்று அழலை ஒம்பும் அவனைக்கண்ட இந்திரன் வாளால் அவன் தலையரிந்தான். அதனைத் தெரிந்த அவனு டைய தந்தை இந்திரனைக் கொல்ல தந்திர வேள்வி செய்ய, அதனில் தோன்றிய விருத்திராசுரனை யனுப்ப, இந்திரன் அவனோடு மந்திர சூழ்ச்சியால் போரினிற் கொல்ல, பொருந்திய குரவர் இருவர் பிழைத்த அரும் பழியுடன் இப்பழியும் சூழ்ந்து வருத்த, அதனல் மெலியும் இந்திரன் முன்னர் அகத்திய முனிவரும் வந்து, நீரும், மண்ணும், நாரியும், தருவும் அருவினை

இவைகளை யடைய வென்றே தீவினைத் தொகுதியைப் பாவனையாலே விலக்கிக் காழி நகர்ச்சென்று கடவுளைப் பணிகெனப் பணித்துச் செல்ல, இந்திரன் வேணுவழியாற் றோணியம் பதியைக் காணிய வந்து, கண்ணெட்டுடையோன் தீர்த்தமாடிச்சிவ பெருமானையேத்தி, யற்புதத் தோத்திரத்தாலே வணங்க வமலன் தோன்றவும், கண்ட இந்திரன் வத்த, எண்ணம் யாதென, என்னைத் தொடர்ந்த முன்னவர் பழிபோய்ச் சுத்தனாக அத்தனே யருள்வாய் என்று விண்ணப்பிக்க, இறைவனவனுங் கொடும்பழி நீங்கினை, மூங்கிலின் வழியாய் ஈங்கு நீ வந்த வகையால் வேணுபுரம் எனும் பெயர் இத்தலம் எய்துக என்று மறைந்தார். பின்னர் இந்திரன் தன்னுலகடைந்து அரசுபுரிந்து பரசவே வாழ்ந்தான். இப்பதிக்கேற்ற இத்துணைக் கதையெலாம் இதுவரை முனிவீர் இசைத்தேனல்லேன். நான்முகன் ஓதினும் முற்றுமோ இத்தலமகிமை. சங்கநிதி பதும நிதியாக இரண்டு நிதியும், பெருந்தவத்தை இப்பதியினிற் செய்து இறைவன் வாயிற்கு இறைமைபூண்டு அடுத்தவர் மிடிநோய் அகலவே யருளலால் சங்கநிதிபுரம் பதுமநிதிபுரம் என இவ்வூர்க் கிருபேர் இசைக்கலாம் முனிவீர். இவ்வூர்கெல்லையின் ஐங்குரோசத்தில் தேவராதியர் வந்து வணங்கிய இலிங்கக் குழாங்கள் எய்திய வாற்றால் அணுவளவும் அடிவைத்தல் கூடாது. ஆதலால் தூரத்திலிருந்து கோபுரங் கண்டவுடனே வணங்கி வருதல் வழக்க மென்றுணர்வீர். ஒருநாளேனும் இப்பதி யிருந்தோர், அபிஷேகத்

துக்கு, அருநிதி கொடுத்தோர், குடை, முரசம் முத லிய கொடுத்தோர் யாவரும் அண்டையும் பெரும்பயன் அளவிலவாகும். ஈண்டுறு தீபம் தூண்டினோர் தாமும் இமைக்கொருவருஷம் உமைக்கையன் கயிலைப்பெரு மலை சென்று, பேச வீற்றிருப்பார். இது மறை வாக் கென வுணர்ந்திடுங்கள். இங்கே வாழும் பிரமநாய கர்க்கு ஒருதரம் திருவமுதூட்டியவர் ஆயிரம் வரு ஷம் ஊட்டிய பயனை யடைகுவார். சித்திரை விஷுவில் திருமஞ்சனத்தால் திருமுடிக்கு ஆட்டுஞ்செல்வர் தமக்கு முத்தியும் போகமும் முறை முறை வருமால். இவ்வூர் வியப்பெலாம் இறைவனே சொல்லலா மன்றி யென்னுலிசைக்க முடியாதென்று சூதபுராணிகர் சொல்லி முடித்தார்.

வேணுபுர வத்தியாயம்

முற்றிற்று.

---

பதினொருவது

## கழுமல வத்தியாயம்.

வேணுபுரமெனும் பெயர்க் காரணத்தைக் கூறி யது போல கழுமல நாமம் கலந்தவாறு முரைப் பேன். முனிவீர்! ஒருமையிற் கேளீர்! உரோமசர் என்னும் ஒரு முனிவர் தொல்லைக் காலத்துச் சிவ தல ங்க டோறுஞ் சென்று பெருந்தவம் புரிந்தும், அள

வில் தீர்த்தத்து அன்பினிலாடியும், மாயையாலமைந்த மயக்க மகன்று, தூய் சிவஞானந் தோன்றாமல், மனம் உருகி நிற்கின்ற காலத்தில், வேணுபுரம்வாழ் தாணுவை வணங்கப் போவான் எண்ணலும், பசு போத மகன்று சிவ போதம் வரலும், உடனே யெழுந்து உவந்துவந் தணுகி, பிரமதீர்த்தத்தில் மூழ்கிப் பிரளய காலத்தும் அழியாத தோணியப்பரையும் பிரமேசரையும் வணங்கி, சட்டநாதரைப் போற்றிப் பின் அருச்சனைசெய்து, ஐம்புல னொடுக்கிப் பசுபதிதனை மனத்தில் தியானித்து, உடல் பொருள் ஆவி மூன்றையும் நிவேதித்து, அந்தர் யாகம் செய்து, பலநாள் நற்றவம் புரிய, நாதன் உமையோடு எழுந்தருளி வரலும், முனிவர் கண்டு,

அருமறைநா யகபோற்றி ஞான வல்லி யாருயிரே
போற்றிமுக்க ணமல போற்றி
திருமலமா யுலககா ரணமா யம்பொன் னெடுவரையி
லிருந்தவனே போற்றி நேமித்
திருபகனை யனலையடு கணையாக் கொண்ட
சிவபோற்றி நீறணிதிண் டோள போற்றி
பெருகுசரா சரவுயிர்கட் குயிராய் நின்ற
பெரியநா யகபோற்றி யெம்மான் போற்றி.

ஒருவருமைந் தொழிலுடையாய் போற்றி யோக
ருளத்திலெழு பரஞ்சுடரே போற்றி மாயன்
பூவயன்போற் றியபாத கால கால புண்ணியமங்
கலமேனிப் புனித போற்றி
தாவருமான் மழுவணிகைத் தலத்தாய் போற்றி
சந்திரசே கரகாம தகன போற்றி

மேவுபக னெனுங்கதிர்க டணிந்தாய் போற்றி
விறல்வேங்கை யதள்புனைந்த விமலா போற்றி.

செக்கரிளஞ் சடைமுடியாய் போற்றி நீண்ட
செம்பொன்வரைச் சிலைவளைத்த நம்ப போற்றி
அக்கரவ மணிந்ததிரு வரையாய் போற்றி
யாரணநா ரணன்றேடற் கரியாய் போற்றி
பக்கமலி குறட்பூதப் படையாய் போற்றி
பாய்திரைவெவ் விடநுகர்ந்த பரனே போற்றி
திக்கெனவையு மம்பரமா யுகந்தாய் போற்றி
சிவஞான குருமுதல்வா போற்றி யென்றே.

துதித்து, வணங்கி யெழுந்து, அன்புருவாய் நின்று அமலனைப் பார்த்து, பிறவிப்பிணி தவிர்க்கும் பெரிய மருத்துவா! தேவரீரின் பொன்னடி பிரியாத நன்னர் ஞானத்தை யடியேற்கு அளிப்பா யென்னலும், ஐயன் கூறுவான். பதியாகிய என்னையும், பசுவாகிய உன்னையும், நின்னை மயக்கிய மாயையையும், ஆணவ மலத்தையும், கன்ம மலத்தையும் நீ நன்கு யறிந்து உண்மை தெரிவதுதான் ஞானம். அந்த ஞானமும் இருவினை யொப்பு எய்திடுங்காலம் தோன்றும். தோன்றுங்கால் எமதருளாகிய சத்தி நிபாதம் தழையத் தோன்றும். ஆதலின், உனக்கு என்றும் உரிமைப்பொருளாவது எமது அருள் ஒன்றே. ஈண்டுக் கூறிய இம்மலம் ஐந்தும் அநாதி யென்றே யறிவாய் அறிவோய்! சரியை முதலிய நான்கினையும் செய்தவர்க் கல்லாது சத்திநிபாதம் பொருந்தாது. நாம் செய்யும் பஞ்சகிருத்தியங்க ளெல்லாம் ஆன்மாக்கள் பொருட்டே. அவ் வான்மாக்கள் ஆணவ

மலத்தால் தம்மையும் அறியாது, எம்மையும் அறியாது, இருவினைக் கீடாக இன்பத் துன்பங்களனுபவித்தே கருவிற் பிறந்திறந்து சிவகதி யடையாது மயங்கி நிற்கும். அப்பொழுது கன்னியிடத்து மூயங்கும் பருவம் பார்க்கும் நாயகன் போலப் பசுக்களின் பருவம் பார்த்துத் தருதலால் பசுபதி நாமாகும். உயிர்களெல்லாம் கன்னிகையாகும். சரியை யாதி நான்கும் கேள்வன் ஆகும். சிவாநுபவம் உறுதற்கு வழியாவன:—எனக்கே யிசைந்த இன்னிசை கேட்டலும், ஆராதனையை யன்புடன் முடித்தலும், இரு கண்ணூற் காண்டலும், ஒருமைப் பாடுறத் தன்னை மறந்து என்னுடன் கலத்தலுமாம். உச்சியிரவி முன் வைச்சிடும் பளிங்கு துலக்க முற்று விளங்குதல் போல, புலன்கள் மூடி மருண்ட வுயிர்கள் நயதருணை யடைந்து தங்கள் தங்கள் செயற்கையாகிய பசுகரணச் செய்கை யற்று, சிவகரணமாகி, எம்மையறிந்து எம்முடன் கலப்பார். கலப்பினும், யாம் செய்யும் ஐந்தொழில் தாம் செய்ய மாட்டாராய் மௌனியாகி வாழ்வார் என்று, இவை முதலாகிய சைவசித்தாந்த சாத்திரத்தின் நுண்பொருண் முழுவதும் உபதேசித்தருளி, பின்னரும் ஒன்று பேசுவார். எம்முடைய திருவாக்கினால் உன்னுடைய மலங்கழுவவிளங்குதலால், இவ்வூர் சழுமலம் எனும் பெயர் பெற்று ஓங்குக என்று அந்தர்த்தானம் ஆயினார். பின்னர் உரோமசமுனிவர் சிவாநுபூதிப் பெருமானாகி, வாழ்ந்து, சிவ சாயுச்சிய மடைந்தார் என்று சூதபுராணிகர் கூறினார்.

சழுமல வத்தியாயம்

முற்றிற்று.

பதினேழாவது

## புறவ அத்தியாயம்.

---

காழிக்கதையாம் கடலிடத்தமுந்தி, இருசெவியா லும் என்மொழி மடுக்கும் புண்ணிய முனிவர்காள்! புறவம் எனும்பேர் இப்பதிக்கு வந்த எழில் பெறுங் கதையும் மொழிகுவன் கேளீர்!

ஒரு காலத்துச் சிபிச்சக்கரவர்த்தி எனும் பேருரு வாளன் செங்கோல் செலுத்திவாழுங்காலையில், தலங் களுக்கெல்லாம் உத்தமதலமும், யோகிகள், ஞானிகள் வாழுதற்கு இடமும், இருமையின் பயனும் எளிதினிற் கொடுப்பதும் ஆகிய காழிபம் பதியே யாகஞ் செய்தற் குரிய தானம் என்றெண்ணி, மந்திரிமார்களோடும் சதுரங்கசேனைகளும் சூழ வேணுபுரத்தை அடைந்து, அயன்றட மூழ்கி, கருணாகரனும் பிரமேசலிங்கப் பெ ருமானையும், ஞான குருவாம் தோணி நாயகரையும், சங்கடமறுக்கும் சட்டநாதரையும் தொழுது, போற்றி, இவ்வூர்க்கு வடதிசையில் நினைத்தவாறே யாகமொன் றியற்றத் தொடங்கும் எல்லையில், கைலாசநாதனும் பிரமபுரேசன் சிபிச்சக்கரவர்த்தியின் ஈகைத்தன்மை, யையும் அன்பையும் பரிசோதிக்கக்கருதி, இந்திரனையும் அக்கினியையும் நினைத்தலும், வர, அவர்களைப்பார்த்து, நீங்களிருவரும் எவ்வித சாமார்த்தியங்கொண்டோ புகாரப்பதிக் கரசனாகிய சிபிச் சக்கரவர்த்தியின் செங் கோன் முறையை உலகோர் அறியச் செய்வீரென்ன

அவர்கள் அப்படியே செய்கிறோம் என்று, இந்திரன் பருந்தாகவும், அக்கினி புறாவாகவும் ஆக, இவற்றுள் புறா எனும் பறவை வேள்விசெய்கின்ற சாலையினுள் இருக்கும் சிபிச்சக்கரவர்த்தி முன்னரே வீழ்ந்து, உயிர் தளர அலறுகின்ற சப்தத்தோடும் அடைக்கலம் புக, மன்னர் பிரான் கண்டு, எப்பொழுதும் பயப்படாதே என அபயமளித்து, இங்கு இருப்பாய் என்னலும், அத்தருணம் புறா எங்கே எங்கே என்று தேடிக்கொண்டு தியங்கிவந்த பருந்து அரசன் முன் அடைந்து, சோழகுலதீபமே! என்றன் பசி நீங்குமாறு இரையாகத்தேடி அலைந்து வந்த இப்புறாவை இக்கணமே தருவாய் என்னலும், சக்கரவர்த்தி கண்டு, நீயே அடைக்கலம் என வந்த ஓருயிரைக் தரணியையாளும் வேந்தர் தன்னுயிர்கொடுத்துங் காப்பாரேயல்லவா! என்றலும், பருந்து சினந்து, பசிப்பிணி நீக்கும் புறாவாகிய மருந்தை நீ கவர்ந்துகொண்டாய்! என்னுடைய வயிறு எரிய எரியப் பார்த்திருப்பது பார்த்திபர்க்கழகோ? ஒரு கணத்துக்குமுன் இப்புறவைக்காப்பாற்ற இரங்கினையோ? நீ இதன் ஊனை உண்ண விரும்பின், இதுபோற் கிடைத்தல் உனக்கு அரிதோ? வெகு நேரமாகப் பின்றொடர்ந்து பற்றுவான் உண்ணத் தேடிவரும் இப்புறவை இக்கணம் கண்டவுடன் வலியை பேசுதல் மன்னவற்கியற்கையோ! என்று பலவாறுகச் சொல்லி வருந்த, தன்னுயிர்போல மன்னுயிர் காக்கும் சக்கரவர்த்தி இவ்வூன் அன்றி எவ்வகையுணவும் இக்கணம் தருவேன் கொள்வையென் றுரைத்தார். அதற்கு அப்பருந்து அமுது எனக்கு ஆகா. ஊனேயா

கும் தாமதியாது உடனே தருவாயெனனும்,' கேட்ட மன்னனும் ஊனுக்காகப் பிறவுயிர் கொல்லேன். என் உடலூனை உன்றனக்களிப்பன் கொள்ளுதியோ என,' பருந்து மகிழ்ந்து புறவுக்கு இணையாம் புலால் தந்தருள்வாய் என, அப்பொழுது அரசன் பலவகை யுணவும் பண்புடனுதவாமல், தன்னுடல் மேலே மன்னருள் அற்று, முனிவுகொண்டனனோ, அல்லது மனுநீதிதவறுவண்ணம் செய்ய நினைத்தனனோ, இரண்டுமின்றிச் சிவன் செயலோ, மற்று என்ன கருத்தோ கொண்டு, தராசு ஒன்று வருவித்து ஒரு தட்டில் புறவை வைத்து, மற்றொரு தட்டில் தன் வாளைக்கொண்டு பாதாதி கண்டம் வரையும் உள்ள ஊனையெல்லாம் அரிந்து அரிந்து சுமத்தவும், சமமாகாமல் மேலே நிற்க, சரீரத்தோடு தராசில் ஏற, இருதட்டும் சமனுய் நின்றன. முனிவர்காள்! அரிய பெரிய இக்காரியத்தை மூவுலகத்திலும் முறையாய் வாழுநர்யாவராயினும் செய்ய எண்ணுவரா? இக்காருண்யாகரனை ஒப்பவருண்டா? இந்த செயற்கருஞ் செய்கையை மன்னவன் புரிதலும், பூமியும், அஷ்டதிக்குக்களும, நான்கு வேதங்களும் கண்டு நடுங்கின. மாதவரெண்ணம் மயங்கியே கிடந்தன. வேள்விபுரிவோர் வெதும்பியோடினர். அம்பிகைதானும் அச்சங்கொண்டாள். இவன் அன்பின் மகிமையை அமலன் மகிழ்ந்தான். வானநாதனும் அச்சங்கொண்டு தன்னுருக்கொண்டு தரணிபன் நேரே வானவர்சூழ மலர்முகமாகி நங்கையராட மகிழ்வுடன் நிற்க, தோளாமணிநேர் தோன்றலுங்கண்டு, இன்னதென்று அறியாது மௌனிபோலாகி, தட்டு

நின்று மிறங்கித் தரணியில் நிற்க, இவ்வுலகத்தின்கண் அறியாத யாவரும் உன்நீதியை யறியக் கடவுளின் அருளால் பருந்தாய் வந்தவனாகிய யான் இந்திரன். புறுவாய்ப் பொருந்திய இவனே அக்கினி என்ன அறிவாய்.

முன்னாளில் ததீசிபால் அடைந்து வேண்ட, அவன் முதுகெலும்பைத்தர, வச்சிராயுதமாக்கி வலிமை பெற்றேன். அவரே யுனக்கு ஒப்பாவாரன்றி வேறு ஒருவரில்லை. வருந்திய உன்மேனி வலிமை பெற்றோங்க, புகலிப்பதிவாழ் புண்ணியனைப் போற்றுவாயென்று அநுக்கிரகித்து, அரிந்ததசையெலாம் ஒன்று கூடிப் பொலிந்து வாழுதி என, தேவர்க்கரச! எனக்கு நீர் வேட்கை மிகவுடைமையால் அளிப்பாயென, புறவாகவந்த அக்கினியை நோக்கிக் காவிரிதீர்த்தம் கொண்டுவந்து தருவையென, உடனே கொண்டுவந்து கொடுத்து இருவரும் தம்முடைய பதியுற்றார்கள். அக்காவிரியும் புறாக்கொண்டுவந்தமையால் புறநதி எனும் பெயராய் அது முதல் விளங்கிற்று. தாகந்தீர்ந்த தரணிபன் பின்னர் தோணிபுரத்தைக் காணுவான் எழுந்து வீதிவலம் வந்து பிரமதீர்த்தம் படிந்து விமலனை வணங்கி, பிரமதீர்த்த நீரால் மஞ்சனமாட்டி, பஞ்சகவ்வியத்தாலும் அபிஷேகித்து, ஐவகையுண்டியும் அன்புடனூட்டி, அருச்சனைசெய்து பணிந்து துதிக்க, விடையின்மேலே விமலையோடும் வந்த பரமபதியைக்காண்டலும், விழுந்து துள்ளியாடும் வள்ளலைப் பார்த்து, நின்வழிபாட்டால் அரசனே! மகிழ்ந்தாம். விரும்பியது என்ன விளம்புவை என்னலும், காடி

வந்த புறப்பறவைக்கு ஊனைக்கொடுத்து உன்னைவந்து எத்தாதற்கு இடமாய இவ்வூர் புறவம் எனும் பேர் பொலியவும், பின்னும் என்னுடைய தாகம் நீங்கி அக்கினிப்புறவு ஆசையுடன் கொண்டுவந்த இக்காவிரியில் ஆடிமாதம் பதினெட்டாம் பெருக்கன்று உமாதேவியாரோடும் இடபவாகனத்தில் எழுந்தருளிவந்து தீர்த்தங் கொடுத்து முழுகுவோர் யார்க்கும் புத்திமுத்தியும் புதல்வர்ப் பேறும் பொருந்தவும், பஞ்சமாபாதகங் களும் முழ்கியவுடன் ஓடவும், எண் சித்திகளும் எளிதினில் வரவும் அருளுக என்ன, அருளி, விடைமேல் உமையொடுமறைந்தார். சிபிச்சக்கரவர்த்தியும் வரம் பலபெற்று மனமகிழ்ந்தேதத்தி, வேதியர், அடியவர், வேண்டுவோர்க்கெல்லாம் சொர்ணதானமும், கோதானமும், பூதானமும் குறைவிலாதளித்து, நால்வகைச் சேனைகளுஞ் சூழத் தன்பதியாகிய புகாரினைச் சேர்ந்து, சிம்மாசனத்தில் சிறப்பாய் இருந்து, மனுமுறை செங்கோல் நடாத்தி, எண்ணான் கறமும் இடைவிடாது புரிந்து, அழியாப்புகழை உலகினில் நிறுத்தி, சிவனடிக்கமலம் சேர்ந்துவாழ்ந்திருந்தான் என்று சவுனகமுனிவர்கள் ஆனந்தக் கடலில் அமிழ்ந்தும்படி, இருசெவி நிறையத் தெவிட்டாவமுதைத்திருத்தமாய்ப் புகட்டினர் சூதர்.

புறவ வத்தியாயம்

முற்றிற்று.

---

பதினெட்டாவது

# பூந்தரா யத்தியாயம்.

---

" ஒரு பெருந்தவஞ் செயும் உறுவீர்காள்! இத் தலத்துக்கு ஏற்ற பன்னிரு நாமத் திறுதியாம் பூந்தரா வெனும் இப்பெயர்தான் எய்திய காரணம் இசைப் பேன் கேளீர்!

முன்னை நாளில் பொன்னமர் மார்பனால் வந்த இக் கதையின் வகை யாது என்னின், இரணியாக்கன் என் னும் ஓர் அசுரன் இந்திரனோடும் போர்செய்ய, வானவ நாதன் வாடியே வருந்த, அரக்கனவனும் அமரர்களு டைய நிதி யெலாங் கவர்ந்து, அமுதங் கைக்கொண்டு தேவர்களை வருத்திப் பாதாள லோகத்திற் போயிருந் தான். அப்பொழுது இந்திரன் வறுமையாற் பிணி யால் மனம் மிகநொந்து, சக்கரபாணி முன்னர் வந்த டைந்து, தேவர்களுடன் இந்திரன், எங்களுடைய துன் பத்தை அகற்றும்படி அவுணனைக் கொல்லும்' என்று வேண்ட, விஷ்ணு வருந்தலீர் என்று வானவர்க்கனுக் கிரகித்து அசுரனை வென்று வருகின்றேன் என்று, சுவேத வராக அவதாரம் எடுத்தே பாதாளத்தை மூக்கி னாற் குத்தித் தாக்கவும், நிசாசரன் வந்து தண்டாயுதத் தால் மோதவும், வருந்தலனாகி மாதவன் அவுணன் மேற் பாய்ந்து பிளந்து உயிர்தனைப் பருக, அரக்கன் மாய்ந்தான். உடனே கோல வடிவாம் வெள்ளை மேனியனும் உலகமெல்லாவற்றையும் ஒருங்கே கொம்

பிறைற் குத்தியே தூக்கலும், குவலயத்துள்ளோர் வருந் தலைக் கண்ட மயிலூர்தி பன்றிவடிவாகிய விஷ்ணு வினிடம் வந்து அருளுபதேசஞ் செய்ய, யோகினு லறிந்த ராகவன் என்பான் ஆதிசேடன் ஆயிரம் முடி மேல் அமைந்து கிடக்கும் பூமியை நாம் சுமப்பது எற் றிற்கு? இதுவரை புரிந்த இப்பழி கழுவுவான் காழியம் பதி வாழ் கருணையாழியானைத் தொழுவேனென, ஆழிய கருத்துடன் வீதிவலம் வந்து, ஆலயத்துள்ள அயன் தடம் அமிழ்ந்தி, ஐம்பத யோதி, வெண்ணீறும், கண்டிகையும் மேனிமேற் றரித்துச் சென்று, இளம்பி றையணிந்த எம்பெருமானை அம்பிகையோடும் அன் பால் வணங்கித் துதித்த ஆழியான் முன்னர், தோணி நாதரும் துணைவியுடன் வரலும், மாமறைப் பொருளே! மாதவப்பொருளே என்று சரண்மேல் தன் முடி வைத்துத் துதித்த மாதவன் முகத்தைப்பார்த்து, வேண்டியது என்னென, பன்றியாய் நின்று படியினை நிறுத்தலும், அளவில்லுயிர்கள் அலமந்து உழந்த அப் பெரும்பழி அற அருள்செயவேண்டும். தரையைத். தூக்கிய தன்மையாலே பூந்தரா எனப்பேர் இவ்வூர் பொலிக என்றருள்கவென, அவ்வாறுகுமென்று அமல லன் மறைந்தனன். மாயனும் வணங்கி, வைகுந்தஞ் சேர்ந்தானென்று மொழிந்தார் சூதர்.

பூந்தரா யத்தியாயம்

முற்றிற்று.

## பத்தொன்பதாவது

# மலைவர வுரைத்த வத்தியாயம்.



குறைவிலாத் தவஞ்செய்யும் நிறைவறி வுடையீர்! சொல்லுமிப்பதிக்கு அமைந்த நாமம் முந்நான்கு இலக்கணமும் முறையேகூறி வேறுள கதையும் விரித்தீர்! நாங்கள் செய்தபுண்ணியப்பேறு? உம்மை நாமிரப்பது ஒன்று உண்டு என்றார். சூரியன் ஒளியால் சூழ்ந்திடும் இருள்போம் அன்றி அவிச்சையாம் கங்குலும் அழியுந் தகைத்தோ! ஏ! ஞானபானுவே! அகத்திருளெல்லாம் அழித்து எங்களை யாட்கொண்டீர். முந்நான்கு பெயரை முறையாக்கொண்ட இப்பதி நாப்பண் எழில் நெடுங் குன்றம் ஒன்று கோட்டிடென் எய்திய கதையுங் கூறுவாய் என்று விண்ணப்பிக்கக் கேட்டு அருள்வார் சூதர்.

பதினெண் புராணத்துள் காந்த புராணத்தின் மாத்திரமா இம்மலை வரலாறு சொல்லும்? பிரமாண்ட புராணத்தில் பிற்பாகத்து க்ஷேத்திர காண்டத்தில் தோணிமலையின் தொல்பெருஞ்சரிதம் ஓதும் என்று உரைப்பார் மேலோர். நிற்க, முற்காலத்தில் ஆரியாவர்த்த நகரத்தை யாளும் காலவித்தென்னும் மன்னனென்பான் தரணி முழுவதையுந் தந்தைபோலப் பாதுகாத்து மனுநீதி கோடாமல் செங்கோல் செலுத்துகையில், புத்திரப் பேறின்றிப் பொருமி வருந்துங் காலத்தில், அறிவின்மிக்க ஒருவரை நோக்கி மகவினை யடை

யும் வழியுரைப்பீரெனப் பல வேள்வியாலும், தவத்தாலும், தானத்தாலும் பெறலாம் என்று பெருந்தவர் கூற, அவ்வாறியற்றியும் அருமைப் புதல்வன் பெறாமையால் வருந்தி அரசன் பாரத்தை அமைச்சர்பால் சுமத்தி காட்டையடைந்து உரோமசமுனிவரைக் கண்டு வணங்க, வந்த காரியம் என்னென்ன வினவ, புத்திரப் பெறுவான் உத்தமா! அடைந்தேன் என்ன, கைலையங் கிரியின் சிகரந் தொழுதால் மகவினையடைவாய் என்று அருள் செய்ய, அம்மலை யெய்துதல் அடியேற் கரிதல்லவா? நின்னருளாலே அடையவேண்டுமென, அதனைக்கேட்ட அவ்வுரோமச முனிவர் கைலையை யடைந்து கடுந்தவம் பண்ணுள் செய்திட, அவர் முன் சிவபெருமான் தோன்றலும், தொழுது துதிக்கும் அவரை நோக்கி வேண்டிய தென்னென்ன, விரிகடலுலகில் உள்ளார் யாவரும் புத்திரர் பெறுமாறு காவிரியாற்றின் நடுவில் கைலையின் சிகரமொன்று தங்கவும், அச்சிகரத்தில் தேவரீர் இந்த இடம்போல் எப்பொழுதும் பார்வதியோடும் ஞானச் செல்வராய் நயந்தினிது உறையவும் அனுக்கிரகம் செய்வாய் என, வருங்காலத்தில் ஆதிசேஷனும், வாயுதேவனும் ஒருவர்க்கு ஒருவர் பகைத்து யுத்தஞ் செய்யுங் காலத்தில் உன் கருத்து முடியும் என, அதுவரையும் அம்முனிவர் அங்கேயே தங்கினார். கூறியவாறே ஒரு நாள் விஷ்ணு, பிர்மா, இந்திரன், இரு சுடர், நாரதர், மற்றைத் தேவர்கள், வாயுபகவான் ஆதிசேஷன் யாவரும் ஒருங்கே சேர்ந்து கைலாசமலை வந்தார்கள். அப்பொழுது மகதியாழ் முனிவர் ஆதிசேஷனிடம்

சென்றுவ அரவு வேந்தே! இப் பதினான்கு உலகத்தையும் பெரிய புயவலியோடும் சுமக்கின்ற உன்னையொப்பார் எவர் உண்டு? எனப் பலவாறாகப் புகழ, அவ்வாதிசேஷன் மிகுந்த செருவங்கொண்டவனாயிருத்தலைக் கண்ட காற்று, பொறாமை கொண்டு இரு விழியும் சிவக்க, ஓ முனிவரே! இந்த தாழ்ந்த ஒருவனை வீணாக ஏன் புகழ்கின்றனை! உலகத்தில் ஜீவகோடிகளெல்லாம் அழியாவண்ணம் மூச்சினைக் கொடுக்கும் ஈச்சுரன் ஒருவனாகிய யான் இங்கிருத்தல் நீரறிகிலீரோ? என்றலும், ஆதிசேஷன்பால் நாரதரடைந்து காற்றின் வேந்தன் உன்னைக் கனன்று தாழ்ந்து பேசித் தன்னையே புகழ்ந்தான். எவ்வாறெனில்:—இயங்குவன நிற்பனவாகிய எல்லாவுயிர்கட்கும் யான் ஒருவனே பொதுவாய் நின்று காக்கின்றேன். அன்றியும், இப்பாம்பின் உடலுக்குள் யான் இல்லாவிட்டால் இவன் உயிரோடு சஞ்சரித்தல் எங்ஙனம்! இன்னமும், திருப்பாற் கடலைத் திருமால் முதலிய தேவர்கள் கடைந்த காலத்தில் இவ்வரவோன் அக்கடலிற் றோன்றி விஷத்தைக் கக்கி யாவரையுந் தாக்கி வருத்தியதே யன்றி அண்டர் நாதனின் கண்டந்தன்னில் வடுவினைச்செய்து கொடியவன் என்ன எல்லாரும் இழித்துச் சொல்லப் பெற்றான்; பின்னரும் திருமறுமார்பன் அரவம் அதன்மேல் அழுந்தச் சயனித்து அவனழுகெல்லாம் மழுங்கிடச் செய்தான்; வேறும் இரு பெருஞ் சுடரை வெருவச் செய்வான்; இவனையேன இவ்வாறு எடுத்துப் புகழ்ந்தாய் என்றும், கொன்றாலும் கொடுமையைச் செய்பவன், கோளேழினும்பார்க்

கக் கொடிய னிவன்தான், தன்னைச் சிநேகிப்பவர்க்குத் துரோகமே செய்வன், நெருங்குபவரை ஒருங்கே கொல்வன், அல்லும் பகலும் அவன் பெயரை ஒரிடத்தினின்று சொன்னாலுங் கொடுமை செய்ப வன் என்றும், பலவாறாகத்திட்டி, அவனை ஏன் புகழ்ந்தாய் என்றும், அருவமாகிய பெரியவன் சொன்னான் என்றார். ஆதிசேஷன் அதைக்கேட்டு தீப்பொறி கக்கச்சினந்து நோக்கி, நாக்கினை வளைத்து, ஏ நாரதசுவாமீ! நன்று! நன்று! வீணைகத் தன்பெரு மையைத் தான் புகலும் அக்காற்றின் வலியெல்லாம் என்னோடெதிர்த்துப் பொருதிடவந்தால் அப்பொ ழுது என் வலிமைபார்க்கலாம். அவனை வரவழைப் பாய் என்றனன். உடனே முனிவர் ஒலிக்கிறை முன் வந்து, சுமக்கும் வலிமை தமக்கே யுடைமையென்றும், உன்னை உருவம் அற்ற அருவன் என்றும், சுடுந்தீயோடு தொன்னண்புடையோன் என்றும், செல்லுதற்கு வேறு வழியில்லாமல் ஒன்பது வாயிலிலும் ஒதுங்கியே புகுவான் என்றும், முன்னொருநாளில் அயனுலகத்தி லடைந்த காலை கங்கைப்பெண்ணின் வஸ்திரம் மே லெழும்படி செய்த கள்வன் என்றும், அஞ்சனாதேவி யை யருளில்லாமல் வன்பாற்றழுவிய காமுகன் என்றும், மன்மதன் செல்லும் தென்றற்றேரென்றும் இனையன பலவும் கண்ணே செவியாகவுடைய ஆதிசேஷன் இவ் வாறாக உன்னை மிகவும் வைதான் என்றார்.

கேட்ட மருத்துவும் வாட்டமடைந்து, மிகச்சின ந்து கண்களினின்றும் கனற்பொறி சிந்த, மூதண்டம்

வரையிலும் உயரும் வேதண்டத் (மலை)தொகுதிகளை, அவைகளில் வசிக்கும் அரும்பொருள் பலவோடு சுழல் பட அசைத்து, பாதாளம் வெடிக்க நாரதர் மகிழ அவனிமீதில் அறைந்தனன் கையால். காற்றின் வேந்தன் கனன்றெழக் கண்ட நாரதமுனிவர் பாரினைச்சுமக்கும் ஆயிரம் முடியுடை அரவிடம் அறைய, இருவருங் கூடிச் சமர்செயப் புகுங்கால், தேவர்கள் அப்பொழுது இவர்களைக்கண்டு, ஏ உரகவேந்தே! உன்னுடைய ஆயிரம் படங்களாலும், பொன்மலைக் குவட்டைப் பொத்திக் கொள்வாய், ஏ காற்றின் தலைவ! உன் பெரிய வலியினுல் மூடப்பட்டிருக்கும் அரவப்படத்தை அசைப்பாய் என்றார்கள். உடனே ஆதிசேஷன் ஆயிரம் படத்தால் அம்மலைக் குவட்டைப் பற்றிக் கவ்வலும், கோடைவானவன் நாடியே வலியால் மற்றை மலைக் குழாம் சுற்றியே யலைய, பூமி நடுங்க, சமுத்திரம் பொங்கத் தருக்குலமெல்லாம் சாய்ந்து தூளபட, பத்துக்காலக உத்தமர் பேசும் காற்றும் குவட்டினைச் சூழ்ந்து, சேடன்படத்தைத் திறக்க முயலலும், மிகுவலிகொண்டு வெவ்வரவு அழுத்த, இருவரும் சினந்து கடும்போர் செய்தலால், புவனத்துள்ளோர் பொருமி வருந்தலைக் கண்டு முனிவரும் அண்டர்கள் யாவரும் நடுக்கங் கொடுக்கும் துடுக்கனும் காற்றிடஞ் செல்லாமல், ஆதிசேஷன்பாற் சென்று உலகங்களெல்லாவற்றையும் ஆயிரம் படத்தாற் சுமக்கின்ற உன்னையொப்பார் ஒருவரும் இல்லை. சலசலப்புடைய இப்பவனனோ ஒப்பான்? பொறையைப் பொறுக்கும் பொறுமையையுடையோய்!

யில் முனிவர் பெருமான் கண்டு மகிழ்ந்து காலவித்தாம் அரசனைப் பணிவித்திட, அவனும் அம்பிகை சமேத ராம் அநாதியை வணங்கி மகப்பேறெய்தி வாழ்ந்தினி திருந்தான். அப்பொழுது வந்த மலையும் மறைந்து நிற்க, சுதையினால் அம்மலையில் சிவகணநாதர்களும், இருபது நாரைகளும் நன்றாய்ப் பொலிய வானவர் எங் கும் வகை வகை பொருந்த, அரசன் ஆகிய காலவித்து என்பவன் திருப்பணி செய்தான். பின்னர் அவ்வரசன் பிரமதீர்த்முழ்கி, பிரமேசருக்கு அபிஷேகஞ் செய்வித்து நவமணிகளாற் செய்த ஆபரணங்களும், பீதாம்பரங் களும், அநேகஞ் செல்வங்களும் சிவபெருமானுடைய திருவிழாவுக்காகக் கொடுத்து, கலியாண மண்டபம், அலங்கார மண்டபங்கள் செய்வித்துத் தன்னகர் அடைந்தான். உரோமசமுனிவர் இக்காழிப் பதியிலே யே வீற்றிருந்தார்.

பின்னொரு காலத்தில் ஒரு பிரமதேவருடைய ஆயுள் முடியும் பிரளயகாலத்தில் சுத்தமாயாசத்தி சொரூபமாக விளங்கும் தோணி மேல் ஞானச் செல்வி யோடும் பிரமேசுரன் அம்மலை தாங்க நின்று கடல் நீத் தம் ஒடுங்கவும், முன்னர் போல் வீற்றிருந்து முறையே பிரமவிஷ்ணு உருத்திரர்களைப் படைத்து அவர்களால் துதிக்கப்பெற்று கைலையைப் போலவே பார்வதி சமேத ராக வீற்றிருந்தார். அது முதல் கிரிபுரம் எனப்பெ யர் பெற்றது இக்காழி. இறைவனும் இறைவியும் தோணியில் வாழ்தலில் உமாவதிபுரம் என ஒரு பேரெ ய்தும். இத்தெய்வக்குன்றை ஒரு யோசனை தூரத்தில் நின்றும் தெரிசித்தவர்கள் காசினித்தல மெல்லாம்

கண்ட மெய்ப்பலன் மாசற வடைந்து தேசிகராவார். ஓ அந்தணீர்! இவ்வூரின்கண் வீற்றிருக்கும் கைலாய பதியின் திருநாமங்களாகிய, காளிகேசுரன், பிரமேசன், கஞ்சுகன், பராசரேசன், தோணிநாயகன் இவ்வைந்தையும் அன்புடன் தியானிப்போர் பஞ்சமகாபாதகங்களையும் கெடுத்துச் சிவகதியடைவார். அன்றியும், பிசாசம் முதலியவற்றால் வருந்தீமையினையும், தீ, புலி முதலிய மிருகங்கள், கள்வர்களால் வருந்துன்பத்தையும் நீக்குவார். இக்காழிப்பதியினை அடுத்தடுத்திறைஞ்சினோர் மல முத்தராகி யமனுடைய உலகத்தையடையாமல் திருக்கைலையனுகிவாழ்வார்.

இறும்பூதுதரும் இன்னும் ஒரு விஷயமுளது. குணபூதரத்தீர்! திவ்வியபதியாம் சீகாழிக்கண் பாபங்களாகிய காமமுதலாங் கடுங்குண மவற்றைத் தன்னுடைய தூதராய்ச் சார்ந்திடக் கொள்கின்ற இத்தலத்துள்ளோர் யாவரும் எம்பிரானுடைய தோணிபுரத்தைத்தொழாது பிறரை வருந்தச் செய்திடுந்திறத்தால் சேய்நிலத் துள்ளோராவார். நினைத்தற்கரிய காமம், வெகுளி, மயக்கங்களாகிய முப்பாதகங்களையும் செய்கின்ற மூவரும் இந்நகரத்தை வணங்குதற் பாலரோ? பண்டைக்காலத்துத் தவங்கள் செய்த நல்லவரே இத்தலஞ்சேர்ந்து சிவனடி சிவனும் பான்மையராவார். புலப்பகை வென்ற புண்ணியர்க்கு என்றும் இன்ப வீடு உதவ, இப்பதிவந்து, மூன்றுவடிவத்துடன் முதல்வன் இருப்பான். அவர் அருட்டன்மையை யெவர் சொல வல்லார்? ஆதலால், முனிவர்காள்! காழியின் சிறப்பு கருதற் பாலதோ? ஆகவும், இயம்பவும், கேட்க

வும், எத்தனை தவங்கள் நாமெலாஞ்செய்து நலத்தினை யடைந்தோம். இவ்வூர் மான்மியம் எழுதிய ஏடு ஒரு மனையிலிருந்தால் திருமறுமார்பன் திருவருள் பெற்றுச் செல்வராகி சிவனுலகடையலாம். இக்கதையை வேதியர்பால் கேட்கும் வித்தகரெல்லாம் நினைத்தவை யடைந்து வினைத்தொடரறுப்பார். கைதவமில்லாக் கணிப்பில் தவத்தீர்! திருமலை வந்த சிறப்பீது என்று சூதமுனிவர் ஓதியே மகிழ்ந்தார்.

மலைவரவுரைத்த வத்தியாயம்

முற்றிற்று.

---

இருபதாவது

## ஆபத்துத்தாரணை யத்தியாயம்.

---

மலை வரவுரைத்த வகையைப் பேசலிங்கநாதன் வந்தவதரித்த பாட்சியின் காரணத் தீட்சியாய்ச் சொல்லுவேன். முற் காலத்தில் இரணியன் என்னும் ஒரு தேவாந்தகன் பிரமா, விஷ்ணு, உருத்திரர்களின், புகழும் பெயரும் பெருமையும் வலியும் விளங்காமல் தன்பெய ரெங்குஞ் சாற்றிடச் செய்தும், அமரர்க ளெல்லாம் அலைவுறும் வண்ணம் போரிலே புறங்கொடுத் தோடவும் வாழ்ந்தான். அன்றியும், அட்டமலையும் ஒட்டிய புயத்தோடு சேர்த்துப் பொருந் திப்புயமலையாலே குலமலை அழிப்பான். அந்தணர் வேள்வியின் அக்கினி யெல்லாம் தன் விழி நெருப்

பால் தணிந்திடச் செய்வான். உதைத்தை யொத்த கைத்தலத்தினாலே பிலத்தொரு பாம்பை அலைத்திடத் தூக்கி, அரைக்கச்சாக அணிந்து பொலிவான். பஞ்சபூதத் தலைவர்களையும் வென்றுஅவர் தொழிலைத் தானே புரிவான். இருசுடர் நேர்திமே லேறியே வருவான். கூற்றனுங் குலைய மாற்றுயிர் கொள்வான். விடியற் காலைக் கடனீராடிப் பாதல மகளிரொடு பயின்றுவிளையாடி, பிற்பகலிந்திரன் கற்பகஞ்சென்று, அரம்பையரோடு தாம்பெற இருந்து, இரவிற் சதுர்முகன் புரமதிற் புக்கு நித்திரை செய்வான்நித்தமு மசுரன். இவ்விரணியன் தன் வலிமையை பல நுங் காண விளையாடிய சிறு பருவத்தில் தன் இரு காதுக்கும் மகர குண்டலங்களாக சூரியனது உதய கிரியையும், அஸ்தமயன கிரியையும் பற்றுவானாயின், முன்னாள் க்ஷீராப்தி கடைந்த மகாவிட்டுணு கையில் மத்தாகக் கொண்ட மந்தரகிரி அவர்க்கு ஒரு தண்டு போல் விளங்கிய தென்பதும் ஓர் அற்புத சரித மாகுமோ?

அபரரும் பரரும் அன்பொடு செய்யும் வேள்வியில் வந்து தேவவுரு வடைந்து அவிதனை யுண்டு, வேதியர் வேதம் விரும்புங் காலையில், தீதிலாத் தன் பெயராகிய இரண்யாயநம என்று சொல்லுங்க ளென வற்புறுத்துவான். இவ்வாறு கொடுங்கோல் செய்து குவலயத்துள்ளோர் தன் பெயர் சொல்லத் தவிர்ந்த காலையில் வன்பினாலே வாட்டியே வருவான். ஆதலால் அவனுக்கு அஞ்சி புவனத்துள்ளோர் அல்லும் பகலும் அவன் நாமத்தைப் பாராயணமாகப் பகர்ந்திடுவார்

கள். அன்றியும் பெண், ஆண் இடி, படைகளால், பகல், இருட் காலங்களில் கூடாரம் முதலியவாசஸ் தானங்கள், வெளியிடங்களிலும் கொல்லப்படாத வனாய், பூதசம்பந்தங்களாலும், மற்றுமுள்ள பொருள் களினாலும் உயிர்துறக்கப் பெறாது வாழ்வான். அக்காலையில் இன்னமும் வலிபெற உன்னியே, அவ னும் காவிரி வடபாற் கலந்து விளங்கும் வெண் காட் டுக்கு வடமேலுள்ள தோணிபுரத்தின் கீழ்த்திசைத் தோன்றும் வில்வவனத்தே வேள்வி புரிவான். ஆயிர வெள்ளம் அவுணர்கள் சூழ வேள்வி செய்யும் விஷய மறிந்த விண்ணவ ரெல்லாம் விரிந்தார் போன்று கண்ணன் முன் கலந்து கரைந்தார். அஞ்சலீர் என்று அபயங் கொடுத்து உவணப் புயத்தில் சிவணப்புக்கு, யாக சாலையை வேகமா யடைந்து நிருதலோடும் பொ ருதத் தொடங்கி, சார்ங்கவில்லின் சாரத்தி நா ணொலி தெறித்த வுடனே, கறுத்த அவுணன் படை, தலை சிந்திப் புடையிலேலகவும், பின்னரும், சங்கொலி முன்னவன் செய்தலும், ஓடினார் சிலரும், வாடினார் சிலரும், பொடிந்தார் சிலரும், இடிந்தார் சிலரும், மறைந்தார் சிலரும், உறைந்தார் சிலரும், முடிந்தார் சிலரும், படிந்தார் சிலரும், முறிந்தார் சிலரும், தறிந் தார் சிலரும், முனைந்தார் சிலரும், இளைந்தார் சிலரும் இவ்வாறாகத் தெவ்வன் படைகள் ஓடிய செய்கையை நாடியே நாரணன் கூத்திலையாட, தீத்திறல் அவுணன் வேள்வி யழிந்த விஷய மறிந்து வெளியில் வந்த இழி வறிவினனும் கடலுங் கடலும் கலத்தல் போலவும், மேகமும் மேகமும் விதிர்த்தல் போலவும், மலையும்

மலையும் மலைதல் போலவும், தரணிநாதனோடு இரணி
யன் எதிர்த்து இடிபோல் கர்ச்சித்துத் தோளைத் தட்டி,
வில்லொலி வாள் ஒலி விதப்விதம் செய்தலால்
மாதிசை யானைகள் காது செவிடாயின. மாயன் சிலை
யால் கணைகளைப் பொழிய அவுணன் அக்கணம் மாற்று
வான். தீயன் அம்பை மால் கணையுண்ணும். அண்ட
மும் நிலமும் விண்டுவிண் டலமாச் சினந்தும், பாணங்
களை யேவியும், சிறிது நேரம், வெளியில் உலாவியும்
பின்னர் எதிர்த்தும், இருவிழி சிவந்தும் காற்றுடி
போல் இருவரும் சுழன்று சுழன்று, பாணமழையால்
மூழ்கியும், வேர்த்தும், புரண்டும் இருவரு மாக ஆயி
ரம் வருடம் அற்புதப்போர் செய்தார்கள். இவ்
வாறு செப்புதற் கரிய யுத்தம் செய்யும் அவுணனை
வெல்லுதல் அருமையய தாக, வேறொரு திறத்தால் வெல்
லுவே மென்று மாதவன் மறைதலும், தானவன் மகி
ழ்ந்து, தன் பெயர் கூறுந் தனயனை யடைந்து, இனி
யாவது என் பெயர் சொல்லுவாய் எனலும், புத்திர
னாகிய பிரகலாதனனும் உலகங்களுக்கெல்லாம் கர்த்
தா வாகிய அவனைத்தான் 'நாராயணன் என்று நான்
செபிப்பது என்றான். அதனைக் கேட்ட அவுணன்
சினந்து பற்களைக் கடித்து, விழிகள் சிவக்க, புயங்கள்
துடிக்க, உரர்கள் வீங்க, நரர்கள் நலிய, இடிஇடித்தாற்
போலச் சப்தித்து வ மடப் பிள்ளாய்! நின்னாற் புகழ்ந்து
பேசப்படும் கர்த்தா யாண்டுளன்? அவன் யார்? என்
னலும், புதல்வனும் அத்தலைவன், எப்பொழுதும், எவ்
விடத்தும், இத்துரும் பிடத்தும், இத்தூணிடத்தும்
இருப்பான் என்றான். இரணியன் உணர்ந்து ஒரு

கோடி இடிகள் இடித்தாற் போலக் கடகக் கையால் தூணினில் அறைய, தூணெனன வொலியோடு தூணினின்றும் அண்டமுகடு கிழியப் புறப்பட்டுத் தீய வன் மார்பைத் திகில் எழப் பிளந்து மானுட மடங்க லாய் மாயவன் நின்றனன். ஆ, முனிவர்காள்! இந்த அவதாரந்தான் நரசிம்மம் என்று நல்லோர் சொல்வர். இங்ஙனம் நரசிம்ம மூர்த்தி இரணியன் மார்பை இரண்டாக் கிழித்து அண்ட கோளங்கை யதிரவும், அஷ்ட திசைகளும் எட்டிப் போகவும், எங்கும் புகைகள் பொங்கி மிரவும், அவனை மடியில் அழுந்த வைத்துக் கைத்தல நகத்தால் கையனு மவன்றன் மாமிசம் உதிரம் வகைவகை உண்டு, பசியினை நிரப்பி விசையுடன் எழுந்து முகம் அரியாக உடல் மானுடமாய் பிரமனுதி எறும்பீருக வுள்ள எவ்வகை தேவ ஜீவ கோடிகளாலும், ஒரு முகவுயிராலும் சாகா வரமும், அறுவகைப் பொழுதிலும் அழியா வரமும் பெற்ற இரணியனைப் பிளந்து மகிழ்ந்துண்ட பெரும் பித்தேறி, விண்ணும் மண்ணும் விளியுமாறு வெறியாட்டாடும் மானுட மடங்கலின் துன்பத்தைச் சகிக்காதவராய், மலரோன் முதலிய வானவர் எவரும் ஒருங்கு சேர்ந்து காளிபுரம் வந்து சங்கமமூர்த்தியாகிய வடுகேசனைத் தியானித்துத் தெரிசித்து வணங்கினார்கள். அக்கணம் சிவபெருமானருளால் வீரபத்திரக் கடவுள் அட்ட பாதத்தோடு கூடிய சரபப் பக்ஷியாக வந்து நரசிம்மத்தைப் பிளக்கவும் அழிந்தது. அப்பொழுது நரசிம்மாவதாரராகிய நாராயணன் அழிந்ததைக் கண்ட திருமடமாது ஓடி வந்து, ஐயா! என்று வடுகேச

ருடைய திருவடியில் வீழ்ந்து வணங்கி என்மங்கலத் திருநாண் வாழ்ந்தினிது ஓங்க எனக்கருள் செய்ய வேண்டுமென்று பிரமபுரத்தின் மேலெல்லையில் முக்கோல் தூரத்திலுள்ள ஓரிடத்தில் பன்னிரண்டு வருஷம் பலருங் காணத் தொடர்ந்தவஞ் செய்த கோகனத வாசியாகிய இலக்குமி முன்னர், வடுகநாதர் வரலும், அவர் திருவடியில் வீழ்ந்து வணங்க, சீதேவிக்குத் திருக்கோல மாலையை முன்போல் அளித்துச் சொல்வார். உனக்குக் கோலமபொலியக் கொடுத்த வரத்தால், கோலக்கா என யாருங் கூறுவார். இப்பதியை வணங்கினவர் செல்வம் பெற்றுச் சிறப்புடன் வாழ்வார் என்றலும், அப்பொழுது நாராயணனும் எழுந்து கைம்மலர் கொண்டு மும்முறை வணங்கி,

அவ்வழியம் பெருமானை யடலாழித்
தடங்கரத்தா னலர்சு டுவிக்
கைவனச முகிழ்த்திருகண் டுளிதூங்க
வொளிதூங்குங் கழற்ருள் போற்றி
யிவ்வடியேன் மடமகற்றி யெடுத்தாண்ட
பெருங்கருணை யிறைவா போற்றி
தெவ்வடுபோ ரிலைச்சூலந் திரித்துலகம்
பரித்தருளுஞ் செல்வா போற்றி.

நிரையிதழ்த்தா மரையானு யானுநெடு
மொழிபேசி நிற்ப வேத
வரைமுடிகொய் திகலறுத்தென் னிரைமணிமா
நகர்போந்து நகுங்கை வேலால்
வரையகலந் துறந்தெனது வடிகுருதி
முடிநிறைய படுத்த வாறே
தரையினுமா னிடமடங்க லுருவிடந்து
குருதியுண்ட சரப போற்றி.

இவ்வாறு துதித்து வடுகநாதா! முன்னரும் வந்து தடுத்தாண்ட பழைய அருளால் இப்பொழுது நரசிம் மத்தையும் அழித்து வெற்றி கொண்டாய். இனி மேலும் என்னை ஆட்கொள்ள இரங்கி வந்தால் நான் அகங்காரங் கொள்ளா வண்ணம் இந்நரசிங்கத்தின் தோலையும் தேவரீர் போர்த்து எப்பொழுதும் அடை யாள மாக இனி என்னைப் போல் பிறருங் கண்டு அகங் காரங் கொள்ளாவண்ணமும் அருள வேண்டு மென்று போற்றினார். வடுகநாதரும் அங்ஙனமே தோலை யுரித்துப் போர்த்துக் கொண்டு திருமாலுக்கு அநுக் கிரகஞ் செய்து தன்னுடைய ஸ்தானத்திலே வீற்றிருந் தார். நரசிம்மத்தால் உலகத்தார்க்கு வந்த ஆபத்தை நீக்கிய காரணத்தால் இவ்வடுகநாதருக்கு ஆபதுத்தா ரணர் என்று யாவரும் வழங்கி வருவார்கள். இக்க தையை முற்காலத்தில் ததீசி முனிவர் மருகனை மீசனை நிந்தித்து யாகஞ் செய்த தக்கனிடத்தில் சொல்லி யரு ளினார். இவ்வடுகேசன் வீற்றிருக்கும் திருமலையை வணங்குபவர் யாவரும் நெடுநாள் புகழோடு மேதினி வாழ்வார். சுக்கிர வாரத்தில் இவ்வடுகநாதருடைய திருமேனியில் திருப்புழுகைச் சாத்தினவர் உலக மெல்லாம் தன் வசமாக அரசு புரிந்து அரனுலகடை வார். இத்திருமலையைத் தூரத்தே கண்டு துதித்த வர்க்கும் முத்தி சித்திக்கும் என்பதை நிலை நாட்டு மாறு திருமறு மார்பனும் கீழ்பாலுள்ள வில்வ வனத் தை யடைந்து மேல்பா லுள்ள தோணி புரத்தை வணங்கிக் கொண்டு, அன்றும் இன்றும் என்றும் நின்று தோத்திரித்தலாலே திருநகரி என்னும் பெயரை

அவ்வூர் கொண்டது. இத்தன்மை யாகத் திருமலைக் கொழுந்தின் சிறப்பீது என்று சூரவனடியே குடியாக் கொள்ளும் சூதர் மொழிந் தருளினர்.

ஆபதுத்தாரண வத்தியாயம்

முற்றிற்று.

---

## இருபத் தோராவது

## கழுமலநதி யத்தியாயம்.



திருமலைக் கொழுந்துற்ற திப்பிய சரிதமொழிந்த கற்பனைகடந்த சிற்பரனடியைக்கு ஆகரமான அருந்தவச் சூதர் கழுமலநதி யிவண் வந்த காதையையும் சொல்வார்.

முற்காலத்தில் சூரபன்மனுக்குப் பயந்து இந்திராணியோடும் இந்திரன் குருவாக்கின்படி சீகாழிக்கு வந்து பரமதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து பிரமேசரை வணங்கியிருக்க, சூரன். இந்திராணி போக மெய்த விரும்பித் தூதரைக் கூவி, சொர்க்கமடைந்து சசியைக் கவர்ந்து வருவாய் என்னலும், அவர்களுந் தேடிக்காணு தவராய், பூமியிற் குதித்துத் தேடுங்காலை, நாரத முனிவர் இந்திரனையடைந்து அவுணர்கள் தேடி வருவதைச் சொல்லலும், பயந்து, இந்திராணியோடும் மூங்கிலுருவாகி வசிக்கின்ற காலத்தில் காலையும் மாலையும் கங்குலும் என்றும் காழிநாதனை அர்ச்சிக்க எண்ணி, நந்தனவன மொன்று இயற்ற எண்ணுங்கால், வானம் வற

க்க மழையுங் குன்றி நிற்றலை இந்திரன் எண்ணி வருந்துகின்ற காலத்தில் நாரதர் வந்து சொல்வார்.

இந்திரனே! விந்தமும் மேருவும் வீணே பகைத்து மேலே செல்லும் இரவியும் இயங்காவண்ணம் பகைத்தெழுங்காலத்து, சூரிய னில்லாமல் பொழுது விடியாமல் வேதியரெல்லாம் சந்தியாவந்தனம் புரியாமல் வருந்துகின்றபோது, அகத்திய முனிவர் கைலையங்கிரி சென்று கடவுளிடம் இரக்க, கண்ணுதற் சாமியும் மகிழ்ந்து பொன்னி தீர்த்தத்தை அவர் கைக்கலத் தளித்து, விந்தமலையடக்கும் மேன்மையும் அருளி, அவரை விடுக்க, விந்தத்தை நோக்கி விரைவில் வருங்கால், சூரபத்மாவின் தம்பியாகிய, தாருகனுடைய மாயாபுரத்தில் கிரௌஞ்சன் என்பவனொருவன் மண்ணும் விண்ணும் மறையவும், மலையைப்போல் உயர்ந்து நிற்கவும், உத்தம முனிவர் அம்மலைக்குள் புக, பற்பல வழிகள் சொற்பனம்போலத் தோன்றவும், வருந்தி பித்தரைப்போல ஒருபக்கத்தில் பேதுற்றிருக்க, மேகமாகிப் பெருமழை பொழிந்தான் அவுணன். இதனை நிட்டையால் நன்குணர்ந்த அகத்தியர் மலையுருவாகிய வயங்குவாய் அவுணா! தாருகற் கொல்வான் சண்முகன் வருங்கால் அவன்றன் வேலால் அழிவை யென்றுரைத்து, அப்பாற் செல்லலும், ஆகாய முகட்டை அளாவிக்கொண்டு கதிரோனும் மேற் செல்லாவண்ணம் உந்திநிற்கும் விந்தமலையைச் சிந்து (குறள்) வடிவான செய்யோன் கண்டு, திருக்கரத்தாலே அதன் தலையை யழுத்தி பாதாளத்துள் இருத்தலும், பயந்து நின்ற பனிவரை யதனை முனிவர்கண்டு திரும்பிவருங்கால் சீரினை அளிப்பாம்

என்று புகன்று, தெற்குநோக்கிச் செல்லும்போது, அசமுகியின்ற அவுணப் பிள்ளைகளாகிய வில்வலன், வாதாவி எனுமிருவரும் முனிவர் வடிவங் கொண்டு நின்று, வருகின்ற குறுமுனிவரை நோக்கி, சுவாமீ! தாங்கள் எங்கள் வீட்டில் விருந்துண்டேக வேண்டுமென, அப்படியே, ஆடாக நின்ற தம்பி வாதாவியைச் சமைத்து ஊட்டியுடன் தம்பியே வா என்று வில்வலனழைக்க, கடமுடா என்று சாதித்திடு என்னுங்கால், அகத்திய முனிவர் விழுங்கிவிடுதல் வயிற்றினிற்றடவி வாதாவி ஜீரணமாகுதி யென்று சொல்லவும் அழிந்தனன். அதுகண்ட வில்வலன் போர, அவனைத் தருப்பாயுதத் தாலழித்து, அப்பதிக் கருகே அரனைப் பூசித்து, கொங்கு நாடடைந்து ஒருபக்கத்தில் அர்ச்சனை செய்யுங்கால், கமண்டலத்தின் நடுகொண்டுவந்த பொன்னித்தீர்த்த மடங்கிய குண்டிகையைக் கீழே வைப்பார். அந்தி லைக் கொண்டுபோக ஐங்கரக்கடவுளை வணங்குவமென்று வானவர்கள் செல்லப்போக. வானவர் கோமப் பிரதேசத்தில் இருந்தகோபுர வாயிலில் விநாயகப் பெருமானைத் தாபித்து அருச்சித்துத் துதித்து நிற்கவும், அவன் முன் கணபதி வந்து வேண்டியதென்னென, குறுமுனிவனின் கமண்டலநீரை மன்னுயிர் உய்யவும், சந்தனவனம் தழைக்கவும், தருவாயென்ன, அவ்வாறே செய்கின்றேன் என்று அநுக்கிரகித்து, கொடி (காகப)வடிவெடுத்துக் குறுமுனிமுன்போய் குண்டிகைமேலுட்கார, கவிழ்ந்து காவிரியாய்க் கடுவிசையோடும் ஐந்தலைப் பொருளோடும் அலங்காரமாக நால்வகைப் பொருளுந் தான் கவர்ந்தேகி, வள்ளல்போல வெள்ளமாகச் சழுமலநதி எனும் பேரோடு வந்தது.

அதனைக்கண்ட அகத்தியமுனிவர் கரும்பிள்ளையை அடிக்கக் கனன்று வரலும், விநாயகப் பெருமான் கணங்கள்சூழ மாதவன்முன்னர் தோன்றவும்,

குலமறை புகன்ற கடவுள ரெவர்க்குங் குழகனின்
  னடித்துணை போற்றி
அலதொரு செயலு முற்றுறு வதனு லாண்டகை
  நின்னையீண் டறியா
துலகுறு கொடியே னிருகர முறுக்கி யோங்கிய
  குட்டெனக் காக
கலைவலா வெளியேன் பிழைத்தமை பொறுத்தி
  களகணே போற்றியென் றிடலும்.

என்று இவ்வாறு தோத்திரிக்கவும், இந்திரனுக்காக நாரதர் மொழிப்படி நீ வைத்திருந்த கரகநீரைக் கவிழ்த்தேன் என்றார். அகத்தியர், விநாயகமூர்த்தி! திரும்பவும் இக்கரத்தில் தீர்த்தம் நிறையச் செய்வா யென்னலும், அவ்வாறளித்து, என்னால் இந்நதிவந்தமையால் என்பெயராலே விளங்குக என்று விநாயகர் மறைந்தார். காவிரிப்பெண் அகத்தியரைப் பார்த்து முனிவரே! கைலையைப் போலவே இக்காழிப்பதியிலும் எமது தந்தையாகிய கருணாகரமூர்த்தி அம்பிகையோடும் அமர்ந்து அன்பர்கட்குப் பேரின்பமளிப்பார். நிற்க, பிறவிப் பிணிமாற்றும் பெருமருந்தும், வினைக்கடல் கடக்கும் தோணியும், அவிச்சை யிருளையகற்றும் ஒண்சுடரும், பசிப்பிணி யுடைத்து அளிக்கும் தெய்வமணியும ஆகிய யான் இக்காழியில் வசிப்பேன். பின்னும் தெய்வநதி பலவற்றிலுஞ் சிறந்து விண்ணவரெவரும் மேன்மையடைய,கண்டு இருக்குமென்மேனிமேல்பட்டு

வரும் இளங்காற்று ஒருவன்மேற் பட்டாலும் அல்லது தெரிசித்தாலும், என்னை அடைந்தாலும், என்னைத் தொட்டாலும், உண்டாலும் அவன் செய்த வினைக ளெல்லாம் நீங்கி மேலானவான். பஞ்சமாபாதகர், வேள்விபழித்தவர், பெரியோரை யிகழ்ந்தவர், பிறர் மனைவிழைந்தவர், தெய்வத்தைப்பழித்தவர், ஞானி யை வைதோர், தாய்தந்தையரை வருத்தியவர், கள் ளம் புரிவோர், பொய்ச்சான்றுரைப்போர், போரில் புறங்கொடுப்பவர், கடுஞ்சொற்சொல்வோர், மது உண் போர், உறவினர் வருந்தவாழ்பவர், கற்புடைப்பெண் களைக் கோபிப்பவர், கன்னிகையோடு கலந்தவர், செய்ந்நன்றி மறந்தார், நண்பர்பொருளைக் கவர்ந்தார், மூத்தமங்கையரை மணந்தவர், புலால் விற்போரிடத் தில் பொருள் வேண்டினவர், விருந்தினரை முனிந்த வர், அபயமென்றளித்து விடுத்தவர், கருவினைச்சிதைத் தவர், முக்கடன் செய்யாதவர், நாணத்தை விட்டுத் திரிபவர், விதவையாகியும் கூந்தல் முடிப்பவர், மனி தர் நடத்தற்குரிய வழியிலே கலகம் விளைப்போர், வழிமறிப்பவர், வேதியரடைகின்ற பயனைக் கெடுத்த வர், அரசு கோடினவர், இரவில் ஒருவருக்குப் படுக்க இடங்கொடாதவர், வலையினாலே விலங்கினை வளைத் தோர், கூவலில் வீழ்ந்தகோவை யெடாதவர், சூதாடு பவர், ஆசான் மொழியை மறுத்தவர், காலையிற் கோ யிலைக்கண்டு பணியாதவர், கோவிலில் மகளிரைக் கூடிய வர், கணிகையரிடத்தில் பொருள் யாசிப்பவர், வாவி தூர்த்தவர், கோட் சொல்லுவார், புறங்கூறுவோர், மணவினைகெடுத்தோர், மகவை நீரில் வீழ்த்தியவர்,

வியாபாரிகளுக்கு ரிஷபத்தை விற்போர், சிவபெருமானணியும் மலரினைத் தரித்தவர், ஏழைப்பிள்ளைகள் கற்பதைக்கலைப்பவர், பொய்விலைவிற்பவர், இளங்கன்றுக்குப் பால் விடாதவர், பயனில கூறுவார் முதலிய எத்தீவினையோரானும் பகிழ்ந்து என்னுடைய தெய்வத்தன்மை பொருந்திய நீரிலே படிந்தனரேல், அவர் வினையெல்லாம் நான் அகற்றிக் கபூடலநதியாய் இத்தலத்தில் வசிப்பேன். நவக்கிரகங்கள் வக்கிரித்த பஞ்சகாலத்தும், சூரியசந்திரர் உள்ளவரையும் மாறுபடல் இந்நகரில் இருப்பேன். கங்கையின் முத்திலமும், யமுனையில் ஐந்நாளும், மூழ்கிய பலனை ஒருநாள் இந்நதியில் மூழ்கின் அளிப்பேன். அன்றியுந் தென்புலத்தவர்கட்கு விருந்திடுநாளும், கிரகணநாளும், சித்திரை விஷு, ஐப்பசி விஷு இவையும், தக்ஷிணாயன உத்தராயண நாளும், அமாவாசையும், மாக நாளும் ஆகிய இவற்றில் இந்நீரின் மூழ்கின். அவர் செய்த தீவினைத் தொகுதிக்குத் தீயும் அவர்க்கு அமுதுமாவேன். இந்நதிக்கரையுள் படிந்தவர் பிறவியிற் படியார். இந்நீரில் மாந்தர்களுடி பட்டால் இருவினைத்தொடர்பொழிபடார். இவ்வாற்றினுள்ள பொய்யேற்படின் நரகத்தில் வருந்தக் கடுமையாற் பொடிபடார். எள்ளளவாவது இந்நீரைக் குடித்தவர், தாய் முலைப்பால் குடித்திடார். அத்தன்மையான, பற்பல அற்புதங்களோடும் இக்காழிப்பதியில் வீற்றிருப்பேன், ஓ முனிவரே! உம்முடைய அருளும், ஐங்கரன் அருளும் பெறுதலால் வாழ்ந்தேன் என்னலும், கேட்டுமகிழ்ந்த வாட்டமில் முனிவர் வடதிசையுள்ள புனிதநீர்க் கங்கைபோல் உன்

பெயர்தானும் சோழநாட்டிலுள்ள இந்நதிக்கு விளங்குக. அன்றியும், உன்னுடையநீர், தடாகத்திலும், வயல்களிலும், கோயில் சூழ்ந்த இடங்களிலும் நிறையப் பெற்று ஓங்குக. கங்கை முதலிய நதிகளெல்லாம் உன்னிடத்தில் ஐப்பசிமாதத்தில் வந்து சேர்ந்து மாசினையகற்றுமாறு அருள்வாயென்று முனிவர் சென்றார்.

இந்திரன் கழுமலநதிநீர் கொண்டு நந்தவனத்தைப் பாய்ச்சிச் செம்மையாய் வளரும் புஷ்பத்தால் பூசனை முடித்து, இந்திராணியை அரிகர புத்திரன் (ஐயனார்) காவலில் இருக்கச் செய்து கைலையை அடைய, அப்பொழுது அசமுகி என்பவள் அண்ணனாகிய சூரனுக்குச் சேர்க்கும்படி இந்திராணியைக்கண்டு இழுத்தலும், ஐயனாரின் காவலாளராகிய வீரமாகாளர் இழுத்த அசமுகியின் கையை வெட்டினார். அங்ஙனம் வெட்டப்பட்ட இடத்துக்குக் * கைவிழுந்தசேரி யென இப்பொழுதும் அப்பேர் விளங்கும். உடனே அவள் செல்ல, புகலிப்பதிக்கு அக்கினிதிசையில் உள்ள சாத்தனாரின் காவலாளர் தம்மிடம் கொண்டுபோய் இந்திராணியை வைத்தார்.

நிற்க, பொன்னி நதியின் வளப்பமும் நந்தவனத்தின் செழுமையும் பொருந்தத் திருத்தோணிபுரம் விளங்கிற்று. பின்பு இந்திரன் வந்து, சிவபெருமானருள் பெற்று, இந்திராணியோடும் போக, விநாயகர் அருள் பெற்ற அகஸ்தியர் திருச்சையமலையை அடைந்தார் என்று அம்மலையின் வளப்பங்களையும் எடுத்து முனிவர்களுக்குச் சூதர் திருவாய் மலர்ந்தருளினார்.

---

* கைவிளாஞ் சேரியென வழங்குகிறார்கள்.

அச் சைசயமலையின் குவட்டு நடுவில்நெல்லிவிருக்ஷ மொன்று பொலியும். அவ்விடத்தில் சிவனடியவர்கள் வீற்றிருப்பார்கள். அந்தத் தெய்வ விருக்ஷமாகிய நெல்லி மூலத்தில் பொன்னிநீரைப் பொருந்த இறக்கி அகத்தியமுனிவர் பொதியம் சார்ந்தார் என்று, சூத புராணிகர் காந்தமா புராணத்துச் சங்கர சங்கிதையிற் சொன்ன கதை முற்றும் முனிவர்களுக் குரைத்தார்.

சமுமலநதி யத்தியாயம்
முற்றிற்று.

---

## இருபத்திரண்டாவது
## குமரவேள் பூசித்த வத்தியாயம்.

---

கழுமலநதியின் வரவினை முனிவீர் மகிழ்ந்து கேட்டவாறே இத்தலத்தில் வீற்றிருக்கும் கடவுளைத்துதித்து உபதேசம்பெற்ற கந்தன் கதையைக் கழுறுவேன் கேளீர்.

கைலைமலைக்குத் தென்றிசையிலுள்ள தேவகிரியில் கந்தசுவாமிக்குச் சிவபெருமான் உபநயன முகூர்த்தத்தைச் செய்துமுடித்துச் சூரனுக்கஞ்சித தூரத்தில் ஒடிவரும் இந்திரன் முதலிய அந்தரத்தவர்களின் வாட்டங்கண்டு, குமாரனாகிய முருகனைப் பார்த்துத் தேவர்களை வருத்தும் சூரனைச் சங்கரித்து வருவாயென்று, குதிரை பூட்டிய கொடி நெடுந்தேரையும், சிங்கனாதியராகிய நூற்றெட்டு வீரர்களையும், வீரவாகு தே

வர் முதலிய ஒன்பது துணைவரையும், குறுந்தாட் பூதத் தொகையாகிய இரண்டாயிரம் வெள்ளத்தையும், ஒன்பது லெக்ஷம் சேனைகளையும், அக்கினியாஸ்திரம் முதலிய படைக்கலங்களையும், அனுப்பலும், பின்னர் சுப்பிரமணியக்கடவுள் இந்திரன் முதலாகிய தேவர்களும், தம்பிமார்களும், மற்றவர்களும் தங்கள் தங்கள் ஊர்தியிலேறிக்கொண்டு உடன்வர, தாம் இரதத்திலேறி வரும்பொழுது சிவஸ்தலங்களாகிய திருக்கேதாரம், வாரணாசி, (காசி) ஸ்ரீசைலம், விரூபாக்ஷபுரம், திருக்காளத்திமலை, திருவேங்கடம், திருவாலங்காடு, காஞ்சிபுரம், அருணகிரி, திருமுதுகுன்றம், திருத்தில்லைவனம் ஆகிய தலங்களைத் தெரிசித்துக்கொண்டு மண்ணியாற்றுக்கும் காவிரியாற்றுக்கும் நடுவாகிய காழிநகர் வந்தார்.

சுப்பிரமணியக் கடவுள் வேணுபுரம் வந்ததை யுணர்ந்த சூரியன் தனக்குப் பகையாகிய பானுகோபனைச் சங்கரிக்கும்படி வருகின்ற சுப்பிரமணியக்கடவுள் என்னைக் கண்டால் என்வரவை யுணர்ந்தும் வணங்காமல் நிற்றற்குக் காரணம் என்னை யென்று கோபிப்பாரென்று அறிந்தவனைப்போல மேற்றிசையில் அஸ்தமித்தான். மருமகனாகிய சுப்பிரமணியக் கடவுளின் வரவையுணர்ந்த இலக்குமியாகிய மாமி நாணமடைந்து தன் மனைக்கதவால் சிறிது சிறிதாக மறைப்பதுபோல செந்தாமரைகளெல்லாம் வாட்டமடைய, அந்த இலக்ஷுமிக்கு உயிர்ப்பாங்கி கண்டு அருமைச்செல்வா! பொன் மருமகனே! வருக வருக என்று சிவந்தவாய்

திறந்து அழைப்பது போலச் செவ்வாம்பல்கள் மலர்ந்தன. இவ்வித சிறப்புடன் சூரியாஸ்தமனமாகவும், சுப்பிரமணியரின் அவதாரமெனும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் சமணப்பேய்கள் தொலையவும், விளங்கிய விபூதிப்பிரகாசம்போல வெண்ணிலவு எறிக்க, சம்பந்தமூர்த்திபோலச் சுப்பிரமணியர் விளங்க, கூன்பாண்டியனைப்போல உடன் வந்த இந்திரன் அப்பொழுது, தேவத் தச்சனைப்பார்த்து, இப்பதியின் வடக்கு வீதிக்கு வடபக்கத்தில் ஓராலயம் அலங்காரமாகச் சுபபிரமணியக்கடவுள் வாசஞ்செய்ய அமைப்பாய் என்றார். உடனே நவரத்தினங்களாலிழைத்த கால்களை நிறுத்தி, சுற்றுமதில் பொன்னொலியற்றி, திவ்விய மண்டபமும் பொருந்தப்படைத்தான். அவ்வாலயத்தில் தேரினின்றும் சேந்தன் இழிந்து, உட்சென்று வீற்றிருக்க, இந்திரன் முதலிய மற்றைத்தேவர்களும், தனித்தனி ஒவ்வோரிடத்திற் றங்கவும், இந்திரன் எழுந்து முன்னர் காட்டுத் தெய்வத்தினிடம் வைத்திருந்த தன் மனையாளின் ஆபரணங்களை வாங்கிப்பார்த்து, மனமுருகி, காமலோலனாய், சந்திரன் வருத்த, நித்திரை செய்யாமல் வருந்தி இராப்பொழுதைப்போக்க, சூரியனும் உதயமானான். விடிந்ததும் கழுமலநதியில் ஸ்நானஞ்செய்து தேவரும் முனிவரும் காங்கேயன் திருவடியில் பூங்கையா லர்ச்சித்து வணங்கினார். பின்பு குமரவேள் எழுந்து பெரிய சிவாலயத்துட் சென்று, தடாகமொன்றியற்றி, அதில் ஸ்நானஞ் செய்து, அந்நீரால் சிவலிங்கப்பெருமானை அபிஷேகித்து, அர்ச்சித்துத் துதிக்க, எம்பெருமான் பார்வதியோடும் இடபவா

கனரூடராய் எழுந்தருளிவந்து, தம்மை வணங்கும் சண்முகக்குமாரனை மார்போடணைத்து, மகிழ்வுடன் பேசி அநுக்கிரகம் புரிந்து, திருநெற்றியில் விபூதி பணிந்து, அவர் திருச்செவியில் மூலமந்திரத்தோடு ஐம்பதம் ஓதி, திருக்கரத்தில் பாசுபதாஸ்திரம், வேலாயுதம், வாட்படை முதலிய படைக்கலங்களைக்கொடுத்து, அவுணப் பூண்டின் அடிவேரறுத்து, சட்டியில் கொக்கை வெட்டிவதக்கி வருநுவையென்று வரம் பல அருளி இறைவனைகலும், அறுமுகவேலவன் அவ்வினை புரிவான் அமரர்கள் சூழச்சென்றான். வரகப்பதியிற்பூரகப்பொருளைத் தந்தைதக்குணர்த்திய கந்தசாமிக்கும் பேரருள் புரிந்த பெருமான் வாழும் பிரமபுரத்தின் பெரும்புகழ் செப்பல் சீரார் அறிவீர்! யாரால் இயலும்?

இக்காழியம்பதியில் கந்தனால் அமைத்த தீர்த்தத்தை நீர் என்றுரைத்தவன் அதிபாதகனாவான். கங்காதேவியும் கலந்து இதில் வசிப்பாள். பக்ஷிகள் மூழ்கியெழுந்து சிறகினை விரித்தலால் சிந்திய திவலைகள் மேற்படினும் மானுடர்கள் செய்தவினைகளெல்லாம் நீங்கிவிடும். அன்றியும், இத்தீர்த்தத்தில் கார்த்திகை மாசத்துக் கிருஷ்ணபக்ஷத் திதிகள் ஆறுநாளும், ஐப்பசி மாதத்தில் பூர்வ பக்ஷத்திதிகள் ஆறுநாளும் இதில் மூழ்குவோர் கந்த பதவியை முந்தியே யடைகுவார். பின்னரும் மாசந்தோறும் வருகின்ற இந்தஆறுநாளும் வந்துபடிந்து பஞ்சாக்ஷரசடாக்ஷரங்களைஉச்சரித்தோர் திரும்கள் நிதியெலாம் செவ்வனே யடைந்து, மறுமையில் முத்தி மகிழ்வுடன் சேர்வார். பன்னிரு மதியிலும் மன்னியே வருகின்ற கார்த்திகை நட்சத்திரத்தில்

இதில் மூழ்கியோர் ஜீவன் முத்தராவார். அதிலும் கார்த்திகைமாசக் கார்த்திகை விசேஷம். இன்னும், கார்த்திகை ஆவணி மாதங்களில் வருகின்ற சோமவாரங்களில் மூழ்குவோரும், மும்மலங் கடந்த முத்தரோயாவார் என்று, கந்தசுவாமியின் வரலாற்றையும், அவரால் இயற்றப்பட்ட தடாகவரலாற்றையும், காந்தபுராண சங்கர சங்கிதைப்படி சூதர் மொழிந்தருளினார்.

குமரவேள் பூசித்த வத்தியாயம் முற்றிற்று.

---

இருபத்து மூன்றாவது

## திருஞான சம்பந்தப்பிள்ளையார் திருவவதார வத்தியாயம்.

---

கூடப்பந்தாரோன் காதையைக் காதினில் திடப்பத்தியினால் செப்பியருளிய சூதமுனிவரரே! அம்முருகக் கடவுள் திருஞானசம்பந்த மூர்த்தியாக அவதரித்து, பலஅற்புதங்களையும்செய்துபோந்த அற்புத சரித்திரத்தைத் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று வினவிய சவுனகாதி முனிவர்களுக்குச் சொல்வார். நீங்கள் கேட்ட வினாவோ மிக நன்று! நன்று!!

முற்காலத்தில் போதாயன சூத்திரங்களை நன்காராய்ந்த மாதவத்தினராகிய சிவபாத இருதயர் என்னு

மோர் விப்பிரசிகாமணி இக்காழிமா நகரத்தில் வாழ்ப வர். அவர் ஒரு காதலனைப் பெறுவான் எண்ணங் கொண்டாராய் நாடோறும் பிரமதீர்த்தத்தில் மூழ்கிப் பிரமேசரை வணங்கிக்கொண்டு நெடுநாள் சுப்பிரமணி யரையே புத்திரராக வுவந்து பெறும்படி கடுந்தவஞ் செய்யுங்காலத்தில், அநாதிமல முத்தராகிய பரமசிவன் அவ்வேதியர் தவம் புரிவதை யறிந்து ஆறுமுகனை அன் பொடு பார்த்து குழந்தாய்! நீ, மண்ணுலகத்தில் நம் முடைய அடியவர்களையும், வேதாகமங்களையும் நிந்திக் கின்ற சமணர்களையும் புத்தர்களையும் அழித்து, வைதிக சைவந் தழைக்கச் செய்தாங்கவும் புரிந்து, நான் வீற்றிருக் கும் சிவஸ்தலங்கள் தோறுஞ் சென்று பதினாறாயிரம் செந்தமிழ்ப் பதிகங்களைப் பாடி வரவும், பிறந்து வாழ் ந்து பின்னர் இவ்விடம் வருவாய் என அருளி, பதி னாறாயிரம் சிவகணங்களை அடியாராக என்று சுப்பிர மணியருடன் அனுப்பி, உத்திரவு கொடுக்கப் பெற்று, சுவாமிகளின் திருவுளக் கருத்தின் படியே செய்து வருவல் என்று சொல்லவும், தந்தையாராகிய கைலா சபதி மீகூறக் குழந்தையை அம்பிகை மகிழ்ந்து உச்சி மோந்து, நம தலைவர் அருளிய வாறு நீ பிறந்த தலத்தின்கண் யான் வந்து திருமுலைப் பால் ஊட்டு வேன் என்று சொல்லி விடுக்க, வேலவரும் பக்கத்தி லிருந்த சிவகணத் தலைவரைப்பார்த்து தந்தையார் எண்ணத்தின் வழியே பதினாறாயிரவராகிய நீங்கள் அனைவீரும் சிவஸ்தலங்களில் அவதரித்து இருங்க ளென்று ஏவி, காழிபுரத்தின்கண் பிரம தீர்த் தக் கரையில் ஒரு பக்கம் அருந் தவம் செய்யும்

சிவபாத இருதயர் முன்னே இளஞ் சூரியனைப் போலக் குழந்தையாய் வந்தார். தவம் செய்தவர் கண்டு குழந்தையை எடுத்து மார்போ டணைத்துத் தவத்தினை நிரம்பித் தெய்வமணி பெற்றாற் போன்று உவகை மேற்கொண்டு, அருந்ததி யொத்த கற்பினை யுடைய பகவதிபாற் குழந்தையைக் கொடுக்க, வாங்கி மகிழ்ந்து, உச்சி மோந்து தன் வீட்டுக்குட் சென்றாள். தோணி நாதரின் திருமேனி போல் சோதி பொடு விளங்க வந்து பிறந்த திருக் குமாரருக்கு குலாசாரப் படி சாதகர்மம் முதலியவற்றைத் தசநாளும் செய்து முடித்து, நெற்றியில் திருநீறணிந்து, பூர்வபக்ஷ சந் திரனைப் போல வளர்ந்துவந்த காலத்தில், ஆயுளும் மூன்றாக, அப்பொழுது தாதையா ராகிய சிவ பாத இருதயர் பிரம தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்யச் செல் லுங் கால், இரு என்று பலதரமுங் கோபித்துச் சொல் லியும் கேளாமல் அக்குழந்தை உடன்வர அழைத்துக் கொண்டு வந்து கரையில் நிறுத்தி ஸ்நானஞ் செய்யப் புக்கனர். அக்கணம் அக்குமாரனும் இளம்பசி மிகுந் தார் போன்று, பூர்வ வுணர்ச்சி சிறிது சிறிதாகத் தோ ன்ற மனமுருகி அழலும், அவ்வொலி திருச் செவியில் படவும், எம் பெருமான் அம்பிகை யோடும் இடப வாகனத்தி லெழுந்தருளிவந்து, உமையை நோக்கி, உன் குமாரனுக்கு முலைப்பா லூட்டி யருள்வாயென, உடனே அம்மையார் பொற்கிண்ணத்தில் ஞானப் பாலைச் சுரந்து ஊட்டி, அழுகின்ற கண்ணீரைத் துடைத்து நிற்கவும், ஞானபோனகமுண்ட அத் தோன்றலும், பற்பல கலைகளையும் உணர்ந்து, பரஞா

னம் அபரஞானம் இரண்டையும் பெற்று, படைத் தளித்தழிக்கும் பரம் பொருளேக்கண்டு தெரிசித்துக் கொண்டு நிற்குங் குழந்தையை, ஸ்நானஞ்செய்து சந்தி யாவந்தன முடித்துவந்த தாதையார் பார்த்துக் கோ பித்து மார்பெல்லாம் பால் ஒழுகிக் கிடந்ததைநோக்கி, பால் புகட்டினர் யாவர் என்று அதட்டலும், பார்வதி சமேதராய் இடபவாகனத்தி லெழுந்தருளி நிற்கும் பரம சிவனைத் திருவிரலாற் சுட்டி, "தோடுடைய செவி யன்" என்றெடுத்து, "இவனன்றே" எனமுடித்து, அப்பரம் பொருட்குள்ள அடையாளங்களேக் காட்டிப் பதிகம் பாடி நிரப்பினர். அது கண்ட தந்தையார் குழந்தை பாடிய திருப்பதிகத்தையும், வானவர் பொழி கின்ற மலர்மாரியையும், பஞ்ச வாத்தியங்களி னெலி யையும், பெரிய நாயகர் துணைவியொடு வந்து போந்த அற்புதத்தையும் குறிப்பாற் கண்டு, அச்சமும் அன் புங்கொள்ள, ஆலயத்துட் செல்லும் குழந்தையுடன் தாமுஞ் சென்று, திருநிலே நாயகியுடன் பிரமேசரை யும், பெரிய நாயகிசமேத தோணியப்பரையும், சட்ட நாதரையும் வணங்கிக்கொண்டு, குதூகலத்தோடும் குழந்தையைத் தூக்கிக்கொண்டு திருமனைக்கு வந்தார். அன்றுமுதல் சுந்தரி அளித்த ஞானப்பாலுண்டமை யால், திருஞான சம்பந்தர் என்னும் திருநாமம் உலகெங் கும் பரவியது. பின்னர் தந்தையார் தோண்மேல் திருக்கோலக்கா என்னும் மேல்பாலுள்ள தூயபதி யை யடைந்து, கோலக்கா நாதரைத் தெரிசித்து "மடையில் வாளை" என்னும் பதிகத்தை மொழிந் தருளி, கொடித்துப்பாட, அப்பொழுது அக்கோலக்கா

நாதர் திருவருளால் திருக்கரத்தில் ஐந்தெழுத்துள்ள தாளம் பொன்னிற் பெற்று, உமாதேவியார் ஒலி கொடுக்க மகிழ்ந்து அதுகொண்டு தாளம் வரையறுத்து, அப்பதிகத்தைப் பாடி முடித்து, அநுக்கிரகம் பெற்றுத் திரும்பி வரும்போது, காழியீசர் மேல் "பூவார் கொன்றை" என்னும் பதிகம் பாடிவந்து, தாதையோடும் திருநனிபள்ளி சென்று. "காரைகள் கூகை" என்னும் பதிகம் பாடிப் பின்னர், அங்கிருந்து தலைச்சங்காடு, திருவலம்புரம் (மேலைப் பெரும்பள்ளம்,) காவிரிப்பூம் பட்டினத்துப் பல்லவனீச்சரம் இத் தலங்கள் போய்த் தமிழ்ப் பதிகங்களாலேத்தி, திருச்சாய்க்காடு (சாயாவனம்) வந்து தெரிசித்து, "மண் புகார்" என்ற பதிகம்பாடி, திருவெண்காடடைந்து சுவேதாரணியேசுரர்மேல் "கண்காட்டு நுதலானும்" என்னும் பதிகம்பாடி அருள்பெற்று, தென்திரு முல்லை வாயில், திருக்குருகாவூர், திருமயேந்திரப் பள்ளி இத்தலங்களிற் பதிகமொழிந்து தெரிசித்துக் கொண்டு, அவதாரத்தலமாகிய காழிக்கு வந்து, இருக்கின்ற காலத்து, திருநீலகண்ட யாழ்ப்பாணர் மனைவியுடன் வர, அவரை யுபசரித்து இருத்தினார். அந்த யாழ்ப்பாணர் தோணி நாயகரோடு சம்பந்தரின் திருவருளையும் பெற்று, இவர் பாடுந்திருப்பதிகங்களை யாழிசையோடு கலக்கும் அநுக்கிரகம் பெற்று மகிழ்ந்தார். பின்னர்த் தில்லைவனத்தை யடைந்து மூவாயிரவரோடு சிவகாமியம்மை காண நடனஞ் செய்யும் சபாபதி தேவரைக்கண்டு தெரிசித்து, "கற்றாங் கெரியோம்பி" என்னும் பதிகம் பாடி, திருவேட்களம், திருக்கழிப்

பாலையுந் துதித்துத் திரும்பத் தில்லைவனத்துக்கு வரும்போது, தில்லை வாழந்தணர்கள் மூவாயிரரும் சிவகணநாதராகத் தோன்றக்கண்டு தெரிசித்து, அப்பரிசை, யாழ்ப்பாணருக்குங் காட்டி வந்து, சபாபதி மேல், 'ஆடினாய் நறுநெய்யொடு" என்னும் பதிகந் தொடங்கி, வரும்போது கண்ட பரிசை ஒரு பாவில் வைத்துப்பாடி முடிந்து, அங்கு நின்றும் நிவாநதி வழியாய்த் திருநீலகண்ட யாழ்ப்பாணரின் சென்ன பதியாகிய திரு எருக்கத்தம்புலியூர் சென்று, தமிழ்ப் பதிகம் பாடித் துதித்து, பல க்ஷேத்திரங்களிலும் பணிந்து, திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) வந்து பழமலை நாதரைத் தோத்திரித்துத் திருவிருக்குக்குறள் சாத்தி, திருத்தூங்கானை மாடம் போய் பாமாலையினால் வணங்கி, திருவரத்துறைக்குச் செல்லுங்கால், அவ்வூரார் சிவபெருமான் கொடுத்தருளிய முத்துச் சிவிகை, முத்துச்சின்னம் இவைகளைக்கொண்டு எதிர்வர, அச்சிவிகையில் ஏறியருளி திருவரத்துறை யடைந்து தமிழ்ப்பா சாத்தி, பழுவூர், விசய மங்கை, திருவைகா, திருச்சேய்ஞலூர், திருப்பனந்தாள், ஓமாம்புலியூர், கடம்பூர், திருநாரையூர், திருக்கருப்பறியலூர் இப்பதிகளைத் துதித்துக்கொண்டு, தம்மூராகிய கழுமலம் வந்தடைந்தார்.

வந்தருளிய சம்பந்தர், தோணிநாயகரை யடைந்து தோத்திரித்து திருமனை புகுந்து தந்தையாரால் உபநயன விவாகஞ் செய்யப்பெற்று, காயத்திரி மந்திரங்களைப் பிறர் அறிவிக்காமல் தாமே இயற்கையா யறிந்தவராய்ப் பிரமபுரீசர்மீது, எல்லா மந்திரங்

களும் பஞ்சாக்ஷர வுருவமே" என்னுங் கருத்துட் கொண்டவராய் "அந்தியுண் மந்திரமஞ் செழுத்துமே" என்று பஞ்சாக்ஷரப்பதிகம் பாடி வசிக்குங்கால், திருநாவுக்கரசு சுவாமிகள் வர, அவரோடு அளவளாவிப் பின்பு, அவ்வாகீசர் யாத்திரை நிமித்தம் பிறவூர் செல்லலும், சம்பந்தப்பெருமான் பிரமேசர்மீது மொழிமாற்று, மாலைமாற்று, வழிமொழி, சந்த வியமகம், மடக்கு, ஏகபாதம், திருவிருக்குக்குறள், திருவெழுகூற்றிருக்கை, ஈரடி, ஈரடிவைப்பு, நாலடிமேல் வைப்பு, திருவிராகம், சக்கர மாற்று முதலாகிய விகற்பங்கள் பொருந்திய பதிகங்களைப்பாட, திருநீலகண்ட யாழ்ப்பாணர் அப்பதிகங்களை யாழிலேற்றி வாசித்தார். பின்பு ஆளுடைய பிள்ளையார் மற்றும் சிவஸ்தலங்களைத் தெரிசிக்க எழ, தாதையாருமுடன்வர, பொற்கவிகை பிடித்துக்கொண்டு அடியார்கள் முன் செல்ல, முத்துச்சிவிகையின் மேலெழுந்தருளி, முத்துச் சின்னமூத, புள்ளிருக்குவேளூர், திருநின்றியூர், நீடூர், புன்கூர், மண்ணிப்படிக்கரை, குறுக்கை, அன்னியூர், பந்தணை நல்லூர், திருமணஞ்சேரி, எதிர்கொள்பாடி, திருவேள்விக்குடி, திருக்கோடிகா, கஞ்சனூர், திருமாந்துறை, திருமங்கலக்குடி, திருவியலூர் இவைகளை வணங்கிப் பாமாலை தொடுத்திசைத்துப் பின்னர், திருந்து தேவன் குடிவந்து "மருந்து வேண்டில்" என்னும் பதிகம் ஓதி, திருவின்னம்பர் நாதன் மேல் இடைமடக்கியம்பி, மற்றுந்தலம் பல வணங்கி, வடகுரங்காடு துறை வாழ்த்தி, திருப்பழனம் ஏத்தி, திருவையாறடைந்து, "புலனைந்தும்" என்னும் பதிகமும்,

"கோடல் கோங்கம்" என்னும பதிகமும் சாற்றி, பெரும் புலியூர், திருநெய்த்தானம், திருமழபாடி போற்றிக்கொண்டு, மழபாடியீசர் மேல், "அங்கையாரழல்" என்று பதிகம் அருளித்தங்கியிருந்து, பின்னர், திருக்கானூர், வடகரை மாந்துறை வணங்கிப்பின், அன்பிலாலந்துறை, திருப்பாச்சிலாச்சிராமம் புகுந்து, அவ்வூரிலுள்ள கொல்லிமழவன் என்பவன் மகளுடைய நோயை யறிந்து, சிவ சந்நிதானங் கொண்டுபோய், "மணிவளர் கண்டரோ மங்கையை வாடமயல் செய்வதோ இவர் மாண்பது" என்னும் பதிகம்பாடிச் சுகப்படுத்தியனுப்பி, அங்கு நின்றும் திருப்பைஞ்ஞீலி, திருவீங்கோய்மலை வணங்கி, கொங்கநாடு சென்று பின், காவிரியாற்றின் தென்கரையிலுள்ள திருச்செங்குன்றூர், திருநணா வணங்கித் திருச்செங்குன்றூர் வந்து வசிக்குங்கால், பனிக்காலம் வந்து வருத்த, அடியார்கள் குளிர் சுரத்தால் வருந்துவதைக் கண்ட சம்பந்தமூர்த்தி செங்குன்றூர் நாதர்மேல் "அவ்வினைக் கிவ்வினை, என வெடுத்து அருந்தமிழ்ப் பதிகப் பாக்களினிறுதியில் "திருநீலகண்டம்" என்று வைத்துப்பாடிச் சுகப்பட்டபின், திருக்கொடுமுடி, திருவெஞ்சமாக்கூடல், திருக்கருவூர், மாணிக்கமலை (வாட்போக்கி), திருப்பராய்த்துறை, ஆலந்துறை, செந்துறை, கற்குடி, திருசிராப்பள்ளி, திருவானைக்கா, திருமகேந்திரம், திருத்தவத்துறை, திருப்பாற்றுறை, திரு எறும்பியூர், திருநெடுங்களம், மேலைத் திருக்காட்டுப்பள்ளி, திருவாலம்பொழில், திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருவெண்ணிப்

பதி முதலாகிய பிறதலங்களையும், சக்கரப்பள்ளி, புள்ளமங்கை, திருவாலந்துறை, சேலூர், பாலைத்துறை, திருநல்லூர் முதலிய பற்பல தலங்களையும் துதித்து, திருக்கருகாவூர் வந்து "முத்திலங்கும்" என்னும் பதிகம்பாடி, அவளிவணல்லூர், பரிதி நியமம், திருப்பூவனூர், ஆவூர், நல்லூர், திருவலஞ்சுழி, திருமேற்றளி, திருச்சத்திமுற்றம் ஆகிய ஸ்தலங்களை வணங்கி, திருப்பட்டீச்சரம்வர, முதுவேனிற் காலம் வந்து வருத்த, ஈசரருளாற் கிடைத்த முத்துப்பந்தர் பெற்றுப் பாமாலை சாத்தி, வடதளி, திருவிரும்பூளை, திருவரதைப் பெரும்பாழி, திருச்சேறை, நாலூர், குடவாயில், நறையூர், திருப்புத்தூர், சிவபுரம் பணிந்து, குடமூக்கு (கும்பகோணம்) வந்து, "அரவிரிகோடல்" என்னும் பதிக மலர்ந்தருளி, குடந்தைக் கீழ்க்கோட்டம், திருக்காரோணம், திருநாகேசுவரம் இவைகள் தெரிசித்து, அப்பால் திருவிடை மருதூர் நண்ணி, "ஓடேகலன்" என்னும் பதிகம்பாடி, குரங்காடுதுறை கும்பிட்டு, ஆவடுதுறைவந்து "இடரினுந்தளரினும்" என்னும் பதிகம்பாடி, அவரால் கொடுக்கப்பட்ட பொற்கிழி பெற்று, அக்கிழியை வேள்விசெய்யும் நிமித்தம் பார்க்க வந்த தந்தையாரிடம் கொடுத்தனுப்பி, திருக்கோழம்பம், திருவைகன் மாடக்கோயில், திருநல்லம், திருவழுந்தூர் இவைகளை வணங்கி, திருத்துருத்தி (குற்றாலம்) நகர்வந்து, "வரைத்தலை" என்னும் பதிகமருளி, மூவலூர், மாயூரம், திருச்செம்பொன்பள்ளி, திருவிளநகர், திருப்பறியலூர், திருவேட்டக்குடி தொழுது, தருமபுரம் பணிந்து யாழ் முரிப்பதிக மா

கிய "மாதர் மடப்பிடி" என்னுந் தமிழ்பாடி, நள்ளாறு போய் "போக மார்த்த பூண்முலையாள்" என்னும் பதிக மொழிந்து, வேறு முள்ள தலங்களைப் பணிந்து, சாத்த மங்கை சார்ந்து, திருநீல நக்கருடைய திரு விருந் துண்டு, திரு நாகைக்காரோணம், கீழ்வேளூர் கிட்டிப் பூசித்து, திருமருகல் வரவும், அப்போது, வணிக னொருவன் ஒரு கன்னிகையை யுடன் கொண்டு வரும் போது, இம்மருகலில் ஒரு மடத்தில் தங்க, அன்றிரவு அரவு கடித்து விஷந்தலைக் கேறி யிறந்த வணிகனைக் கண்டு மனம் வருந்தி மருகற் பிரானைத் துதித்து அலறும் கன்னியின் குரலைக்கேட்ட சம்பந்த மூர்த்தி அம்மடத்தை யடைந்து, அவள் குறையை யறிந்து, மருகனாதர் மேல், "சடையா யெனுமால்" என்ற பதிகந் தொடங்கி, "மருக லுடையாய் தகுமோ விவளுண் மெலிவே" என்று இரங்கிப் பாடி முடித்தும், இறைவனருளால் எழுந்த வணிகப் பிள்ளையையும், அக்கன்னிகையையும் மணம் புணர்வித்து, திருச் செங்காட்டங் குடிவந்து, "அங்கமும் வேதமும்" என்று பாடிப் பின்னர் திருப்புகலூர் வர்த்தமானீச்சரம் துதித்து, அப்பதிக்க ணுள்ள, திருமுருகனார் எதிர் கொள்ள, மடத்திற் சென்று வசிக்குங் காலத்தில், அப்பர் சுவாமிகள்வர, அவரைச் சம்பந்தமூர்த்தி யெதிர்கொண்டுபோய் வணங்க, அப்பரும் சம்பந்தரை அன்பின் முறையோடும் வணங்க, பின்பு தங்கள் தங்கள் வரவை இருவரும் உசாவிக்கொண்டு மகிழ்வுறும்போது, அப்பரைச் சம்பந்தர் நோக்கி ஆரூர் தொழுது வந்த பரிசை வினவ, அப்பரும் அங்கு நடந்த திருவாதி

ரைச் சிறப்பு முதலியவற்றைத் தாம் பாடிய பதிகத்தாலெடுத்துச் சொல்ல உடனே கேட்ட சம்பந்தர் அப்பொழுதே ஆரூர் தெரிசிக்க எழுந்தருளினர்.

எழுந்தருளிப் போம்போது திருவிற்குடி பணிந்து "பாடலனன்மறை" என்னும் பதிகம் பாடி, ஆரூரடைவோம், என்று மொழிந்து வந்து, ஆரூர்த்தியாகரை வணங்கி, திருவிருக்குக்குறள், "அந்த மாயுலகாதி" 'பவன மாய்ச் சோடையாய்" என்னும் பதிகங்களா 'லேத்தி, திருப்பனையூர், திருவலிவலம், திருக்கோளிலி வணங்கித் திருப்புகலூர், வந்து, "குறிகலந்த" என்னும் பதிகத்தால் புகழ்ந்து போற்றி, ஆண்டு வந்த முருக நாயனர், சிறுத்தொண்ட நாயனர், திருநீலநக்க நாயனர் இவர்களுக் கருள்செய்து நிறுவி, அப்பருடன் திருவம்பர், திருமாகாளம் வணங்கி, அதன்பின் திருக்கடவூர் வந்து "சடையுடையாய்" என்னும் பதிகம் பாடி, திருமயானம் போற்றி வந்து, குங்குலியக்கலய நாயனர் திருவிருந்துண்டு, திருஆக்கூர் வணங்கி, திருமீயச்சூர், திரும்பாம்புரம் தெரிசித்து, திருவீழிமிழலையில் அரசரோடு வந்திறைஞ்சி, " சடையார் புனலுடையான்" என்னும் பதிகம் பாடி, பேணு பெருந்துறை, தில்லைப் பதியடைந்து, பின்னரும் திருவீழி மிழலை வந்து பலநாள் தங்கிய காலத்தில் காழிவாழ் அன்பர்களடைய, அவர்களுக்கழுதாட்டி, கனவிற் கண்டபடி தோணிநாதரைத் திருவீழி மிழலைக் கோயிலிற் கண்டு தெரிசித்து "மைம்மரு பூங்குழல்" என்னும் பதிகம் பாடி மகிழ, பின்னர் வானங்குன்ற, பஞ்சகாலம் நேர்ந்தமையால் அடி

யார்களுக்கு வந்த கவலையை மாற்ற வீழிநாதரிடம் படிக்காசுபெற்று, அக்காசு வாசி பெறுவண்ணம், "வாசி தீரவே காசுநல்கிடீர்" என்னும் பாவால் பெற்று, அப்பால் திருவாஞ்சியம், தித்தலையாலங்காடு, வேளூர், சாத்தங்குடி, கரவீரம், திருவிளமர், திருவாரூர், திருக்காறாயில், திருத்தேவூர், திருநெல்லிக்கா, திருக்கைச்சினம், திருத்தெங்கூர், கொள்ளிக் காடு, கோட்டூர், வெண்டுறை, தண்டலை, திருக்களர் முதலிய தலங்களை அப்பரோடும் வணங்கி, வேதாரணியஞ் செல்லலும், சம்பந்தமூர்த்தி கேட்டுக் கொள்ளத் திருநாவுக்கரசு சுவாமிகள் வேதங்களா லடைக்கப் பட்ட திருக்கதவைத் திருப்பதிகத்தால் திறக்கவும், பின்னர் உள்ளே போய்க்கடவுளைத் தொழுது திரும்பி வரும்போது, அப்பர் சுவாமிகள் கேட்டுக் கொள்ள, சம்பந்தர் "சதுரமறை" என்னும் பதிகத்தால் அடைக்கப் பாடியபின், வாய்மூர் நாதரைக் கனவிற் கண்டபடி தெரிசிக்க வாகீசர் செல்ல, அதையறிந்த சம்பந்தரும் பின்சென்று "தளிரிளவரும்" என்னும் பதிகத்தால் சம்பந்தர் பாடிப் பின் இருவருமாகத் திரும்பி மறைக்காட்டிலேயே அப்பர் சுவாமிகளோடு வசிக்க, அக்காலத்தில் சமணர்களா லழிந்து வருகின்ற திருவாலவாய் பொலிவுபெற எண்ணியிருந்த குலச்சிறையாரும், மங்கையர்க் கரசியாரும் சைவமோங்குமாறு கருதி, மறைக் காட்டில் வதிந்திருக்கும் திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்கு ஒரு விண்ணப்பப் பத்திரம் அன்புடன் எழுதி அனுப்ப, அதைப் பார்த்தருளிய சம்பந்தமூர்த்தி கூட

லேக்கூட எழலுட, திருநாவுக்கரசுமூர்த்தி சுவாமிகள் கண்டு, சமணர்கள் மிகப் பொல்லாதவர்கள் சுவாமிக ளோ சிறு குழந்தைப் பருவம்; காலமோ நவக்கிர கங்களும் வக்கிரமான சமயம்; ஆதலால் சுவாமிகள் செல்வது உசிதமாகாதே யென, அது உணர்ந்த பிள்ளையார் நவக்கிரகங்க ளெல்லாம் சிவனடியவர்க்கு இடையூறு செய்யுமோ என்னுங் கருத்தால், "வேயுறு தோளி" என்னும் பதிகம் பாடிக்கொண்டு, கோடிக் குழகர், திருக்கடிக் குளம், இடும்பாவனம், உசாத்தா னம், கொடுங்குன்றம் இவைகளைத் துதித்து, ஆலவாய்க் குச்சமீபமாக வரும்போது, குலச்சிறையார் எதிர் சென்று வணங்க, இதுவோ ஆலவாயென்றும், நம்மரசி யார் சுகமோ என்றும் சுவாமிகள் வினவ, ஆம் என மந்திரி கூற "மங்கையர்க்கரசி," என்னும் பதிகத் தில் குலச்சிறை யாரையும் மங்கையர்க்கரசியாரையும் சிறப்பித்துப்பாடிக்கொண்டு மதுரைவீதி யடைந்து, சொக்கலிங்கேசர்மேல் திரு இருக்குக்குறள் பாடி, குலச்சிறையாரோடும் திருமடத்தில் எழுந்தருள, மந்திரி செய்த உபசாரங்கள் பெற்றபின் சூரியாஸ்த மனமாக, அன்றிரவு, சமணப்பேய்கள், வந்திருக்கும் சிவனடியார் கூட்டங்கள் தங்கிய மடத்தினில் தீவை க்க, அதை யறிந்த சம்பந்தப் பெருமான், அத்தீ அரச னிடத்தில் மெதுவாகச் செல்லுக என்று, "செய்ய னே" "பையவே சென்று பாண்டியற் காகவே," எனப் பதிகம் பாடியருளினார்.

அங்ஙனம் பதிகம் பாடியபின் அந்த நெருப்பு தீச்சுரப்பிணியாகப் போய்ப் பாண்டியனை வருத்த,

பொழுது விடிதலும், •அரசன் சுர நோயால்•வருத்தம் சகிக்காதவனாக, சமணாசாரியர்கள் வந்து தங்களுடைய கருவிகளாகிய மயிற் பீலி, பிரம்பு, மந்திரம் இவைக ளைக் கொண்டு தங்கள் கடவுளைத் தொழுது, அப்பிணி யைத் துடைக்கப் பலதரம் முயன்றும், அணு அள வேனும் சுகப்படாமல் மேலும் மேலும் வருத்தம் அதி கமாயிற்று. பின் சூரியோதயமாகவும், பாண்டியன், வருந்துவதைக் கண்ட அரசியாரின் உத்திரவுப்படி குலச் சிறையார் திருஞான சம்பந்தசுவாமிகளிடம் வந்து விண்ணப்பிக்க, சம்பந்தர் எழுந்தருளிக் கோயி லினுட் புகுந்து, "காட்டுமாவுரி," என்னும் பதிகத்தால் சொக்கலிங்கேசரைத் துதித்து வீதிவலம் வந்து, அர சன்மனை புகுந்து ஆசனத்தமர்ந்து, அமணர்களைக் கண்டு அஞ்சும் அரசியாருக்கு மனந் தெளியும் வண் ணம், "மானினேர் விழிமாதராய்," என்னும் பதிகம் பாடி, அரசன் வினவியதற்குப் பதிலாகத் தம்முடைய ஜன்ம நக்ஷத்திரம் ஈராறு பெயர் பூண்ட கழுமலம் என்று திருவாய் மலர்ந்தருளலும், அரசன் சம்பந் தரை வலப்பக்கமும், சமணர்களை இடப் பக்கமு மிரு ந்து எனக்குள்ள பிணியை நீக்குங்கள் என, கழுமல மூர்த்தி, "மந்திரமாவது நீறு," என்னும பதிக மருளி வலப் பக்கப் பிணியைத் திரு நீற்றால் தடவி நீக்க, இடப்பக்கம் உள்ளநோய் வலப்பக்க நோயையும் கவர்ந்து அதிகப்படச் சகிக்காத அரசன் சமணர்களைக் கோபித்து சம்பந்தராலேயே இடப்பாகப் பிணியும் நீங்கப் பெற்று, அவருக்கு அடிமை புகுவான் எண்ண, அப்பொழுது, சமணர்கள் கண்டு, எங்களுடைய கட

வுள் வலியையும், நம்முடைய கடவுள் வலியையும் எழுதி அக்கினியிலிட்டு வெற்றி காண்போம் என, சீகாழி வேந்தர் ஆம் என்று, தேவாரத் திருச் சுவடியில் பட்டுக் கயிறு சாத்த, திருநள்ளாற்றுப் பதிகமாகிய "போகமார்த்த பூண்முலையாள்," என்னும் பதிகம் வர, உடனே நள்ளாறர்மீது, "தளிரிளவள ரொளி," என்னும் பதிகம் பாடித் துதித்து எடுத்த ஏட்டை அக்கினியிலிட, சமணர்களும் தங்களாலியற்றிய பாக்களையும் இட, சமணர்களேடு சாம்பலாக, சம்பந்தரேடு பசுமையாய் விளங்கவும், அதினும் தெளியாதவராய், நம் இரு கடவுளின் வலிமையையும் ஆற்றிலிட்டுப் பார்ப்போம். அதிலும் பழுதுபடிற் கழுமுனையிற் செல்வோம் என, அதற்கும் ஒம் என்று ஞானமூர்த்தி, "வாழ்க வந்தணர்" என்னும் பதிகத்தைப் பாடி வைகையிலிட, வெகுவேகமாக எதிர்த்துக்கொண்டு சென்றது. சென்ற ஏட்டைக் குலச்சிறையார் எடுக்கச்செல்ல, சம்பந்தர், "வன்னி," என்னும் பதிகம் ஏடகநாதர் மேற்பாட, ஆண்டே தங்கிய ஏட்டை மந்திரி எடுத்துவந்தனர். அமணர்களின் ஏடு கடலை நோக்கிக் கடிதாய் ஓடிற்று. பின்னர் வலிமுற்றும் இழந்த சமணக் குழாங்கள் தோற்று, தாங்கள் முன்னரே கூறிய சபதப்படி கழுவி லேறினர் சிலர், ஓடினர் சிலர், வாடினர் சிலர், ஏங்கினர் சிலர், நீங்கினர் சிலர். உடனே பாண்டி நாடெல்லாம் விபூதி ருத்திராக்ஷதாரணம் பொலியப்பெற்றுப் பஞ்சாக்ஷரநாமமே பரவிற்று. இவற்றைக்கண்டு ஆச்சரியமடைந்த பாண்டியன் ஆனந்தக்கடலி லழுந்தியவனாய்ப் புகலிப்பிள்ளையின் பொன்னடி வீழ்ந்து, திருநீறணிய,

பாவரும் அணிந்தனர். மந்திரியும், அரசியும், அரசனும் துதிக்க, சம்பந்தர் ஆலயத்தினுட் சென்று, சொக்கலிங்க மூர்த்தியையும், சோமசுந்தரேஸ்வரரையும், மாறியாடினவரையும், மீனாக்ஷியம்மையையும், அஷ்டாங்க, பஞ்சாங்க, திரயாங்க நமஸ்காரங்களுடன் அஞ்சலித்துப் போற்றி, "வீடலாலவாயிலாய்," என்னும் பதிகமும், "ஒன்றுமேவ றுணர்வு," எனும் பதிகத்தில், "நீணைப்பாதே கியமம்." என்றும் பாடியும் அநுக்கிரகம் பெற்று, தம்மைத் தேடிவந்த தந்தையார் சிவபாத இருதயரைக்கண்டு வணங்கித் தோணிநாயகரை நினைத்து, "மண்ணினல்ல," என்னும் பதிகம் பாடிப் பின் அரசன் மந்திரியோடும், மங்கையர்க்கரசியாகிய மனைவியோடும் தன்னுடன் வர, ஆளுடைய பிள்ளையார் சிவிகை மேற்கொண்டு, திருப்பரங்குன்று, ஆப்பனூர், புத்தூர், பூவணம், சுழியல், குற்றாலம், குறும்பலா, திருநெல்வேலி, திருப்புடை மருதூர், இராமேஸ்வரம் முதலிய பதிகளில் பதிகங்கள் பாடிக்கொண்டு, கீழ்பால் இலங்கைத்தீவு சம்பந்தமாயுள்ள திருக்கோணமலையையும், திருக்கேதீச்சரத்தையும் இங்கிருந்தவாறே துதித்து, திருஆடானை, திருப்புன்வாயில், மணமேற்குடி வணங்கி மதுரையார் மூவரையும் விடை கொடுத்து அனுப்பி, திருக்களர், திருப்பாதாளீச்சுரம், துதித்துத் திரும்பிக் கொள்ளம்பூதூர் வரவும், முள்ளியாற்றுப் பெருக்கு அதிகமாக, "கொட்டமேகமழும்" என்னும் பதிகம்பாடியருளி, ஓடமேறி இக்கரைவந்து திருநள்ளாறு தெரிசித்துத் திருத்தெளிச்சேரிவந்து சேர்ந்தார்.

திருத்தெளிச்சேரி வந்தடைந்த திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் ஆங்குச் சூழ்ந்திருந்த புத்த நந்திதலையில் இடிவிழச்செய்து, அவர்களை வாதில் வென்று, திருக்கடவூர் போற்றி, அப்பர் சுவாமிகள் தங்கியிருக்கும் பூந்துருத்திக்குப் போம்போது, அப்பர் எங்குற்றார் என, இங்குற்றேன் என்று அவர் சிவிகை சுமந்துபோகும் அரசமொழியைக் கேட்டு, திடீர் என்று சிவிகை விட்டிழிந்து, அவரைச் சம்பந்தரும், சம்பந்தரை அப்பரும் வணங்கிக்கொண்டு, அவ்வூரை வணங்கி, ஆளுடைய அரசர்மடத்தில் ஆளுடைய பிள்ளையாரும் விருந்தமுதுண்டு காஞ்சிநகர் முதலிய வடதலங்களைப் பணிந்த வரலாறுகளை அப்பர் சொல்ல, சம்பந்தரும், தெற்கேயுள்ள தலங்களையும் வணங்கி, அமணக்குறும்பின் அடிவேரகழ்ந்து, வாகைபெற்று, பதிபல தொழுதுவந்த வரலாற்றை அரசுபால் மொழிந்து, அவர் விருப்பத்தின்படி பொன்னியாற்றுக்கு வடகரையுள்ள திருநெய்த்தானம், திருவையாறு, திருப்பழனம் வணங்கிக் கழுமலம் சேர்ந்து, "உற்றுமை" என்னும் பதிகம் முதலிய பலபதிகங்கள் பாடியபின், வடபுலஞ் சென்று, தில்லை வணங்கி, திருத்தினையூர், திருமாணிகுழி, திருவடிகூர், திருவக்கரை, இரும்பை மாகாளம், திருவதிகை வந்து, "குண்டைக் குறட்பூதம்" என்னும் பதிகமிசைத்து, திரு ஆமாத்தூர் தொழுது, "குன்றவார்சிலை," என்னும் பதிகம் பாடி, திருக்கோவல், அறையணி நல்லூர், திருவண்ணாமலை வணங்கி, "உண்ணாமலை யுமையாளொடும்," "பூவார்கொன்றை," என்னும் பதிகங்கள்பாடி, திருவோத்தூர் சென்று

ஆண்பனைகளைப் பெண்பனைகளாக்கி, திருமாகறல், திருக்குரங்கணில் முட்டம், இப்பதிகளை வத்திக் கொண்டு, காஞ்சிநகர்சென்று, "மறையான்," என்னும் பதிகமும், யமகப் பதிகமும், திருஇருக்குக் குறளும் பாடி, காமக்கோட்டம், திருநெறிக் காரைக்காடு, அநேகதங்காபதம், திருமேற்றளி அடைந்து போற்றி, திருமாற்பேறு, திருவல்லம், இலம்பையங்கோட்டூர் கண்டுவாழ்த்தி, திருவிற்கோலம், தக்கோலம், திருவூறல், பழையனூராலங்காடுபோய், இராவுதுயிலும் போது, ஆலங்காட்டீசர் கனவில் வந்து, எம்மை மறந்தனையோ என, உடனே எழுந்து கடவுளைத்துதித்து, "துஞ்சவருவாரும்," என்று செந்தமிழ்ப்பதிகம்பாடியருளி, திருப்பாசூர் தெரிசித்து, திருவெண்பாக்கம் துதித்து, திருக்காளத்தி சென்று பணிந்து, "வானவர்கள்," என்னும் மாலை சாத்தி, திருக்கேதாரம், திருக்கோகர்ணம், ஸ்ரீசைலம், இந்திரநீல பருப்பதம், முதலியவைகளை அங்கிருந்தபடியே பாடி, திருவேற்காடு தொழுது, திருவலிதாயம் பரவி திருவொற்றியூர் வந்து, "விடையவன்" என்னும் பதிகப்பாவாற் பரசி ஆங்குற்றார்.

அப்பொழுது தென்புறமுள்ள மைலாப்பூர் வாழும் சிவநேசவணிகன் ஒண்பான் தன்புத்திரிக்கு ஏழாம் வயதில் அரவங்கடித்து உயிர்போக, தகித்து மகளின் எலும்பைப் பத்திரப் படுத்திவைத்த குடத்தை எடுப்பித்துக்கொண்டு வந்து சம்பந்தமூர்த்தி திருவடிசந்நிதியில் வைத்து வணங்கிநிற்க, சம்பந்தசுவாமிகள் எற்புக்குடத்துடன் செட்டி உடன்வர,' மைலாப்பூர் முழு முதற்கடவுள் சந்நிதானமடைந்து, "மட்டிட்ட

புன்னை யங்கானல்" என்னும் பதிகத்தில், "அட்டிட்டல் காணுதே போதியோ பூம்பாவாய்" என்று வைத்துப்பாடி முடித்தவுடன், இறந்த அன்று முதல் அதுவரையும் உள்ள வயதுடன் வெளியேவரவும், சம்பந்தப் பெருமான் அநுக்கிரகம் புரிந்து, அங்குநின்றும் எழுந்தருளி, வான்மியூர் இறைஞ்சி, திருவிடைச்சுரம் போற்றி வண்ணத்தமிழ்பாடி, கழுக்குன்றெய்தி, "தோடுடையான்," என்னும் அருட்பதிகம் அணிந்து, பின்னர் அச்சிறுபாக்கம் போய் பாடல் அருளி, அரசிலிப் பதிசென்று அருட்பா மொழிந்து, பனங்காட்டேத்தி, தில்லைநகர் தொழுது புறப்படுங்கால், தந்தையார் வந்து அழைத்துச் செல்ல, சண்பைநகர் வரும் பொழுது, "வண்டார்குழல்" என்னும் மாலை சாத்திக் கொண்டு, பெரியநாயகன் திருவடியை வந்து தொழுது "காழிநகர் சேருமின்" என்னும் பதிகத்தாற் பரவி, நீல நக்கரோடும், முருகரோடும் தன்மாளிகை யடைந்திருந்து, வாழ்ந்து கொண்டு இருந்தார்.

பின்னர் அந்தணர் குழாங்களும், சிவபாத இருதயராகிய தந்தையாரும், இன்னும் உறவினர் பெரியார் பலரும் நம் சம்பந்த மூர்த்திக்குத் திருமணநடத்த எண்ணி, வடக்கேயுள்ள நல்லூர்சென்று, நம்பாண்டாரின் குமாரியை மணம் பேசிவந்து, காழியின் தீபமாம் புத்திரசிகாமணியைச் சிவிகையேற்றி கொண்டுபோய், வேதம் நான்கு மொலிக்க, வேதியர்சூழ, வைதிக சைவச் சிவனடியவர்கள் அரஅர என ஒலிக்க, அழகுக்கழகு செய்வார் போன்று, திருஞானசம்பந்தப் பெருமானுக்கு அலங்காரஞ் செய்து விண்ணவர்கள் பூமாரி

பொழிய, திருச்சின்னம் ஊத, திருநல்லூர்ப் பெருமண மடைந்து, சிவிகையினின்றும் காழிப்பிள்ளையை இழிவித்து, அவரைத் திருமணப்பந்தரில் வீற்றிருக்க வைத்தார்கள். உடனே மங்கல மாதர்கள் வாழ்த்திசை பாட, மாமறையோர்கள் வேதாத்தியயனஞ் செய்ய, ஓம அக்கினியும் வலமிட்டெரிய, தெய்வம் களிக்க, உலகத்தார் நம்பாண்டார் மருகர் வந்தாரென்று, திருஞான சம்பந்தரைப் பாராட்ட, பின்னர் பூங்கொடியவளை அலங்கரிப்பித்து, அம் மணப்பந்தரில் கொண்டுவந்து சேர்த்தார்கள். ஞானத்திருவாம் ஒருமாதைச் சேர்ந்து, ஒருமாதை முயலகனையினின்றும் நீக்கி, ஒருமாதை நாயகனுடன் மணம் புணர்வித்து, ஒருமாதை அடிமைப்படுத்தி, ஒருமாதை எழுவித்து, தரைமாதை யிருள்துடைத்த சம்பந்தமூர்த்தியாகிய பெருமானார், மலைமாதைச் சேர்ந்தார் தாள் மறவாத மனத்தினராய், உதகத்தால் தத்தம் செய்து கொடுத்த மணமாதைக் கைப்பிடித்தார். இங்ஙனம் அந்த மணப்பெண்ணைக் கையிலே பிடித்துக்கொண்டு, மணநாதப் பெருமான் அக்கினி வலம்வந்து, அம்மியில் அப்பெண்ணடியைத் தூக்கிவையும் என அங்குள்ள பெரியோர் சொல்ல, திருஞானசம்பந்தர் "கல்லூர்ப்பெருமணம்" எனத் துதித்து, வலம்வரல் சிவபெருமான் திருவடிக்குச் செய்வது முறைமையென்று எழுந்து, அன்பர்கள்சூழ ஆலயஞ்சென்று, "காதலாகி," என்னும் பதிகத்திறுதிதோறும் பஞ்சாக்ஷரத்தை வைத்துப் பாடிக்கொண்டு உள்ளே போகவும் சிவலிங்கப் பெருமான் சந்நிதியில் ஒரு பெருஞ்சோதி தோன்றிற்று. அச்சோதியுள்

சூழ்ந்து நின்ற அடியார் குழாங்களை ஒவ்வொருவராகப் புகுத்தி, திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருநீல நக்கர், திருமுருகர், மற்றும் அடியார்கள், தந்தையாராகிய சிவபாத இருதயர் இவர்களை உடன் கொண்டு கையிற்கோத்த கற்புடை மனைவியோடு ஞானசோதியில் வானவர் பார்க்கப் புகுந்தனர். அப்போது அச்சோதியானது பாண்டியன் சரீரம் அழகினை யடையவும், பூசிதனம் பொலிந்து தோன்றவும், வைதிக சைவம் பலிந்துவாழவும் காழியிலவதரித்த பிள்ளையார் மனையாரோடு புகுந்த முத்திஸ்தானம் என்று யாவரும் அறியவும் சிவலிங்கக் குறியாய்ச் செப்பிடுகின்றது.

இவ் வற்புதங்களைப் பார்த்துக்கொண்டு ஆகாயத்தில் நின்ற அன்னவூர்தியானும், உவண ஊர்தியானும், யானையூர்தியானும், மற்றுமுள்ள தேவர்களும சீகாழிநாதர் திருமுன் அவர் ஆஞ்ஞைப்படி வந்து, பணிந்து, நின்றவர்களைப் பிரமேசர் பார்த்து, எம்மைத் தலங்கடோறுஞ் சென்று பதிகங்களால் துதித்த செந்தமிழ் வேந்தனுந் திருஞானசம்பந்தனை இவ்வாலயத்தின் வடபாலில் பொன்விம்பத்தில் ஆவாகனஞ்செய்து, பூசித்து நித்திய நைவேத்தியங்களெல்லாம் முறையாய் விளங்கச் செய்வீர்களென்றும், பன்னிருமாதத் திருவாதிரை நாளிலும், வைகாசிமூலத்திலும், ஆவணி ஐப்பசி சதயத்தும், மகரமாசத்து அமாவாசையிலும், ஆனிமாசத்து உரோகிணியிலும், விசேஷ பூஜை செய்யுங்களென்றும், நம் சம்பந்தனுக்குப் பங்குனி மாசம் சதயநக்ஷத்திரத்தில் கொடியேற்றி எட்டுநாளும் அவன் செய்த

அற்புதங்களை விழாவாகச் செய்து, ஒன்பதாநாள் ரதோற்சவமும், திருவாதிரையாகிய பத்தாநாளில் தீர்த்தமும் கொடுக்கச்செய்து, அன்றைக்கு நீங்கள் யாவரும் இப்பிரமதீர்த்தத்தில் மூழ்கவேண்டுமென்றும் அநுக்கிரகித்தருள, அவ்வாறே தேவர்களெல்லாரும் வருஷந்தோறும் செய்து வந்தார்கள்.

இத்திருஞானசம்பந்த மூர்த்தியின் திருவிழாவுக்காகச் சன்மார்க்க வழியால் வந்த பொருளை உதவினர் சிவலோகத்தை யடைவார். அவரை விரும்பி வணங்கியவர் யமபுரமடையாது சிவசாயுச்சியமடைவார். சம்பந்த மூர்த்தியைத் தொழ விரும்பித் தூரத்தினின்றும் வருபவர் இடைவழியில் மாய்ந்தால், தெரிசித்தவரின் பலனைப் பெறுவார். ஏ முனிவர்காள்! இத் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரின் திவ்ய மகாசரிதத்தை வினவியவரும், படித்தோரும், கேட்டோரும், கேட்பித்தோரும் ஆகிய யாவரும் பதவிகளெல்லாவற்றையும் முறையாக அநுபவித்து, பரமபதியின் திருவடி நீழலை யடைவாரென்று சூதபுராணிகர் திருவாய் மலர்ந்தார்.

திருஞான சம்பந்தப் பிள்ளையார் திருவவதார வத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்து நான்காவது

# தீர்த்த மகிமை யத்தியாயம்.

சவுனகாதி முனிவர்கள் திருஞான சம்பந்தச் செல்வன் திருக்கதை யமிழ்தத்தை இரண்டு செவிகளாலும் உண்டு மகிழ்ந்தோம். இனி, முன்னர் தனித் தனியாக அநேக தீர்த்தங்கள் இக்காழியில் உள்ளன என்று தொகுத்துச் சொல்லிய மகிமைகளை சூத மாதவச்சுத்தசிகாமணீ! சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்திக்க அங்ஙனமே கூறுகின்றார்.

பிரமதேவர் ஒரு ஊழிகாலத்தில் பிரமேசனை வணங்குவான் வந்தபொழுது தோற்றிய தீர்த்தம் பிரமதீர்த்த மென்று சொல்லப்படும். இத்தீர்த்தம் அநாதியே யுள்ளது. ஒரு பிராமன் இதில் ஸ்நானஞ் செய்து சிருஷ்டித்தலாகிய வரத்தைப் பெற்றான். மற்றொரு மலையோன் மூழ்கி, சிவசாயுச்சியம் பெற்றான். வேறொரு வேதியன் இப்பிரமதீர்த்தக்கரையில் வந்த உடனேயே வேத வேதாந்தங்களில் வல்லவனாய் பிரமப் பதவியடைந்து சிருஷ்டி பெற்றான். இப்படி இத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினவர்களின் தொகையும் அவர்கள் பெற்றபேறும் அளவிறந்தன என்று நூல்கள் பேசும். ஒருமை அறிவால் இருமை வினையும் மும்மலங்களும் நாற்பிறப்பும் ஒழிக்க, ஐம்புலனை யடக்கி, அறுவகைக் குற்றங்களை யகற்றி, ஏழிசையோடும் எண் குணத்தோனாகிய காழி நாதரைத் தோத்

திரித்து அறிந்தவரே பிரமதீர்த்தத்தின் பெருமையை அறிவார்.

இந்தப் பிரமதீர்த்தத்தில் தவழ்ந்து வரும் இளங் காற்று ஒருவன் மேற்பட்டால் அக்கணமே அரம்பை முதலிய தேவமகளிர்கள் விமானத்தோடு வராலும், அவ் விமானத்திலேறிக்கொண்டு அப்பெண்கள் இருபக்க மும் சாமரம் போட, அவர்க்கஞ்சென்று போகத்தை யநுபவிப்பான். கடுந்தவம் பன்னாட் புரிந்தும் காழி நாதரின் திருவருள்வலி பெற்றோனெனும இப்பிரம தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்யாமற் போவானே யா ஞல், அப்பிரமதேவனின் சிருஷ்டித்தொழில் எவ் வாறு முடியும்? அத்தகைய தீர்த்தத்தில் ஆடிநர்யா வருட் வீட்டு நெறி அடைவார் என்பதற்கு ஐயமு முண்டோ? தன்னை அர்ச்சித்துத் துதித்தார் மாட்டு முத்திநிலை வழங்கும் எம்பெருமான் அடியவர்கட்குச் சத்தி நிபாதத்தால் முத்திப்பேறு கொடுக்க, இடப்பா கத்து வீற்றிருக்கும் திருநிலை யழகிக்கு அருட்கண் காட்டல் போல் இத்தீர்த்தத்தின்பாலும் அருட்கண் பார்வை சாத்தி, அடியார்க்கு அருள் புரிவிப்பார்.

இவ் வயன்றீர்த்தம் முத்தலையை யேந்தலினல், முடிவில் ஆரணங்காட்டி முடித்தவாற்ருல், மெய்த்தவர் ஆடகம் (பொன்) பெறலால், ஆன்மாக்களைச் சுற்று கின்ற மலங் களைதலினல், விமல (பரிசுத்தம்) த்தால், அட்டமாசித்திகளை அருட்கண் பொழியுந் தரத்தால், பேர் அரவம் (ஒலி, பாம்பு) தரித்தலால் சடாதரராகிய பிரமேசலிங்கப் பெருமானை ஒத்து விளங்கும்.

பூமிதேவியின் திருமுகமோ, அல்லது அவள் இருவிழியோ, திலகமோ, மங்கல நாணோ எனவும், திருமகட்குத் தாமரை மலரோ, அன்றி அவளுடைய ஆபரணங்கள் வைக்கும் உறையிடமோ, அற்றேல், திருவைகுண்டத்தினும் பேற்றுனமோ எனவும் பேசத் தகும் இம்மலரோன்றடத்தின் கரையைக் காணுர் எவரோ அவர் முத்திக்கரைகாணுர்.

மறையினைத் தேர்ந்த வாணிகேள்வன் இருபத் தெட்டுக்கோடி தீர்த்தங்களெல்லாம் ஒருங்கே வந்ததை யும் இத்தீர்த்தத்தில் மூழ்கி, நால்வகை யண்டங்களை வகுத்து, நாற்பிறவிகளில் உழலாது, யார்க்கும் கதி யளிக்குமாறு நான்கு கோணமாக இத்தடாகத்தை உண்டாக்கினன்.

ஐப்பசி விஷுவன்று கங்கையாதி தீர்த்தங்கள் இதிற் கலத்தலால் அந்நாட்படிந்தோர் மும்மலங் கழிந்து முத்தராவார். இதுபோல் ஐப்பசி மாசத்து அமாவாசைத் தினத்தில் வசிட்டராதி முனிவர், கங்கை யாதி தீர்த்தம், சனகாதி யோகிகள் இன்னும் பிறரும் வந்துறுவர். அற்றைத்தினம் ஆடினோர் அடையாத பொருள் திரிபுவனத்து மின்று. இங்ஙனமே சித்திரை விஷுவினன்றும் ஆடியவர் பவக்கடலாடார். ஒரு அயனமுழுவதும் இதில் ஸ்நானஞ் செய்தோர் புத்தி ரப்பே றடைவார். இரு அயனம், வருஷப்பிறப்பு, வெதிபாத யோகதினங்களில் அமிழ்ந்தியோர் நவக் கிரகதோஷ நீங்கி மகப்பேறெய்துவார். கிரகண காலங்களில் அந்தணர்க்குப் பொன்னரவு செய்து

இந்நீரால் தத்தமாகக் கரையில் அளித்தோர் திரிலோக வாழ்க்கை யரசும்பெற்றுச் சிவலோகமுஞ் செல்வார். வேதியர்க்குக் கன்னிகாதானங் கொடுத்தோர் விஷ்ணுபோல் வாழ்வார். கோதான மீந்தோர் மயிர்க்கு ஓராண்டு வாழுநாளளவும் கைலையிலிருப்பர். இத் தீர்த்தக்கரையின் ஒருபக்கம் முறையாக ஐந்தெழுத்தையும் உச்சரித்தோர் எல்லாத் தலங்களினும் ஒரு கோடி மந்திரம் ஓதிய பலனைப்பெறுவார். இத்தீர்த்தத்தாடியெழும் பறவைகளின் சிறகிற்றெறிக்கும் திவலை மேற்படினும் மும்மலம் கழுவிப் பரவெளி காண்பார். இக்கரையில் தென்புலத்தார்க்குத் தர்ப்பணஞ்செய்து அமுதூட்டியவர் சிவனருள் பெற்றுத் தேவராவார். பின் சிவசாயுச்சியமும் அடைவார். இத்தீர்த்தத்தை அலக்ஷியஞ்செய்து மற்றைத் தீர்த்தங்களில் ஆடவிரும்புவோர் பிச்சையிரந்து நசித்திரிவார். மந்திரங்களுள் பஞ்சாக்ஷரமும், வேதப் பகுதிகளுள் உருத்திர சமகமும், விருக்ஷங்களுள் வில்வமும், தெய்வக்குழுவுள் திருநீலகண்டரும், பவித்திரரில் தீயும், சோதிகளிற் சூரியனும், முனிவரில் வியாசரும், விரதங்களுள் கொல்லாமையும், தருமங்களுள் பொறுமையும், யோகத் தொகுதியினருள் ஜனகரும், தீர்த்தங்களுள் இப்பிரம தீர்த்தமுந்தான் மேன்மை பெறும். இத்தடக்கரை கிடக்கும் செத்தைத் தொகுதியை வாரி எறிந்தவர் மற்றைத் தீர்த்தங்களில் அணிகலனணிந்து பொற்படாம் புனைந்த பயனடைவார். சம்பந்தமூர்த்தி திருமுலைப்பாலுண்ட இத் தடாகக்கரையைக் கண்டவர் பிணியை விண்டவரா

வார். "இத்தீர்த்தமேற் படும்" இளங்காற்று மார்பி லுறப்பெறுவார் மங்கையர் மார்பின் கொங்கை நலம் பெறுவார், முத்துக்கள் அமிழ்ந்துகின்ற இத்தடத் துளி அருந்தினரேல் முத்தமிழுந்தேர்ந்து வித்த கராவார். ஒருமைச் சித்தத்தோடு இத்தீர்த்த தீரத் தில் ஒரு கணந்தங்கினும் சித்துப்பொருந்திய கலை யெலாந்தேர்ந்து தேசிகராவார். பத்திவலையிலகப்படா தோர் இத்தடத்தின் † பத்திவலை சிதறப் பட்டால் மா யையை யடிவார். பக்கத்தில் முத்துக்களையுடைய இந் தத் தீர்த்தத்தில் மூழ்கி, ஒருபலம் முத்தாவது பொன் னுவது ஈந்தவர் எண்ணிய பேறெல்லாம் எளிதினி லடைவார். இத்தீர்த்தத்தைப் பிரதக்ஷிணஞ் செய் பவர் முன் ஜனனத்தில் ஈட்டிய பாதகமும் மலங்களும் தம்மை வலம்வந்து ஓடும் பேற்றைப் பெறுவார். பரந்த ஒளியையுடைய தீபமொன்றைத் தமதுகை யினுல் ஏற்றுவோர் தாம் செய்த அளவற்ற வினை ய னெல்லாம் தம்மை விட்டகல, மது, கயிடவர்களை வென்ற விஷ்ணுவின் அரசுரிமையை யடைவார்.

அந்தணர்க்குச் செம்பொன், இத் தீர்த்தக்கரை யில் கொடுத்தவர் செந்தாமரை மலரின் உச்சியின்மேல் இருக்கின்ற இலக்ஷ்மி நாதராகிய மகாவிஷ்ணு வணங்குகின்ற சிவ பெருமானுடைய பொன் மய மாகிய சிவந்த திருவடிகளைப் பெறுவார்கள்.

திருக்குப் பொருந்திய மனத்தின்கண் நகழும்

† பத்துத் திவலையென்பது பத்திவலையென்று வந்தது. திவலை—துளி.

அந்தகாரத்தை நீங்குதற்குரிய வழியினைக் காண்பிக்கும் பிரமதீர்த்தத்தின் பெருமை. இவ்வாறும்:

இனி, சமுத்திரமாகிய முரசப்படையை யுடைய மன்மதனுடைய வடிவத்தைக் கவர்ந்தருளிய பரமசிவன் தன் கைச் சூலத்தினாலே உண்டாக்கி அருளே பொருளாக்கொண்டு மனமுருகச் செய்கின்ற சூலதீர்த்தத்தின் இலக்ஷணத்தை அறிவிப்பாம். இச்சூலதீர்த்தம் கோயிலுக்கு வாயுதிசையில் முக்கால் எல்லை தூரத்தில் இருக்கின்றது. சிவபெருமானுடைய முத்தலை வேலால் இச்சூலதீர்த்தம், ஆதிசேஷ சயனகர்த்தனும் விஷ்ணு, முனிவருடைய சாபம் பெற்று அலையாவண்ணம் அவன் ஸ்நானஞ்செய்யுமாறு உண்டாக்கப்பட்டது. அன்றியும், ஸ்நானஞ்செய்த அப்பொழுதே வினைகளெல்லாம் நீங்கப்பெற்று இலக்ஷ்மியோடும் முன்போல் வருந்தாவண்ணம், இந்த பரந்த இடத்தையுடைய பெரிய நிலவுலகத்திலுள்ள ஆன்மாக்கள் யாவரும் துதிக்கும்படி வசிக்கச்செய்த சிறப்பும் உடையது. ஐப்பசி மாதத்தில் வரும் பௌர்ணிமை யன்று மகாவிட்டுணுதவஞ் செய்து, சிறப்பும், இலக்குமியுடன் பிரியா உரிமையும் பெற்ற சிறப்பினாலே இச் சூலதீர்த்தத்தில் களங்கம் பொருந்திய விவேகம் நீங்கப்பெற்ற நல்லறிவோர் ஸ்நானஞ்செய்து தென்புல வாசிகளாகிய பிதிர்தேவதைகளுக்குச் செய்யவேண்டிய கடன்களைச் செய்தவர்கள் கலாதர சந்திரனைத் திருவேணியில் அணிந்தருளும் கைலாசபதியினுடைய பொன்மயமாகிய வீரக்கழலையுடைய திருவடித் தாமரைகளைப்பெற்று சிவாநு

பூதிப்பெருஞ் செல்வராய்ச் சதாகாலமும் பேரானந்தக் கடலில் மூழ்கிச் சிவகணங்களோடும் வாழ்வார்.

இனி இச்சீகாழி மேற்றிசையில் ஆனந்த தீர்த்தம் ஒன்றுண்டு. அதன் பெருமையைச் சொல்வாம். பிரமதேவன் முற்காலத்தில் இந்நகரத்திலே கொண்டுவந்து வைத்த தேவர்களும் முனிவர்களும் தருமவழியில் தவறுதவராய், சிவனருள் பிழையாதவராய், பாவச் செய்கைகளை மாற்றுவாராய், வேள்வித்தொழில் புரிவாராய், சிவதிருப்பணியிலே நிற்கின்ற திறத்தைக் காழிப் பெருமான் கண்டு முடியின்கணுள்ள மதியும் நதியும் அசையவும், திருமுகம் மலரவும், திருத்தொடைகளசையவும், பதஞ்சலியும் வியாக்கிரபாதரும் எதிர் நின்று ஆடிப்பாடவும், சோதித்திருமேனி துலங்கவும், முனிவர்கள் களிப்பால் நடிக்கவும், ஓர் அருமைத்திருநடனஞ் செய்தார். அவ்வானந்த மேலீட்டால் எம்பெருமான் திருக்கண்களினின்றும் ஓர் அருள் வெள்ளம் பெருகிப்போய் அகத்திய முனிவர் வசித்த பர்ணசாலைக்கு எதிரில் நின்றது. அதுகண்ட குறுமுனிவர் அவ்வரலாற்றை யறிந்து அதற்கு ஆனந்த தீர்த்தம என்று ஒரு பெரும்பேரிட்டனர். அது இவ்வூருக்கு மேற்றிசையிலுள்ளது. அத்தீர்த்தத்தை நினைப்போரும், அருச்சிப்போரும், அதில் மூழ்குவோரும், அதன் கரையை யடைவோரும் ஆனந்தக் கடலில் மூழ்கிச் சிவனடி நீழலிற் சேர்வார்கள்.

இனிக் காளிதீர்த்த வரலாறு:— காளியானவள் எம்பெருமான் நடனத்துக்குத் தோற்றமையால் அக்

குற்றம் நீங்கக் கோயிலுக்கு மேற்பாகத்தில் சதுரத் தளவையில் தன் பெயரால் தடாகம் இயற்றி அருச்சித்துப் பரிசுத்தமாகிய பேறுபெற்றனள். இத்தீர்த்தத்தில் பிணி நீக்க எண்ணியவர் மாசந்தோறும் துர்க்கா மந்திரத்தால் அமாவாசை தினத்தில் மூழ்குவாரேல் மன்மதனைப்போன்ற அழகினையுடையவராய் வாழ்ந்திருந்து மேற்கதியடைவார். சிவநிந்தகரும் இதில் மூழ்கினால் அப்பழி கழிவார். ஆதலின் இதற்கிணை யொன்றுமில்லை.

இனி வடபாலுள்ள வைணவ தீர்த்த மாட்சிமையாவது, இவ்வூருக்கு இரண்டு குரோசத் தளவையிலிருக்கிறது. அத்தீர்த்தத்தின்பால் விஷ்ணு, சிவபெருமானைப் பூசனைசெய்து விரும்பிய வரம் பெற்றார். இவ்வாவியில் படிந்தவர் தீவினையிற் படியார். மாசிமகத்தன்று ஸ்நானஞ் செய்வாரேல் தேவசாபமெல்லாம் நீங்கப்பெற்று மேலாவார் என்பதில் சந்தேகமேயில்லை என்று மூன்றுதரம் எம்பெருமான் சத்தியமாய் சொல்லி யிருக்கிறார். அம் மாசிமாதம் முழுவதும், இதில் ஆடியவர் பிறவியி லாடார். ஒரு இம்மியளவு பொன்னாவது இக்கரையில் கொடுத்தவர் கோடி பொன் கொடுத்த பலனையடைவார். இத்தீர்த்தக்கரையில் பெண், மண், பொன், கோ இவைகளைத் தானஞ் செய்தவர் பெறும்பேறு சொல்லமுடியாது. பிராமணர்களுக்கு முத்துப்போலும் அரிசியைத் தானஞ் செய்தவர் ஓர் அரிசிக்கு ஒரு தெய்வ வருஷமாகக் கைலையில் கலந்தினி தமர்வார்.

அப்பால் இராகு தீர்த்தத்தின் சிறப்பு. முற்காலத்தில் சூரியனை மறைக்கும்படி தலையுருவாகிய இராகுப் பாம்பு இக்காழிக் கோயிலின் வடமேற்கில் உண்டாக்கி அந்நீரால் அபிஷேகித்து அருள் பெற்றான். சிரபுரவத்தியாயத்தால் இக்கதை நன்கு விளங்கும். அன்றியும், அத்தீர்த்தத்தில் சிங்ககேதனன் என்பான் ஆசாற்பிழைத்த அரும்பழி நீங்கப்பெற்றான். முனிவர்களும் தேவர்களும் மற்றெவரும் தங்களுடைய வினைகளெல்லாம் நீங்குமாறு இன்றும் ஸ்நானஞ் செய்வார்கள். இராகுநாதரை நாளும் உள்ளத்திருத்துவோர், இராகு தீர்த்தத்தில் ஆடுவோர் நவக்கிரகதோஷமும் விடப்பெறுவர்.

இதற்குப் பக்கத்தில் ஒரு அம்பு செல்லுந்தூரத்தில் மகாவிட்டுணு தம்பழிகழுவச்செய்த தீர்த்தம் ஆழி தீர்த்தம் எனப்படும். அதில் ஆடிப் பிராமணர்களுக்குச் செம்பொன் தானம் கொடுத்தவர் வைகுந்தத்தில் வாழ்வார்.

அதற்கப்பால் சங்கதீர்த்தம் ஒன்றுண்டு. இதை எம்பெருமானே வேணுவாய் முளைத்தவன்று சிருஷ்டித்தனர். இதில் ஸ்நானஞ் செய்பவர் பஞ்சமாபாதகங்களும் நீங்கப்பெற்று அரசுரிமை யடைவார். அல்லாமலும், இத்தீர்த்தத்தில் சூரன் மூழ்கிப்பெரும் வலிமை பெற்று இந்திராதியரை யெதிர்த்துச் செயித்தான். ஆதலின் இதில் மூழ்கியவர் புலப்பகை கடந்த புண்ணியராகி மிகுவலிபெற்று மேலாய் வாழ்வர்.

இப்பால் சுக்கிரீ தீர்த்தம். இவ்வாலயத்துக்குத் தென்றிசையில் ஓர் அம்பு செல்லுந்தூரத்தில், உண்டு. அத்தீர்த்தமானது பிரமதேவரால் வீழ்த்தப்பட்ட அசுரகுரு ஐங்கோணங்கொண்டு செய்து பெரும்பிழை நீங்கப்பெற்று தெய்வகுருவுக்குச் சமத்துவம் பெற்றான். இத்தடாகத்தில் சுக்கிரவாரத்தில் மூழ்கியவர்க்கு வறுமைப்பிணி கிடையாது. துலாமாதத்தில் சுக்கிரவாரத்தில் கோயத்தினால் தெளிக்கப்பட்ட தருப்பையைத் தாங்கி மூழ்குவோர்க்குச் சமமானவர் இப்பூலகத்தில் கிடையாது.

இனிப் பராசரர் கன்னிகாகாமி யென்னுங் கொச்சை நீங்க இயற்றிய பராசர தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தவர் உண்ணத்தகாத புலால், மது முதலியவற்றை உண்ட பாவமும் நீங்கப்பெறுவார். கார்த்திகை மாசத்துப் பூரணையில் ஸ்நானஞ் செய்து வேதியர்க்கு நெல் தானங்கொடுத்தவர் மறுபிறவி யெடுக்கமாட்டார்.

அன்றியும், அகத்தியரால் உண்டாக்கப்பட்ட தீர்த்தமொன்று கீழ்த்திசையில் இருகோல் எல்லைத் தூரத்தில் விளங்கும். இவ் வகத்திய தீர்த்தத்தில் மூழ்கியவர் முத்தமிழையும் உணர்வா ராவார்.

அதற்குப் பக்கத்தில் பூந்தராய் நாதரை வணங்கிக் கௌதம முனிவர் செய்த தீர்த்தம் கௌதம தீர்த்தம் எனக் கழறுவார்.

இப்பன்னிரண்டு தீர்த்தமும் ஒன்றுக்கொன்று நிகரினை யடையாது, தனித்தனி வலிபெற்று முத்தியினை யளிக்கும். இன்னும் ஒன்று கேளுங்கள்.

பதினெண் புராணங்கள், அக்கினி, சூரியன், சந்திரன் இவர்களால் இயற்றப்பட்ட தீர்த்தங்களும், சிவலிங்கங்களும் அநேகமுண்டு. இக்காழிக்கு வடஎல்லையில் அக்கினியாற் கொண்டு வரப்பட்ட புறவநதியும் ஒரு பெருந்தீர்த்தமாகப் பேசப்படும்.

கேளுங்கள் முனிவர்காள்! கின்னரர், கிம்புருடர், சித்தர், இயக்கர், அஷ்டவசுக்களாதி தேவர்களும், முனிவர் முதலியவர்களும் இப்புகலிக்கு வந்து வணங்கிப் போற்றித் தனித்தனித் தடாகமும் இலிங்கமும் வைத்து அருச்சித் தாராதித்துக் கதியடைந்தாரென்று சூதபுராணிகர் தீர்த்தமகிமைகளை ஒருவாறு சொல்லி முடித்தார்.

தீர்த்தமகிமை யத்தியாயம்

முற்றிற்று.

---

## இருபத்தைந்தாவது

## வடுகநாத வத்தியாயம்.

உயிர்க்குயிர்போல் விளங்கும் உன்னதா சாரியரே! தீர்த்த மகிமை செவ்வனே தெரிந்தனம். இனி, எம்பெருமான் வடுகநாத ராகத் திருவிளையாடல் செய்த அற்புத சரித்திரமும் அன்புடன் சொல்லீரென்ன, அங்ஙனமே கூறுவார்.

பண்டைக் காலத்தில் கைலையங்கிரியில் சிவ பெருமான் உமாதேவியாரோடு உல்லாசஸ்தானத் தில் தனித்திருந்தழி, வேதாரணியம் என்னும் பதி யில் எரிந்துகொண்டிருந்த தீபமொன்று சுடர் மழுங் குதலை எம்பெருமானறிந்து உமைக்கு இவ்வாறு கூறுவார். என்னெனின், அம்மையே! நம் சந்நிதா னத்தின் முன் சுடர்விட்டோங்குந் தீபத்தை யாரா வது தூண்டினவர் திரிபுவனங்களையும் அரசுரிமை செய்யும் பெரியவராவார் என்று எம்மை ஆண்டருளிய வர் கூற, அது கேட்ட அம்மை எவ்வகையான ஆன் மாவுக்கும் இப்பதவி கிடைக்குமோ என, அப்பொ ழுது பெண்மணீ! இத்தருணம் நம் சந்நிதானத்தில் எரி ந்து கொண்டிருந்த தீபத்தை ஓரெலியெடுத்து அதி லுள்ள நெய்யை உண்ணுவான் திரியைச் சற்றே தூண்டி விட்டுச் சென்றதைக் காண்பாய். இவ் வெ லியானது திரியைத்தூண்டுதலினால் அரசுரிமைப் பேறும், இழுதை உண்டபாவச் செய்கையால் அவுண னாகவும் பிறக்க அருள் புரிந்தனம் என்றார். அங்ஙன மே விரோசனனுகிய ஒரு அசுரனுக்குக் குழந்தையாகிய மாவலி என்னும் பெயரோடும் பிறந்து மகாவீரனகி முப்புவனங்களையும் தன் குடைக்கீழ் வாழவும், தேவ ராதியர்களை வெல்லவும் எண்ணங்கொண்டு இந்திர னோடு செய்தற்கரிய் பெரும்போர் செய்தான். வாச வனும் எதிர்த்துப் பலவிதமான படைக்கலங்களுங் கொண்டு தன் வலிமை முற்றும் காட்டினார். அவுணர் சேனைகளுள், பாண்டன், தனதன், சம்பரன், பவனன், திருதிமான், மெய் நீண்ட நீயன், தூமகேது, காலன்,

நாகன், காண்டகீசநிசையதிபன், பயங்கரன், டிண்டிமன், நிருதி முதலியவர்களும், தேவசேனைகளுள், அஷ்டதிக்குப் பாலகர்களும் ஒருவர்க் கொருவர் எதிர்த்துச் சமர்செய்ய, தயித்தியர் வெல்ல, அது கண்ட இந்திரன் குலிசாயுதத்துடன் எதிர்த்து வந்து மாவலியோடும் அவுண சேனைகளோடும் அமராடினன். அதில், தேவர்கள் வெருண்டு ஓடினார்கள். அது கண்ட மாவலியசுரன் வில்லை வளைத்து, நாணொலி செய்து, தீப்பொறி கதுவச்சினந்து, பதினாயிரம் பாணங்களை வலாரி மீதும், அஷ்டதிசை பாலகர்மேல் அநேக அம்புகளையும் எய்யவும், அமரர்கள் புறங்கொடுத்தோட, தூரத்திலுள்ள இந்திரன் ஐராவதத்தில் ஏறிவந்து மாவலியோடு கடுமொழி பேசிப் பற்களைக்கடித்து வேகமாகக் கையினலடித்து அவ்வசுரன் மார்பில் குலிசாயுதத்தாற் குத்தலும், தயித்தியன் கண்டு தண்டாயுதத்தால் இந்திரனுக்கு அவசம் உண்டாகும்படி தாக்கினன். அசுரனும் குலிசாயுதத்தின் அடியால் அவசமானன். அக்கணத்தில் அவசந் தெளிந்த மாவலி விரைவிலெழுந்து இந்திரனைத் தூக்கி வந்து தேரிலிருத்திக்கொண்டு, ஒருவரு மறியாவண்ணம் வாடி ஓடுகின்ற அமரர்களைப் பார்த்துச் சிரித்துக்கொண்டு துரத்திப்போய், சொர்க்கலோகத்திலேயுள்ள போகங்களைக் கவர்ந்துகொண்டு இருப்பிடம் வந்தனன்.

அங்ஙனம் வந்த மாவலிச் சக்கரவர்த்தி மகாவிட்டுணு வீற்றிருக்கின்ற ஸ்தலங்களைத்திருப்பணி செய்துகொண்டு நித்திய நைமித்திகங்கள் ஒழுங்காக நடத்

தற்குரிய ஏற்பாடுகளைச் செய்து மிகவும் வைணவ பக்தர்களுள் மேலானவனாய் வாழுநாளில் தன் குலகுருவாகிய சுக்கிராசாரியரை விளித்து, சுவாமீ! யான் ஓர் சிறந்த வேள்வி யொன்று புரிதல்வேண்டும். அதற்குரிய இடம் கூறுவீர் என, சுக்கிராசாரியர் சொல்லுவார். சிவத்துரோகம் என்பது சற்றேனும் அற்ற ஊரும், அநேகம் பிரமர்களின் இருவினை அகன்ற ஊரும், ஊழிகாலத்தில் அழியாத ஊருமாகிய காழியம் புரமே சிறப்புடையதென்றார். உடனே குருவாக்கின்படி அத்தலத்தின் யாகஞ்செய்தற்கு வேண்டிய பெரும் பொருள்கொண்டு முனிவர் பலரோடும் பிராமணர்களுஞ் சூழ, சதுரங்க சேனைகளும் பின்வர, இரவியும் இயங்கா இருமதிள் சூழ்ந்த காழிநகரத்தில் வந்து பிரம தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, பிரமேசரை வணங்கி, தேவதச்சனை அழைத்து இவ்வூருக்குத் தென்றிசையில் யோசனை தூரத்தில் வேள்விச்சாலை செய்துவா என்ன, அங்ஙனமே இயற்றி வரலும், அச்சாலையினுள் சகலருஞ் சூழப்புகுந்து, சிவனடி தியானித்து யாகஞ்செய்ய, அதுகண்ட தேவர்களும் இந்திரனும் சிவபெருமானையடைந்து, கொடிய யாகம்புரியும் மாவலியவுணனின் கொடுமைகளைச்சொல்லி, சுவாமீ! அடியேங்களை இரக்ஷிக்கவேணும் என, பக்கத்திலிருக்கும் விட்டுணுவை நோக்கி. ஏ மாயவ! மாவலியினுடைய அன்பையும், அவன் அன்பினால் வரம்பெற்ற திறத்தையும், முப்புவனம் புரப்பதையும், விண்ணவரை வருத்துவதையும் நீ அறிவாயல்லவா! யாராவது நான்மறையவர்பாலும், என் அன்பினர்பாலும், தீவினை புரிவார் நரகடை

வார் என்பதில் ஐயமில்லை. எம் அடியவர்களை நிந்திக்கின்றவர்களைத் தண்டித்தவர்கள் மைந்தராயினும், அல்லது தந்தையராயினும் அவர்கள் நம்முடைய நண்பினராவார். அங்ஙனமே ஒறுக்காதவர் தருமஞ்செய்கின்றோம் என்று நதியில் மூழ்கி நற்கதிபெற வந்தாலும் நாம் இடம் தரோம். ஆகையால் நல்லோர்க் கிடையூறுபுரியும் தீயோனாகிய மாவலி என்னும் காசிபன் பாலனை வலிகுறைவித்து, அஷ்டதிக்குப் பாலர்களையும், பாதாளவாசிகளையும், மற்றவர்களையும் அவரவர்கள் நிலைமையிலிருந்திடச்செய்து வருவாயென, அவ்வாறே விஷ்ணுவும் வணங்கி உத்திரவுபெற்று, பூமியின்கண் காசிபர் மனைவியாம் அதிதிவயிற்றில் குறளுருபமாக முந்நூலணிந்த மார்போடும், தருப்பைப்புல்லும், கமண்டலமும், தண்டும் குறுங்கையிற்கொண்டு, பிரமசாரி வேடம்பூண்டு, மாவலிச் சக்கிரவர்த்தி செய்கின்ற யாகசாலைக்கண் வந்தார்.

இவ்வித கோலத்துடன்வந்த விஷ்ணுவை மாவலி கண்டு அர்க்கிய உபசாரம் கொடுத்து வழிபாடு செய்து இரத்தினுசனத்திருத்தித் தோத்திரிக்க, முனிவர்களும் பரவினார்கள். பின்னர்வந்த குறள்வடிவினரும் மாவலியைப் பார்த்து, சுகத்தோடிருக்கின்றனையா! என, ஆம் என, மூவடிமண் விரும்பி வந்தனம் தருகுவை என்னலும், இசைத்தவனுய் மகிழ, அங்கிருந்த சுக்கிரன் அவனை நோக்கி, மாயவன் வடிவமறைந்து, சிந்தா வடிவு பெற்று வஞ்சனைகொண்டுவந்தனன். ஆதலின் கேட்டதற்கிசைவியேல் இன்பம் அடையாய் என, மாவலி கேட்காதவனுய், மகாவிஷ்ணுவே என்னை அடைந்து

இரப்பானேல், எவதினும் பார்க்க உறுதிவேறுண்டோ? என்றுரைத்து, மனைவியை நோக்கித் தத்தம்கொடுக்க நீர் கொணர்வை என்ன, அவ்விதமே கொணர்ந்த கரக நீர்கொண்டு தத்தஞ்செய்ய, அப்பொழுது அக்கொடியி லுள்ள துவாரத்தைச் சுக்கிரன் மறைக்கவும், விஷ்ணு அறிந்து தருப்பைப் புல்லால் அத்துவாரத்தைக் குத்த லும், ஒரு கண் அழிந்து ஒற்றைக் கண்ணனாய்ச் சொற் பட நின்றான். அப்பால் மாவலி அவுணன் தத்தங் கொடுத்த மண்ணைப் பெறுவாயென, உடனே அம்மா யவன் விஸ்வரூபமெடுத்துப் பூமியை ஓரடியா ளளந்து, வானுலகையும் ஓரடியா ளளந்து, மூன்றும் அடிக்கு வேறு வழி இல்லாதவனாய், மாவலித்தருவன் வன்சிரம் ஓரடி வைத்து மண்ணிடையழுத்தி உயிரினைப்போக்க, அந் நேரத்தில் விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் தம் நிலைகலங்கி மிக வருந்தலும், அச்சமடைந்த அம ரர்கள் யாவரும் இந்திரனோடும் சூழ்ந்துவந்து காழிமா நகரடைந்து, ஆபதுத்தாரணர் திருமுன்வந்து, நேர்ந்த விபத்தை நீக்கி அருளவேண்டுமென்றிரக்க, அமரரைப் பார்த்து அஞ்சன்மின் என்றருளி, வடுகனை எழுந்தரு ளிப்போய் அவுணனுயிர் கொண்ட வாமனனைக் கொல் வான் அவ்வுருக்கொண்டே எதிர்செல்ல, மமதை யடைந்த வாமன அவதாரராகிய விஷ்ணு வணங்காத வனாய், வெறியாட்டாளனாய் நிற்றலைக்கண்ட வடுகநா தர் கண்ணிருந்தும் கண்ணற்ற குருடனைப்போலக் கொண்ட உன்வலி நன்றாயிருக்கின்றது என நகைத்து; ஒரு கரத்தினால் விட்டுணுவின் மார்பிலடிக்க, மாலவ னும் ஆவியிழந்து தாரணியில் வீழ்ந்தான். அக்கணமே

இலக்குமி ஓடிவந்து மங்கலப்பிச்சை அளிப்பாய் என வேண்ட, அங்ஙனமே யளிக்க, மாயவனெழுந்து தோத்திரஞ்செய்து, என் அகந்தை யகற்றிய அருட்கண்ணாளனே! இப்பொழுதுவந்த உடலையும் என்னையும் தேவரீரணிந்து ஆதரிக்க வேண்டுமென, வடுகநாதரும் கம்மியனால் என்னைத்தண்டாயுத மாக்கித் திருக்கரத்திலேந்தி அருள்புரிந்து, தோலையும் போர்த்துக் குருநாதராகிய தோணியப்பர் மலைக்குத் தென்பாலமர்ந்தனர். அதுமுதலாக வடுகநாதர் என்னும் மகிமைப்பெயர் புனைந்து, அடியார்கள் செய்யும் புழுகாபிஷேகமும் அர்ச்சனையும் கொண்டு, அவர்களால் சண்பகமாலையும் தாங்கி, வடைமாலையும் அணிந்து, பாயசம், சர்க்கரைப் பொங்கல், முக்கனி, முழுத்தெங்கின்கனிகளை நைவேத்திய மாகப்பெற்று, சுக்கிரவாரத்தில் அர்த்தயாமத்தில் அநுக்கிரகம் புரிந்து வாழ்வார் சட்டநாதர். அன்றியும், தண்டாயுதத்தைத் திருக்கரத்திற் பிடித்தலால் தண்டபாணி எனுந் திவ்விய பெயரும் வழங்குய. யாவராயினும், சுக்கிரவாரத்தில் நள்ளிருளில் தொழுவார் மற்றை வாரங்களில் தொழுதபேறெல்லாம் அடைவார். விஷ்ணுவின் சட்டையை புரித்துப்போர்த்தலால் சட்டநாயகர் என ஒரு நாமமும் விளங்குமென்க. ஓ அருமை முனிவர்களே! இச்சரிதமெல்லாம் நமக்கு யானறிந்தவாறு உரைத்தேன். இக்கதை யாவருக்கும் சொல்லத்தக்கதன்று என்று சூதபுராணிகர் கூறி, இனி வேதவியாசர்வந்து துதித்த வரலாற்றைச் சொல்வாராயினர்.

வடுகநாத வத்தியாயம்

முற்றிற்று.

## இருபத்தாறுவது.

# வேதவியாசர் பூசித்த வத்தியாயம்.

எமது பரமாசாரியராகிய வேதவியாசமுனிவர் பெருமான், சாழிநாதரைக்கலந்து அருச்சித்தேத்தி, நான்மறை வகுத்த நலங்கூறுகின்றேன் என்று, அப் பரம குருவின் திருவடியை அகத்திருத்தியவராய் அன் புடன் பேசுவார். தொல்லைக்காலத்திலே கௌதமரு டைய சாபவலியினாலே புத்தி பிறழ்ந்து, உலோகாய தம், ஆருகதம், பௌத்தம், மீமாஞ்சம் முதலியன வாகிய பரமதச் சார்பினராய் அம்மதங்களின் பொரு ளினை நன்கறிந்து, முனிவர் குழாங்களும், யோகிகளும், வேனப்பிராமணர்களும், மற்ற மன்பதைகளும் ஆகிய வர்களும், பிரமதேவரையும், மகா விஷ்ணுவையும், பானு முதலாகிய நவக்கிரகங்களையும், அஷ்டதிக்குப் பரிபாலகர்களையும் வழுத்தியவராய்த் தனித்தனியே ஒவ்வொரு கடவுளரையும் கருத்தா என்று மயங்கியும், அற்றேல், படித்துணர்ந்த இறுமாப்பின் மிகையால் தாங்கள் தாங்களே முதல்வரென, ஏமாந்தும் விபரீத விற்பன்னராய் மருள்வார் ஆயினார்கள். இவ்வாறு நிகழ்ந்தது முன் கற்பத்தில் துவாபரயுகத்திலென் றறிக.

இங்ஙனம் புத்திதடுமாறிப் பொருட்டன்மை யடையாது, மருட்டன்மையடைந்த மாநிலத்தவரைத் தெளிவிப்பான் எண்ணி, பிரமாவும், விஷ்ணுவும் எழு ந்து, இந்திராதி தேவர்கள் சூழ்ந்துவர, வெள்ளியங்

கிரிசென்று விமலேசுரை யேத்தி, கிருபாசமுத்திரமே! ஞானகரரே! என்று வாழ்த்தி, கௌதம முனிவரின் சபதத்தால் இம்மண்ணுலகத்தார் யாவரும் அறிவிழந் தவராய், கதிரோனுதவி வேண்டாமல் கண்ணொளி பெறக்கருதுவார் போன்று, புறமதச் சார்பினராய் எங் களிருவரையும் தெய்வமாகக்கொண்டு மயங்கி, தேவரீ ரை மறந்தவராய், புருஷார்த்தங்களைக் கைவிட்டாராய், எம்பெருமான் திருவருட்செயலை நிந்திக்கின்றவர்களா யினார்கள். ஆதலின், அநுக்கிரகிக்க வேண்டுமென, பரமசிவம் எதிரில் நின்ற நாராயணனைப் பார்த்து, ஏ அரியே! நீ வியாதன் எனு நாமந்தரித்து, மண்ணுல கத்துதித்து, நான்கு வேதங்களையும், மற்றைப் புரா ணங்களையும் நெறிதிறம்பாவண்ணம் முறையாக உப தேசித்தருளி வருதி என்றனர். அப்பால் பிரமனைப் பார்த்து, ஏ மலரோய்! ஸ்மிருதிகளையெல்லாம் உலக நெறிவழுவாவண்ணம் பரிபாலனஞ் செய்து மனு என் னும் பெயர் பூண்டு மண்ணுலகத்து வாழ்ந்து வருவாய் என்றனர். உடனே அங்ஙனமே செய்கின்றோம் என்று உத்திரவு பெற்றுக்கொண்டு, உடன் வந்த தேவர்களை அனுப்பிவிட்டு, பிரமனைப்பார்த்து, பராசரமுனிவர் என்னைப் புத்திரனாகப் பெறும்படி கொண்டிருக்கும் எண்ணத்தை முற்றுவிக்கச் செல்கின்றேன் என்று சொல்லிவிட்டுப்போனார். அது நிற்க.

அக்காலத்துப் புத்திரனை விரும்பித் தீர்த்தயாத் திரை செய்துவரும் பராசரர் கௌதமை ஆற்றை யடைந்து 'யச்சகந்தி யென்னும் வலைஞப் பெண்மணி யால் ஓடம் இயக்குவித்துக்கொண்டு பாதியாறு கடக்

தலும், சாந்திமுகூர்த்த நேரம் வந்தது. வரவும், அவ்வலைஞப் பெண்ணோடு காந்தர்வ மணம் புணர்ந்து புத்திரனைப் பெற்றார். பின் வலைஞமாதைப் புணர்ந்த பழியைக் காழிநாதனை யேத்தி நீக்கித் தன் பெயரால் இலிங்கமும், கூபமும் இயற்றினார் என்று முன்னமே உங்களுக்குக் கொச்சை யத்தியாயத்தால் விளக்கினோம்.

ஆற்றின் நடுவிற் பிறந்த காரணத்தால், தீபாயனன் எனும் நாமம் பூண்ட குமரர் தந்தையார் அநுக்கிரகித்தவாறே புகலியை யடைந்து, அயன்றட மூழ்கி, பிரமேசனை,

எம்மான் போற்றி யேறூர்ந்த விறைவா போற்றி
யுயிர்க்குயிராம்
அம்மான் போற்றி யுலப்பில்லா
வழகா போற்றி யெனையாளும்
மெம்மான் போற்றி யளப்பரிய
பெரியோன் போற்றி யின்னடியேன்
னையமா மொழிய வருள்பொழியும்
வரதா போற்றி யெனத்துதித்தான்.

இவ்வாறு துதித்து, எம்பெருமான் வரவு நோக்கி நின்றவரைக் காழியீசர் பார்த்து, ஏ தீபாயன! நீ புருஷார்த்தங்களை யுணர்த்தும் புராணப் பிரிவுகளையும், வேதத்தொகுதியினையும், மற்றும் மறைகளையும் உலகத்தவர்க் கறிவுறுத்துவாய் என்றருளி அனுப்ப, அங்ஙனம் வேதத்தை நால்வகைப்படுத்தி, இருக்கு வேதத்தை எழுகூறாக்கிப் பயிலவமுனிவருக்கும், யசுர் மறையைச் சதகூறாக்கிச் சம்பாயனருக்கும், சாமமறையை ஆயிரம் பகுதியாக்கிச் சைமினி முனிவருக்கும்

அதர்வண வேதத்தை ஒன்பது விதமாக்கிச் சுமந்து முனிவருக்கும் அருளி, புராணப்பகுதியினைப் பதினெட்டாகத் தொகுத்து நாமெல்லாம் பிழைத்தருளும் வண்ணம் சொல்லியருளினர். அப்புராணம் மூவாறும் அருமையுரு வாய்ந்து கடவுளைப் பூசிப்பான் அத்திபாயன முனிவரின் அருள்பெற்றுப் பிரமதடத்தில் மூழ்கிப் பிரமேசரை வணங்கிச் சம்பந்தரையும், மற்றும் கடவுளரையும் துதித்துப் பூசித்து. இரண்டுகணை தூரத்தில் கோயிலுக்கு வடகீழ்பாலும் அக்கினீசுரரின். தென்கிழக்கிலும் உள்ள இடத்தில் இலிங்கமொன் றமைத்து, அருச்சித்து, நிவேதனங்களளித்து, அதற்கு வடபால் கூபமொன் றியற்றி, அக்கூபநீரால்பிஷேகித்துப்பூசிக்க, எம்பெருமான் எழுந்தருளி வந்து வேண்டுவ தென்னென, இத்தீர்த்தமும் லிங்கமும் எம்பெயரால் விளங்க வேண்டுமென, ஓம் என்று அளித்துச் செல்ல, அது முதல் அவ்விலிங்கத்துக்குப், பதினெண் புராணேசா என்று வழங்கப்படும் கடவுளைத் துதிப்பவர்கள் பல நூற்கடலை நிலைகண்டுணர்ந்து புருஷார்த்தங்களை அடைவார்கள்.

அப பரமனருள் பெற்ற அப்புராணம் மூவாறும் பின்னர் நம் தேசிகராகிய 'தீபாயனர்பால் வர, அவர் அவற்றைக் கிரியாகாண்டம், ஞானகாண்டம் என இரு வகைப் படுத்தி எனக்குபதேசித் தருளியபின், வியாசன் எனும் நாமம் பூண்டு விளங்குகின்றார். நிற்க.

பிரமதேவர் மனுவாய்வந்துதித்து வேணுபுரத்தை அடைந்து, வேதியதீர்த்தமாடி, ஐந்தெழுத்தோதிப் பிரமேசரை ஆராதித்து, ஆண்டுள்ள பாரிசாதத்தி

னடியில் ஒருமாதம் அருந்தவம்புரிய, காழிநாதர் எழுந்தருளி வந்து வேண்டுவது என்னென, சுருதிமிருதிப் பொருள்களை அருள்செய்ய வேண்டுமென, அருள் பெற்று உலகத்தில் யாவருக்கும் மனுஸ்மிருதிகளை விரித்துரைத்து மாந்தர்களின் மயக்கங்களைத் தவிர்த்தார்.

ஓ முனிவர்களே! இதுகாறும் சொல்லிவந்த சரிதங்களை ஓதியவரும், கேட்டவரும் எஞ்ஞான்றும் மங்கல சற்புதல்வப் பேறடைவார் என்று சூதர் திருவாய் மலர்ந்தருளினர்.

வேதவியாசர் பூசித்த வத்தியாயம்
முற்றிற்று.

## இருபத்தேழாவது
## அக்கினிபூசித்த வத்தியாயம்.

வேதவியாசரின் வரலாறு உணர்ந்த முனிவர்கள் பின்னரும் வேண்டிய வேண்டுகோட் கிணங்கிச், செந்தழல்வானவன் சாபம் நீங்கப்பெற்ற அருமைச் சரிதையும் அறைகுவேன் கேளீர்!

அற்றைக் காலத்தில், புலோமன் என்ற அவுணன் வானவர் வாடவும், இருசுடர் நிலைதடுமாறி ஏங்கவும், தபோதனர் தவிக்கவும், அட்டநாகமும் எட்டியோடவும், பன்னகவுலகினர் தன்னறிவிழக்கவும், அரசு

புரிந்து வருங்காலத்தில், பிருகு என்னும் ஓர் முனிவரை இந்திரனோடு சேர்ப்பேன் என்றெண்ணி, அவராச்சிரமத்தையடைய, அம்முனிவரும் வேறு எவரும் காணாமல் வேள்விச்சாலையில் நின்ற அம்முனிவரின் மனைவியைக் கண்டு நீ யார் என்றலும், கர்ப்ப ஸ்திரீ ஆன பௌலாமியா ஒருபதிலுஞ் சொல்லாதிருக்கக் கண்டு, எரிகின்ற அக்கினியைப் பார்த்து, இவள் யார்? சொல்? என்றலும், மறைக்காதவனாய்ச் சொல்லலும், அவள் கூந்தலைப் பற்றி அவ்வசுரனிழுக்க, சிவா என்று சொல்லிக்கொண்டு பெண்மான்போல் புரண்டழ, உடனே அவள் வயிற்றினின்றும் ஒரு புத்திரன் பிறந்தான். பிறந்த குழந்தையை மனவருத்தத்துடன் தூக்கிக்கொண்டு, தன் பர்ணசாலைக்குச் செல்ல, அப்பொழுது இந்திரன் யாகத்தை முடித்துவந்த பிருகு முனிவர் மனையாளின் வருத்தத்தைக் கண்டு, ஞானத்தாலறிந்து வருத்தமுற்றாராய், பின்னர் தெளிந்து கோபித்துக் கொலைத் தொழில் புரியும் அசுரனுக்கு உண்மையைச் சொன்ன அக்கினியை வெகுண்டு இவ்வுலகத்திலே சர்வபக்ஷணனாகப் போவாயென்று சபித்தார். அச்சாபம் பெற்ற அக்கினி கோபித்து, உலகத்தில் நடக்கும் யாகச்சடங்குகளெல்லாவற்றிலுமுள்ள கலைமந்திரங்களைக் கவர்ந்து கொண்டு போகவும், எங்கும் மகச்சடங்குகளெல்லாம் குறைந்து அவிப்பாகம் கிடைக்காமல் தேவர்களெல்லாம் வாட்டங்கொண்டு, விட்டுணுவிடஞ் சொல்லவும், அவ்விட்டுணு அக்கினியைப் பார்த்து முன்போலவே யாகமந்திரங்களை எங்கும் பரவச்செய்வை எனவும், முனிவர் சாபத்தைத் தோணிபுரஞ் சென்று கடவுளை

அர்ச்சித்துத் தவிர்த்துக்கொள்வாயெனவும் கூற, உடனே அக்கினி தன்னகத் தடக்கிய கலைகளை பாகாக்கினி செழிக்குமாறு விட்டுக் காழியம்பதி வந்து,கமலாசனன் றீரிலமிழ்ந்தி நியமம் முடித்து, புகலிவாணரைப் போற்றி, ஐந்தெழுத்தோதி, வடகீழ்பால் முக்கணை தூரத்தில் தன் பெயரால் இலிங்கமொன்றமைத்து, தீர்த்தமு மொன்று செய்து, தவம்புரிய, எம்பெருமான் வந்து எண்ணிய வரம்பெறுவாய் என, என்னாலியற்றிய தடத்தில் ஸ்நானஞ் செய்து, யான் பூசித்த லிங்கத்தையும் அர்ச்சித்தவர் எச்சாபமும் நீங்கிப்போக மோக்ஷங்களை அடையுமாறு அருள்வையென, எம்பெருமான் அங்ஙனமே கொடுத்து அருளினார். அந்தீர்த்தம் வன்னி தீர்த்தம் எனவும், அந்த லிங்கம் வன்னிலிங்கம் எனவும் பெயர்பெறும். அந்த அக்கினி இறைவன் அருளின்படி பின்னரும் காழிநாதரைத் தொழுது, பிருகு முனிவரால் கொடுக்கப்பட்ட சாபம் நீங்கப் பெற்று, தேவர்கள் பலபேர் மகாமேருமலையில் ஒன்று கூடிக் கேட்டுக்கொண்ட விதமே காழிநாதரிடத்தில் உலகத்தில் உள்ள சகலபொருளும் என்னுடைய உருவத்திலே விளங்கும்படி அருள்புரிவாய் என, அங்ஙனமே கொடுத்தருளினார். அதுமுதலாகவே சகல பொருள்களினிடத்தும் அக்கினி நிறைந்திருந்து அருள்புரிவான் என்று சூதபுராணிகர் சொன்னார்.

அக்கினிபூசித்த வத்தியாயம்

முற்றிற்று.

# இருபத்தெட்டாவது

# சூரியன் பூசித்த வத்தியாயம்.



முனிவர்களே! இனி இந்திரனுக்குஞ் சூரியனுக்கும் ஒரு செருக்குப்போர் மிகுதியில் சூரியன் வருந்தி, இவ்வூர்வந்து வரம்பெற்ற வரலாறுவது:—

மேனாளில் இந்திரனுஞ் சூரியனும் ஒருவர்க்கொருவர் தாம்தாம் தலைவன் என்று பகைத்து ஒருவராலும் தடுக்க முடியாமற்போக, ஆசாரியராகிய வியாழனிடத்திற் சென்று, இருவருந் தங்கள் தங்கள் குறைகளைச்சொல்ல, கேட்டுணர்ந்த குருவும், இரவியே! இக்குலிசபாணியாகிய இந்திரன் தனித்த ஓர் அரசன் என்பதில் சந்தேகம் என்ன என்றலும், சூரியன் கோபித்துத்திரும்பி, எல்லாத் தேவர்களினும் மேலவனும் இறைமைத்தன்மையும், பூமியின்கண் மனிதர் யாவருந் துதித்தற்குரிய ஒரு பெருமையையும் பெற எண்ணங்கொண்டு சீகாழிக்குப்போய் வேதன் குளத்தில் மூழ்கித் திருநிலையமுகி சமேத பிரமேசரை வணங்கி,

> அண்ணலே போற்றி விண்ணோ ரதிபனே போற்றிமூன்று
> கண்ணனே போற்றி குலக் கையனே போற்றி சோதி
> வண்ணனே போற்றி சாழி வரதனே போற்றி யோர்பாற்
> பெண்ணனே போற்றி யாதிப் பிரமநா யகனே போற்றி.

இவ்வாறு போற்றி, ஆலயத்துக்குமேல்பால் முக்கணையளவில் உள்ள திருக்கோலக்காவாகிய கொன்றைவனத்திற் புகுந்து, அதற்குக் கீழ்பால் ஒருதடாக மியற்

ரித் தன் பெயரால் ஒரு இலிங்கந்தாபித்து அளவில் காலம் அருந்தவம்புரிய, கைலாசநாதர் தோன்றியருளி, வந்தவுடனே கண்டு தோத்திரித்து நின்ற அந்த இரவியை எம்பெருமான் கண்ணுற்று, ஏ பகலோனே! ஏ தினபதீ! நின்பூசையுந் தவமும் பொருந்த மகிழ்ந்தனம். உனக்கு வேண்டுவது என்னென்ன, மூன்றுலகத்துக்கும் தலைவனாந் தன்மையனாகவும், எல்லாரும் என்னை வணங்கி என்னிடத்தில் அருள் பெறும்படியான பாக்கியமும் அருள்வை என, சரியென்று பின்னருங் கூறுவார். ஏ பானுவே! நீ பணிந்த இலிங்கமும், இயற்றிய தடாகமும் உன்பெயரால் எப்பொழுதும் ஓங்குக. உன்னுடைய வாரத்தில் ஆனி, ஆவணி, கார்த்திகை மாதங்களிலும், பங்குனிமாச மகத்திலும் இத்தீர்த்தத்தில் தேடிவந்து மூழ்கி நம்மைப் பணிந்தவர் எல்லாக் கருமங்களையும் செய்தபேற்றையும் அடைவார். உன்னோடு அகங்கரித்துக் கூறிய இந்திரன் வாலியாய் வருவான். ஆங்கு விஷ்ணு ராமனாக வந்து பிறக்குங்கால், அவ்விராமனைக்கொண்டு வாலியாகிய உன்பகைமையிந்திரனை அவன் தம்பியாகிவரும் சுக்கிரீவனாகிய நீ அழிவிப்பாய் என்று பலவரங்களுங் கொடுத்து மறைந்தருளினார். இக்குவலயத்தில் யார் இத்தடத்தில் ஸ்நானஞ்செய்தாலும் எல்லா நோயினின்றும் நீங்கப்பெறுவார். குருடன், அங்கவீனன் முதலிய பிணியாளர் இங்கே மூழ்கினால் சூரியனைப்போன்ற மேனியும, மன்மதனைப்போன்ற அழகும் பெறுவார் என்று சூதபௌராணி கோத்தமர் சொல்லியருளினார்.

சூரியன் பூசித்த வத்தியாயம்

முற்றிற்று.

## இருபத்தொன்பதாவது

# சந்திரன் பூசித்த வத்தியாயம்.

இனி, சந்திரன் பூசித்து வரம்பெற்ற மகிமையையும் ஏ முனிவர்களே! கேளுங்கள். பிரமதேவரின் புத்திரனாகிய தக்ஷப்பிரஜாபதி, தன் குமாரியர்களாகிய அசுவினியாதி இருபத்தேழு நக்ஷத்திரங்களையும் சந்திரனுக்கு விவாகஞ் செய்து கொடுத்து, ஏ மதியே! நீ இப்பெண்கள் யாவரிடத்தும் நீதி தவறாமல் மகிழ்ச்சி கொடுத்துக் கொண்டு இன்பம் அனுபவித்து வரவேண்டியது என்று சொன்ன ஆஞ்ஞைப்படியே சந்திரன் சிறிதுகாலம் நடந்து பின்னர் உரோகணி, கார்த்திகையாகிய பெண்களிடத்தில் மாத்திரம் அதிக விருப்பினனாகக் காட்டிவரலும், மற்றைப் பெண்கள் ஒன்று சேர்ந்து தந்தையிடம் போய் குறையிரப்ப, அதனைக்கேட்ட தக்ஷன் சந்திரனைப் பார்த்து நீ என்மொழி தவறியபடியால் உன் கலைகளெல்லாம் தேய்ந்து வரக்கடவது எனச் சபிக்க, அங்ஙனமே சாபத்தால் நாடோறும் ஒவ்வொரு கலையாகத் தேய ஒரு கலையோடு நின்ற அளவில், இச்சாபத்தை எங்குபோய்த் தவிர்ப்பேன் என்று நினைத்துழி, தோணிபுரமே துணையென எண்ணிவந்து, விதித்தடம் மூழ்கி குருலிங்க சங்கமமூர்த்திகளைத் தோத்திரித்துக் கோயில் வலம்வந்து விக்கினேஸ்வர நதியாகிய கழுமலத்தில் மூழ்கி, அவ்விக்கினேஸ்வரருக்கு அருச்சனை செய்து மோதகம் நைவேதித்துப் புகலித்தலைவன் கோயிற்குக் கீழ்பால் முக்குரோசனையளவில் வசிட்ட

முனிவர் பணிந்த மேட்டுக்கு வடகீழ் பக்கலில், வில்வவன (திருநகரி)த்துக்கும், முல்லைவன (திருமுல்லை வாயில்) த்துக்கு மேல்பால், குருகாவூருக்கு நிருதி திக்கில், புறவமா நதிக்கும் செம்பாம்பன் குடிக்குந் தெற்கில் தீர்த்தம் ஒன்றும் இலிங்கம் ஒன்றும் தன் பெயரால் நல்ல முகூர்த்தத்தில் செய்து ஐந்தெழுத் தோதி அர்ச்சித்து வணங்குங்கால், எம்பெருமான் இட பவாகன ரூடராய் எழுந்தருளிவந்து உன் மாதவத்தை மகிழ்ந்தனம். மதியே! வரம் பெறுவாய் என்னலும், தக்கன் சாபத்தைத் தவிர்ப்பாய். என் நீரில் மூழ்கி என் இலிங்கத்தைப் பூசித்தவர் யாவரும் பெறுதற் கரிய பேரின்பவீடு அடைய அருள் புரிவாய் எனவும், அங்ஙனமே அவ்வரங்களைக் கொடுத்துத் தக்கனோ நம் அடியவன், அவன் கொடுத்த சாபமும் அழியாது; ஆயி னும் நீ என்னை வணங்கிவேண்டுதலால் திடீரென கலை களெல்லாம் நிரப்பாது ஒவ்வொரு கலையாக நாடோறும் வளர்ந்து பின்னரும் அவ்வாறே தேய்ந்து எப்போதும் வருவாய். உன் ஒருகலையை எத்தேவர்க்காவது இறை மாக அளிப்பாய், கொடுத்த இவ்வரத்தால் வளர் கின்ற இக்கலைகளுக்குப்பூர்வபக்க மெனவும், தேய்கின்ற கலைகளுக்கு அபரபக்கம் என்வும் யாவரும் சொல்லு வார்கள். அன்றியும், இந்துவே! அக்கினி, சூரியன், விசுவ தேவர், வருணன், சுக்காரன், இந்திரன், சப்தமுனிவர், அசுகபாதன், யமன், வாயு, கௌரி, தென்புலத்தார் குபேரன், நாம், பிர்மா இவர்கள் நந்தை முதலாக அக் கலைகளை யுண்ணுவார்கள். அதனால், நீ மறையோர் நாயகன் என்ற பெருமைப் பெயரையுமடைவாய். இன்

னும் பயிர்களுக்கெல்லாம் நீ எப்பொழுதும் இறைவ னாகி விளங்குவாய்! உன் பிணியெலாம் தவிர்ப்பாய்! இனிமேல் உன் மனைவியர் இருபத்தெழுவரிடத்திலும் கலந்துவாழ்வாய். அவ்வாறு கலக்கும்பொழுது ஒவ் வொருநாளின் கடைசி நான்கு நாழிகையும் யாதொரு சுபகருமமும் செய்வதற்குக்கூடாது என்ற இத்தன்மை யானவரங்களையெல்லாம் கொடுத்து மறைந்தருளினார். அப்பால் சந்திரன் நோய் நீங்கப்பெற்றுத் தன்னுலை கடைந்தான் எனச் சூதர் நன்கு புலப்படுத்தினார்.

சந்திரன் பூசித்த வத்தியாயம்

முற்றிற்று.

---

முப்பதாவது

## சேடனுங் கேதுவும் பூசித்த வத்தியாயம்.

---

செல்வத்துட் சிறந்த செவிச்செல்வம் ஈட்டுதலில் வல்ல பெருந்தவ சிரேஷ்டர்காள்! இனி இப்பூந்த ராய்ப் பதியின்கண் ஆதிசேடனும் உடலுருவரவாங் கேதுவும் வந்து வந்தித்து வரங்கள்பெற்ற வரலாற் றைக் கூறுவாம்.

காசிபரின் மனைவியர்களாகிய வினதையும் கத் ருருவும் புத்திரப்பேறு அடைவான் நாயகரைப் பணிந்து பிரார்த்தித்தலும், முனிவர் ஏ வினதாய்! நின் வயிற்றில் இரண்டு அண்டங்கள் உண்டாகும். அவ்

வண்டங்கள் ஆயிரம் வருஷம் சென்றால் அவற்றினின்றும் அழகிய புத்திரர் உதிப்பார்களென்றும், மாற்றவளாகிய கத்துருவை நோக்கி ஏ பெண்மணீ! உன் வயிற்றினில் ஒருங்கேவரும் ஆயிர மண்டங்களை, ஒரு ஆண்டுவரையும் போற்றுவையானால் அருமையான புத்திரர்கள் சேடன் முதலாக ஆயிரம் அரவ வடிவினராய் உண்டாகுவார் என்றும் அருளினார். அங்ஙனமே முதலில் கத்துருவின் முட்டைகள் ஒருவருஷமாகவும், அவைகளினின்றும் சேடன் முதலிய பாம்புகள் தோன்றவும், அதுகண்டு வினதை யென்பாள் பொறாதவளாய் மனம் புழுங்கி ஒரு முட்டையைக் கையாலுடைத்தலும், நாயகர் சொல்லிய காலம் முற்றாது பிறந்த பாதிவடிவுடைய குழந்தை அருணன் என்னும் நாமம் அடைந்து தாயை நோக்கி, ஏ அழுக்காற்றாசீ! என்வடிவு கெடுத்த குற்றத்தால் நீ உன் மாற்றவளுக்கு அடிமைத்தொழில் எய்தி அலைகுவை என்று சாபமிட, அம்மொழி கேட்ட தாய் ஏ குழந்தாய்! மாற்றவளைப் போல யானும் மகப்பேறடையும் விருப்பினால், அவள் முன்னே பெற்றதில் திருப்தி அடையாததினால் முட்டையை உடைத்தேன். நீயோ கொடுஞ்சாபங் கொடுத்தாய். இச்சாபத்தை நான் என்றைக்கு நீக்கிக் கொள்ளுவேன் என்ன, அத்தனயன் அன்னாய்! மற்றை முட்டை குறித்த பருவம் முற்றும்வரையும் நீ காப்பையேல் அதினின்றும் என் தம்பி தோன்றி வந்து, என்னாலளிக்கப்பட்ட சாபத்தைத் தவிர்ப்பான் என்றுரைத்து ஞான நாயகனைப் பூசித்து சூரியன் தேர்ச்சாரதியானான். இதுநிற்க.

அக்காசிப முனிவர் மனைவியரிருவரும் ஒரு நாள் சோலையில் விளையாடுங்கால், ஆகாயத்தில் தனித்துத் தோன்றிய தேரொலி காதில்விழ, அவ்வொலி என்ன என்று கேட்ட கத்துருவுக்கு வினதை இந்திரன் குதிரையொலி என்று சொல்ல, இப்பரிக்கு நெற்றியும் மேனியும் எவ்வித நிறமென்று வினதையைக்கேட்க, முழுவதும வெண்ணிறமே என்று வினதைகூற, கத்துரு மறுத்து வால் நுனி மாத்திரம் கறுப்பு என்றாள். அதற்கு வினதை வாலும் அவ்வெண்மை யொளியே எனவும், இவ்வார்த்தையை நீ முற்றுவிப்பையேல் யான் உனக்கடிமை யென்றாள். இளையவள் எ கத்துருவே! நீ கூறியவாறு வால்நுனி கருமை என்பதை நிலைபெறச் செய்வையேல் உனக்கு யான் அடிமை யென்று வினதை சொன்னாள்.

இவ்விதம் ஒருவர்க்கொருவர் சபதங் கூறிப்போகவும், கத்துரு தன் குமாரர்களாகிய அனந்தனாதியரைப் பார்த்து, இந்திரன் குதிரையின் நிறத்தை இன்னது எனக் கூறுவீர் என்னலும், வெண்ணிறமே என, வாலுமோ என, ஆம்; அதுவெண்மை அதிக மென்றலும், அது கேட்ட தாயாகிய கத்துரு என் கடுஞ்சபதம் வீணகப்போகாமல், அவ் வாலில் நீங்கள் சுற்றிக் கொண்டு கறுப்பென அறியச் செய்வீர்களென்னலும், கேட்ட அரவப்பிள்ளைகள் ஏ தாயே! உலகத்து ஒருதீமை செய்து உயர்வதினும் ஒழுக்கத்தால் தோற்றுப்போதல் வெற்றியினைத்தரும்; அப்படி யன்றித் தருமம். பிழைத்தாலும் மேலோரை வருத்தினாலும் பலகாலம் நரகத்தை அடைவார். அவ்விதமே தரு,

மப் பிழைத்த ஒருகதையைத் தாய்க்குச் சொல்வார்கள். முன்னாள் நளச்சக்கிரவர்த்தி என்பவன் நீதி செலுத்தும் நாளில், கலியானது வந்து வலியோடு நிற்கவும், தாங்காதவனைப் பூமி அரசைத்துறந்தும் அவ்வறங் கெடாமல் பின்னர்கலி அகலப்பெற்றுப் பூமியை யாண்டான். இப்பொழுதும் அக்கலியின் பேரைப் புகன்றோர் கலிநீங்கப்பெறுவர். நன்றியை மறந்தவரும், தவறுபேசியவரும், வஞ்சகரும் இப்பூமியிலுய்வரோ? ஆதலால் நீ செய்த தவற்றைச் செய்ய மாட்டோம் என்று புத்திரர்கள் மறுத்தார்கள். உடனே அத் தாய் சினந்து நீங்கள் யாவரும் பாரதவம்சத்து ஜனமேஜயராசன் செய்யும் சத்திரவேள்விக்கு ஆகுதி ஆவீர்களென்று சபித்தாள். சாபம்பெற்ற அரவபுத்திரர்கள் மனநடுங்கித் தாயை வந்தனை புரிதலும், என்மொழி கேட்டால் யாகஞ்செய்யும் அத்திகமுனிவர் உங்களை அவ்வேள்வித் தீமேற் படாவண்ணம் அவ்வரசனுக்குத் தெரிவிப்பார். பயப்படாதீர்களென்றாள். அவ்வார்த்தைக் குடன்படாத ஆதிசேடனாதி சில அரவுகள் அத் தாய்ச்சாபம் நீக்குவான் எவ்வாறு என மனத்தில் கவலையுடன் யோசித்து அறிந்து சிரபுரம் வந்து, இரணிய கர்ப்பன் தடாகம் படிந்து, புதுநறுமலரால் பிரமநாயகனை அருச்சித்துக் குரவராகிய தோணியப்பரின் திருவடித் துணைகளையும், சட்டநாதரின் இருபாதங்களையும் வத்தி, திருநிலையழகியைச் சேவித்து, நாகேசன் திருத் தாள்களை வாழ்த்தி, விக்னேஸ்வர நதியில் மூழ்கி, கேதுபுரமாகிய புறவப்பதியில் வாழ்ந்தார்கள் என்று சொல்லியருளிய சூதமுனிவரைக் கேதுபுரநாமம்வந்த வகையையும் அருளவேண்டும் என்றார்கள்.

அப்பொழுது சூதர் முனிவர்களே! முன்னர் சிர புரப் பெருமையைத் தெரிவித்தபோது சிரம் நீங்கிய உடற்கூற்றரவமானது நம்பனருளாற் கேது என்ற பேரடைந்தது. எவ்வாறு எனின்? நான்முகன் தடத்தில் அவ்வுடலரவம் மூழ்கிப் பிரமேசரை இறைஞ்சிப் பெரிய நாயகரையும், கஞ்சகநாதரையும் தொழுது, இவ்வாலயத்தின் கீழ்பால் ஒரு குரோசத்தெல்லையில் சாகித்துருமமூலத்தில் இலிங்கமொன்றமைத்து, தீர்த்தமொன்றியற்றிப் பூசை புரியுநாளில் காழிநாதர் தோன்றி உடற் கூற்றரவே! நின் பூசனைமகிழ்ந்தோம், எண்ணியது என்னை என, மற்றைக்கோள்களோடு யானும் ஒரு கோளாகிச் சந்திரனைமறைக்கும் வலிமையையளிப்பாய் என்றிரக்க, அங்ஙனமே கொடுத்து மறைந்தார். அன்று தொடங்கிக் கேதுவும் வலிபெற்றுச் சந்திரனைப் பௌர்ணிமை திதியில் மறைப்பான். இக்காரணத்தாற் கேதுபுரி என வழங்கப்படும் இக்காளிபுரமென்றறிக.

இக்கட்செவி செவ்வுருக்கொண்டு வாசஞ்செய்த இடத்தை உலகத்தவர் †செம்பாம்பன்குடி எனப் பேசுவார்கள். இக்கேது செய்ததடத்தில் நீராடுநிமாக்கணத்தலைவர்கள் மூழ்கி வினைத்தனை பெற்றுப் பழிபினைப் போக்கினார். ஏ முனிவர்காள்! ஒரு கணமாவது இக்கேது நாதரைத் தெரிசித்தவர் சிவபெருமானருளால் எச்சாப்மும் நீங்கப்பெற்று விழுப்பமடைவார். அன்றியும் நவக்கிரக தோஷமெல்லாநீங்கி ஞானமடைவார் என்று சூதபுராணிகர் கூறினார்.

சேடனுங் கேதுவும் பூசித்த வத்தியாயம் முற்றிற்று.

---

† செம்மங்குடி என வழங்குகிறார்கள்.

## முப்பத்தோராவது

# அண்டர்கள் பூசித்த வத்தியாயம்.



செவிக் கமுகூரட்டிற் தேசிக மூர்த்தியே! கதைக் கடல்மூழ்கிச் சுதைத்தெள் ளுணவைச் செவிக்கமுகூரட்டிற் தேசிகசிகாமணீ! சேடனுங் கேதுவுஞ் சிரபுரமடைந்து, பூசித்தேத்தி பேசிப்பழியை ஓட்டிய கதையை யூட்டிய ஐயா! இக்கமுகமலத்தின் நக்கனது அடியை அண்டத்தவர்கள் கண்டு வந்தடைந்து, தொழுதருள் பெற்ற தொல்பெருஞ்சரிதம் புகன்றருள்வீரென புண்ணியமுனிவர் விண்ணப்பித்த வெண்ணமுடிப்பான் பராசரியர் புதல்வராயினர்.

குணங்குறி காரணங்கடந்த கோமானும் முழுமுதற் கடவுளாகிய பெருமான் ஜீவகோடிகட் கருள்வான் வேண்டி, முன்னம் ஓர் கற்பமுடிவு தன்னில், வித்தியாதத்துவத்தினின்றும் அண்ட மெல்லாவற்றையும் படைக்குங்கால், ஆயிரகோடி யண்டந்தம்மை ஒரு கணந்தன்னில் ஓங்கிடப்பிரித்து, அவற்றினைக்காக்க அயன்முதற் கடவுளர் வல்லோர் தம்மைக் கலையினிற் படைத்து, அதிகார முதல்வரென அரும்பேர் தரலும்; அத்தகையோரும் அண்டமளித்து வருநாள், ஒருகால் யாவருஞ்சேர்ந்து ஞானச் செல்வமும் நாடிய கீர்த்தியும் பெறுவான் விரும்ப, அக்குழாந்தம்முள் அலரோனெழுந்து, எண்ணியவற்றை எளிதினிலடையுந் திண்ணமார் வழியைச் செப்புவேன் கேளீர்! வேதத்

தாலும் விளம்பப்படுவதும், முப்பொருளாகி முதல்வன் வசிப்பதும், ஊழிகாலத்தும் உயர்ந்தோங்குவதும், பிரமபுரம் எனப்பேசுவார் யாரும். அப்பெருந்தலமே இப்பெருமெண்ணம் முடித்தருள் புரியுமென்று மொழிதலும், யாவரும், பொன் புலியூர்க்குத் தென்பா லமர்வதும், வேளூர்க்கீசானத்தின் மேவுவதும், முல்லைவனத்தின் மேற்றிசையுள்ளதும், பொன்னிநதிக்குப் பொருந்திய வடதிசைத் தோன்றிநிந்தலமாய் தோணிபுரத்தில் தொக்கவராகி, அயன்றடந்தோய்ந்து பிரமேசன்றாள் பேசிப் போற்றித் தோணிநாதனைத் தொழுது துதித்து, வடுகநாதனை வாழ்த்தி வணங்கி,

பூரணபுங்கவபோற்றிபுண்ணிய நன்னிதிபோற்றிபுரையைதீர்த்
ஆரணசுந்தரபோற்றி யாடக நாடகன்றத் தாடிபோற்றி [த
நீரணவு மணிமேனி நித்திய தத்துவபோற்றி விமலபோற்றி
காரணகாரியங்கடந்த சயபோற்றி காழியருட் கடலேபோற்றி.

இவ்வாறு துதித்து, காழிக்கோயிலின் வடமேற்றலத்தில் முக்கோணெல்லையில் இலிங்கமொன்றிருத்தி, குடதிசை தன்னில் தடமொன்றியற்றி, அருச்சனைத் துறையில் அளவில் காலம் அண்டர்கள் யாவரும் அருந்தவம்புரிய, இடபவாகனத்தி லெம்மா னுமையொடும் எழுந்தருளிவந்து, அன்பால் தம்மை யேத்திய அண்டர்களைப் பார்த்து, நம் பணிமகிழ்ந்தோம். இப்பா நீர்வந்து தவஞ்செயுங் காரணம் சாற்றுமின் எனலும், தேவரீர் அடிகள் தீயேமுளத்தில் மறவாதிருக்க வரந்தரல் வேண்டும்; மூர்த்தியே! எமக்குக் கீர்த்தி வந்தடைய வரம்பெறல் வேண்டும் என்ற அக்குழுவினர்க்கு, அன்றே யமலனும் அளித்து, அவர்களா

லருச்சித்தேத்தலால் அண்டநாயகர் எனும் பேர் தாங்கி அன்பர்கள் போற்ற அந்தரம் எழுந்தார்.

அநுக்கிரகம்பெற்ற அண்டர்கள் யாவரும் தங்கள் தங்கள் தலத்தினை யடைந்தார். அன்னோர் செய்த அத்தடந்தன்னில் மாசிமாதத்தில் நேசமாயாழ்ந்து, அண்டநாயகரை அன்புடன் போற்றி, மாநிதிமாதர் மக்களும் பெற்று, இம்மையின்பமும் மறுமையின்பமும் எய்துவர். இதன் மகிமையை எத்தகையோரும் இசைத்திடற் பாலரோ? இந்நகரடைந்து ஐம்பதம் ஓதி நீறு புனைந்து நியமனைத்துதித்தவர் அடையும் பேற்றின் அளவிவை என்று என்னுலுரைக்க இசையுமோ முனிவீர்! என்றலும், அந்த ஐம்பதத்தின் அரிய பெருமையும் மற்றவையெல்லாமும் தெற்றென அருள்வீரென்று முனிவர்கள் கேட்ட மொழியினை மகிழ்ந்து, வேதவியாசரின் விரைமலரடியைச் சென்னியிற் புனையும் செய்ய மாதவராம் சூதர் நவிலலுற்றார். பரமசிவத்தின் வடிவமேயாகிப் பிரணவத்தோடு கலந்த ஐம்பதம் அவற்றைக் கையினுற் கலந்த கண்டிகைகொண்டு மௌனியாகி மூன்று பொழுது மானசமாக நூற்றெட்டு முறை 'உச்சரிப்பவர்கள் உயர்ந்த நான்மறையை அங்கங்களோடும் அத்தியயனஞ் செய்த அரும்பயனடைவார். இவ்விதஞ் செபித்தல் முக்குலத்தவர்க்கே.' ஐந்தெழுத்தோதல் நாற்குலத்தவர்க்கும் நண்ணலாந்தகைத்து. சகலபதவிக்கும் முதன்மையாயும் எழுகோடி மந்திரங்களுக்கும் நடுநாயகமாயும் சிவனுருவாயும் உள்ள இந்த ஐந்தெழுத்தைக் கணிப்பவர் யாவரும் சிவசாரூப்பிய பதம் அடை

வார். நித்திய பாராயணத்தை நீத்தவர் யாவரும் ஒருபொழுது நீறணிந்து இப்பஞ்சாக்ஷரத்தைத் தியானிப்பவரேல், வினையெலாங் கடந்த விண்ணவராவார். இருமல், தும்மல், கொட்டாவிபொருந்தல்இவைகளால் ஆயுள்குறையாவண்ணம் இவ்வெழுத்தைந்தையும் உச்சரித்திடுக. தெரிந்து செய்த பாவமும் நீங்குதற்கு இதுவே துணையாம். விபூதிக்குச் சமமான ஒழுக்கமும், புண்ணியமும், விரதமும் கிடையாது. அதனை யணிபவர் மிக்கோர். அப்புண்ணிய நீறணியாதவர் செய்யுந் தருமத்தால் யாதொரு பிரயோசனமுங் கிடையாது. விபூதியணியாமற் றானங் கொடுத்தவர் அடைதற்கரிய கும்பிபாகத்தை யடைவார். யாதொரு மந்திரமுமில்லாமற் சிவநீறணிபவரைக் கண்டாலும் வலிய வினைகளு நீங்கும். அணியாதவரைக் கண்டால் அதனுல் வந்த பாவம் சூரியனைத் தரிசித்தால் நீங்கும். சூரியனைக் காணுதவராயின் சிவலிங்கம், அக்கினி, பசு, சிவவேதியர், பொன், உருத்திராக்ஷம் எதிர்ப்பட்டால் நீறணியாதவரைக் கண்ட வினையகலும். இத் திருநீற்றின் வகுப்பைச் சொல்லுங்கால், அந்தணர்கள் தினமுஞ் செய்யும் வேள்வியினீறும், விசேஷித்துச் செய்யும் வேள்வியினீறும் நான்மறையோர்க்கே ஏண்ணுவதாகும். மற்றை வருணத்தவர்க்குச் சிவராத்திரி தினத்தில் சூரியோதயத்தில் கொண்டுவந்த கோமயத்தைச் சுத்திசெய்து சுத்த இடத்தில்வைத்து, வில்வ பத்திரமுஞ் சேர்த்து உண்டையாக்கி, உமியை யிடை யிடையே யிட்டுத் தீயிற் றகித்து விளைந்த நீற்றைச் சிவகாயத்திரி மந்திரத்தால் எடுத்துப் பின்பு சிவ

சந்நிதியிற் கொணர்ந்து, ஏகாதச மந்திரத்தை ஓதி, அதனைப் பதினாறு பங்குசெய்து சிவபெருமானுக்கொரு கூறும், சிவவேதியர்க்கு மூன்று கூறும்கொடுத்து, ஒழிந்த பன்னிரண்டு கூற்றையுங் கொண்டுபோய் மாதம் ஒரு கூறாக அணிந்துகொள்ளவேண்டும்.

இத்தகைய திருநீற்றைத் தரித்தவர்க்கு மூவுலகின் பொருளும் சித்திக்கும். இந்நீற்றை யணிபவரின் வம்சக் கிளையினர் யாவரும் கண்ணுதற் கைலையைத் திண்ணமா யடைவார். நிற்க.

உருத்திராக்க மணியின் உன்னதப்பெருமையையும் சுருக்கிச் சொல்கின்றேன். சிவனாருருவாம் இவ்வுருத்திராக்கமணி உருத்திரருடைய கண்ணினின்றும் வந்தது. இதன்பெருமையை யாவரே நன்குபேசுவார்? அதன் பெருமையை ஆராய்ந்தறிந்து, ஒருமுகம்முதல்பன்னிரண்டுமுகம்வரையுமுள்ளமணிகளைத் தரிப்பவர் சிவ சாரூப்பியம் பெறுவார். இக்கண்மணித் தொகையைக் கழுதை ஒன்றணிந்து விந்தவெற்படைந்து இறந்து, அப்புண்ணிய நிமித்தம் ஒரு ஊழிகாலம் வரையும் கைலையில் வசித்தது.

இம்மணி யொன்றைத்தரித்து நடந்தவர் அடிக்கு ஒன்றாக அசுவமேதயாகஞ்செய்த பலனையடைந்துவாழ்வார். என்னைப் போன்றவர்களால் விளித்துக்கூறும் ஒரு நியுதமேனும், ஆயிரமேனும், அல்லது ஐந்நூறேனும், அணிபவர் சிவபதத்தைச் சேர்வார். கண்டத்திலும், சிரசிலும், தோள்களிலும், முழங்கைகளிலும், மணிக்கட்டுகளிலும் மொத்தம்நூற்றெட்டுமணி, அதிற்

பாதி, அதிற்பாதி, பதினாறு மணியும், பூணுநாலிலும், சிகையிலும் ஒவ்வொன்றும், காதுகளில் ஒவ்வொன்று அல்லது ஆறும், பொருந்த அணிந்து பஞ்சாக்ஷரத்தைச் செபிப்பவன் மானுடனாயும், பூதேசனாக விளங்கும் அவனை யார் எதிரே கண்டு தொழுதாலும் பிரமஹத்திமுதலாய தோஷங்கள் நீங்கப் பெறுவார். இத்தகைய வலிமை மிகுந்த உருத்திராக்ஷ மணியையாவது திருநீற்றையாவது பத்தியுடனணிந்து சீகாழிப்பதியின் கண்ணே வசிப்பவர் முத்தராவார்.

இப்புகலிப் பதிக்கு மூன்று குரோசனை தூரத்தில் உதித்தவர் யாவரும் வருணவேற்றுமை யற்றவராவார். இத்தோணிபுரப்பதியில் இறப்பவர் யாவரையும் திருநிலையமுகி கிட்டிவந்து அவருடைய காதுகளில் பஞ்சாக்ஷரத்தை உபதேசிக்குஞ் சிறப்பால் அவர்களெல்லாம் ஜீவன் முத்தராவார். ஆதலால் அந்தண சிகாமணிகளே! இவ்வெங்குருப்பதிக்கு சீவன் முத்தியூர் என அறிஞர் சொல்வார்கள். இச்சண்பைத் தலத்தின் வளப்பங்களெல்லாம் சொல்பவர் யாவரோ அவர்கள் பழைய வினைத்தொகுதிகளை யறுத்துக் கைலையை யடைவார். இக்கர்ணிநாயகரின் கதையை அன்புடன் ஆராய்ந்து சொல்வோரும், கேட்போரும், படித்தோரும், ஆயிரஞ் சிவராத்திரியில் நான்கு யாமத்தும் முறையே எம்பெருமானைப் பூசைசெய்து அடையும் பலன்கள் முழுவதையும் பெறுவார்கள்.

இக்கதையை முறையாக ஓதுவார்க்குப் பொன்னும், பீதாம்பரமும், கோவும் தானமாக அளித்துப்

பூசை செய்பவரைச் சிவபெருமான் மனமகிழ்ந்து, அவர் மனம் வாக்குக் காயங்களினுலே செய்த பாவங் கள் யாவற்றையும் நீக்குவார். ஓதுவார்பயனை உரைக்க வும் வேண்டுமா?

இப்புறவக்கதையை ஒருவர் சொல்லக்கேட்பவர் கள் இடையில் அறியாமையினுல் எழுந்து போவாரா யின் அவர் செல்வம், மனைவி, வீடு முதலிய யாவற்று லும் அடையும் பயன்களை ஒழுங்காக அநுபவிக்கா மல் இடையூறடைந்து கும்பிபாகமுதலிய நரகத்தில் மூழ்கி அழுந்துவார். அல்லது கேட்கும்போது சிரசில் வேஷ்டி கட்டிக்கொண்டு இருப்போர் யாவரும் பாம்பும், கழுதையுமாகப் பிறப்பர். அல்லது தாம்பூலந் தரித்துக் கதைகேட்குநர் புழுவினையுண்போராவர். பின்னும் ஓதுவாரை வணங்காமல் கதைகேட்கும் மூடர்கள்காகமாகப்பிறப்பர். புராணத்தைச் சொல்லும் பெரியவர் உட்கார்ந்திருந்த ஆசனத்தில் உட்காருபவர் கழுகாகப் பிறப்பர். அவருக்குச் சமமாக இருப்பவர் கோழியாய்ச் செனிப்பர். இப்பூந்தராய் சரிதம் பொ லிய விரும்பியவரையும், சொன்னவரையும், படித்தவ ரையும், தீமைசொல்லி நிந்திப்போர் நாயாகவும், ஒந்தி யாகவும் பிறப்பர். முறையாக இக்கழுமலக்கதையை விரித்துச் சொல்லுநரை உபசாரங் கூறுதவர் தவளையா யும் பத்து ஜனனம் கழுதையாயும் தோன்றுவர். இத் தோணிபுரக் கதையைச் சுகமாகச் சொல்லுகின்ற சபையினிடத்தில் வந்து யாராவது இடர் செய்வாரே யானுல் அரவின் ஜனனம் அன்றே அடைவர்.

நம்புகலிப் பெருமான் புண்ணிய சரிதத்தைத் தீட்டிய புத்தகத்துக்கும், அதைப் படிப்பவர்க்கும், ஆசனமாகப் பலகையையும், கம்பளங்களையும் வேணவா வோடு கொடுத்தவர் எழுமனுக்களின் ஆயுள் எல்லவரை யும் சுவர்க்கபோகங்களை அநுபவித்து, அதற்கு அப் பால் உவமையற்ற முத்தியை யடைவார். இது உண்மை உண்மை.

நம்மை ஆண்டருளும் பிரமேசனும், திருநிலை யழு கியும் முனிக்குழாங்கள் உடனிருந்து போற்ற, தங் காழி மான்மிய வரலாறு எல்லாம் தெற்றெனவுணர்ந்து ஓதினவர்மாட்டு எப்பொழுதும் நீங்காமல் வாழ்ந்து கொண்டிருப்பார்கள். இப் பிரமபுரமான்மியத்தைப் படித்தால் பதினெண் புராணங்களையும் படித்த பலன் ஒருங்குவந்து சேரும். இப் புராணத்தின் ஒரு கவி யேனும், பாதிகவியேனும், ஓரடியேனும், சொன்ன வரும், வினவினவரும் மறலிக்கெதிரிற் செல்லார்கள். பொய்யே யுண்டாக்குபவரும், பொய்யே பேசுவோரும், பிறருக்குத் துன்புறுத்துவோரேனும் இவ்வேணுபுரக் கதையை ஒருகாற் கேட்டால் இவ்வினைகளே யன்றி எவ்வினைகளும் நீங்கி ஞானக்கடலில் நன்றாய்ப்படிவார். இக்காழிமூதூர நகரத்தின் தோணிமலையை நீலகண்ட வெற்பு என்று யாவருங்கூறுவார். இவ்வெற்பினை வணங்கியவரும், வணங்கி வருபவரை எதிர் தொழப் பெற்றாரும் கற்பனை கடந்த சிற்பரனவன்றன் பொற்ப மர் தாணிழ லற்புற வமர்வார்.

இவ்வகையாக, வேதங்களைச் செவ்வைப்படுத்திப் பிரித்தருளிய வேதவியாசரின் திருவருள்பெற்ற சூத

மா முனிவர் சீகாழி மான்மியத்தைச் சவுனகாதி முனிவர்கட்குக் கூறியருளினா ரென்க.

அண்டர்கள்பூசித்த வத்தியாயம்

முற்றிற்று.

---

## வாழ்த்து.

சார்வாழ்கவானவரானினம்வாழ்கவருசெங்கோற்காவல்வேந்தன்
பார்வாழ்க மறைவாழ்கவெண்ணீறுமைந்தெழுத்தும்பரவிவாழ்க
ஏர்வாழ்க வேணுபுரிவாழ்க சிவனடியார்களென்றும் வாழ்க
சீர்வாழ்க விந்நூலை வாழ்த்துநருங் கேட்குநருஞ் சிறந்துமிக்கே.

சீகாழித்தல புராண வசனம்

முற்றிற்று.

# இந்நூல் செய்த காலம்.

---

## நேரிசை வெண்பா.

சாதா ரணவருடஞ் சார்பங் குனிமதியிற்
றேதிபதி னென்கிற் சிரபுரத்தின் — ஆதிசவைத
தீட்டத் தொடங்கிவருஞ் சிராண் டிடபமதி
ஈட்டிருபா னொன்றினிரப் பிற்று.

திருச்சிற்றம்பலம்.

# அரும்பதப் பொருளகராதி.

அ

அகழ்தல்-வெட்டுதல்.
அகோராத்திரம் - இரவும்பகலும்.
அச்சுதன்-விட்டுணு.
அடவி-காடு.
அடைகுநர்-சேர்பவர்.
அணிகலம்-ஆபரணம்.
அணித்தல்-சமீபித்தல்.
அணைதல்-சேர்தல்.
அண்டர்-தேவர்.
அதீதம்-அளவுகடந்தது.
அநாதரக்ஷகன்-ஏழையை ரக்ஷிக்கிறவன்.
அநுதினம்-எப்பொழுதும்.
அந்தகாரம்-இருள்.
அந்தரம்-ஆகாயம்.
அந்தர்த்தானம்-மறைதல்.
அந்தர்யாகம்-மானதபூசை.
அபயம்-பயமில்லாமையைக் காட்டுவது.
அபிதானம்-பெயர்.
அப்பு-ஜலம்.
அமர்தல்-தங்கல்.
அமலம்-பரிசுத்தம்.
அயன்-பிரமன்.
அரண்-காவல்.
அரதனம்-இரத்தினம்.
அரவு-பாம்பு.
அருள்வேலை-கிருபாசமுத்திரம்.
அர்த்தம்-பாதி.
அலமரல்-வருந்தல், சுழலல்.
அலரோன்-பிரமன்.
அல்லல்-துன்பம்.
அவனி-பூமி.
அவிச்சை-அஞ்ஞானம்.
அவை-சபை.
அழலல்-கோபித்தல், எரிதல்.
அறைதல்-அடித்தல்.
அனையது-அப்படிப்பட்டது.
அன்னுழி-அதன்பின்.

ஆ

ஆகரம்-இருப்பிடம்.
ஆகாரம்-சரீரம்.
ஆடல்-ஸ்நானஞ்செய்தல்.
ஆணை-கட்டளை.
ஆண்டு-வருஷம், அவ்விடம்.
ஆதேயம்-இருப்பிடம்.
ஆரோகணம்-ஏறுதல்.
ஆர்தல்-நிறைதல், உண்ணல்.
ஆலவாய்-மதுரை.
ஆழியான்-விஷ்ணு.
ஆறு-வழி.

ஆற்றல்-வலிமை,சக்தி.
ஆற்றுதல்-செய்தல்.

இ

இடர்-துன்பம்.
இடையூறு-துன்பம்.
இட்டிகை-கல்.
இணை-இரண்டு.
இணைதல்-சேர்தல்.
இந்து-சந்திரன்.
இயக்கம்-அசைதல்.
இயலுதல்-முடிதல்.
இரவி-சூரியன்.
இலங்குதல்-விளங்குதல்.
இல்லம்-வீடு.
இவண்-இவ்விடம்.
இவர்தல்-ஏறுதல்.
இழுக்கு-குற்றம்.
இழுதகை-தாழ்ந்ததன்மை.
இழுது-நெய்.
இழைத்தல்-செய்தல்.
இறுதல்-ஒடிதல்.
இறும்பூது-ஆச்சரியம்.
இறைமை-தலைமை.
இனைதல்-வருந்தல்.

ஈ

ஈட்டம்-கூட்டம்.
ஈட்டல்-சம்பாதித்தல்.

உ

உகுத்தல்-சொரிதல்.
உட்கொள்ளல்-நினைத்தல்.
உசிதம்-செய்யத்தக்கது, உத்தமம்.
உணா-உணவு.
உந்தல்-மேலெழும்பல்.
உம்பர்-தேவர்.
உமங்கல்-வாடல்.
உய்தல்-பிழைத்தல்.
உய்த்தல்-செலுத்தல்.
உரகம்-பாம்பு.
உரவோன்-அறிவுடையவன்.
உல்லாசம்-வேடிக்கை.
உவணம்-கருடன்.
உவத்தல்-மகிழ்தல்.
உவா-பௌர்ணிமை, அல்லது அமாவாசை.
உழுவலன்பு-எழுபிறப்புந்தொடரும் அன்பு.
உழை-மான்,இடம்.
உறழ்தல்-ஒத்தல்.
உறுதல்-அடைதல்.
உள்ளிடல்-அடக்கல்.
உறுதி-நிச்சயம்.
உறுவர்-முனிவர்.
உன்னதம்-மேன்மை.
உன்னல்-நினைத்தல்.

ஊ

ஊர்தி-வாகனம்.
ஊர்த்ததாண்டவம்- மேனோக்கிய கூத்து.

எ

எஞ்ஞான்று-எக்காலம்.
எல்லை-சூரியன்.
எழில்-அழகு.
எள்ளல்-இகழ்தல்.
எற்றல்-தாக்கல்,அடித்தல்.

ஏ

ஏரகம்-சுவாமிமலை.
ஏல-மிக.

ஒ

ஒருப்படல்-சம்மதித்தல்.
ஒலிக்கிறை-காற்று.
ஒளிர்தல்-பிரகாசித்தல்.

ஓ

ஓச்சல்-செலுத்தல்.
ஓவுதல்-நீங்குதல்.
ஓம்-உடன்பாடு.

க

கங்குல்-இராத்திரி.
கச்சு-கயிறு.
கஞ்சம்-வெண்கலம்.
கஞ்சுகம்-சட்டை.
கடகம்-தோளிலணியு மாபரணம்.
கடிதல்-விலக்கல்.
கடுத்தல்-ஒத்தல்.
கணம்-கூட்டம்.
கணித்தல்-எண்ணல்.
கணிப்பு-அளவு.
கண்ணி-ஒர்விதமாலை.
கதலி-வாழை.
கதிரோன்-சூரியன்.
கதுவல்-பற்றல்.
கமண்டலம்-கெண்டி.
கமர்-வெடிப்பு.
கமலம்-தாமரை.
கயமை-கீழாந்தன்மை.
கரகம்-கெண்டி.
கரதலாமலகம்-உள்ளங்கை நெல்லிக்கனி.

கருணைகாரர் - கிருபைக் கிருப்பிடமானவன்.
கருவி-ஆயுதம், காரணம்.

கவற்சி-துக்கம்.
கவிகை-குடை.
கழறுதல்-பேசுதல்.
களிதூங்கல்- சந்தோஷமிகுதி.
களைகண்-ஆதாரம்.
களைதல்-பிடுங்கல்.
கனலல்-கோபித்தல்.

கா

காங்கேயன்-முருகக்கடவுள்.
காண்டல்-செய்தல்.
காதலன்-நாயகன்.
காமலோலன்-பெண்களுடன் விளையாடுபவன்.
காறும்-வரையும்.

கி

கிலம்-பழுது.

கு

குடதிசை-மேற்றிக்கு.
குடக்கூத்து-கோணநடனம்.
குடாரி-கோடாலி.
குடிலை-சுத்தமாயை.
குணபூதரம்-குணமாகியமலை.
குதூகலம்-அதிக சந்தோஷம்.
கும்போற்பன்னர் - அகத்திய முனிவர்.
குரவன்-ஆசாரியன்.
குலவுதல்-விளங்குதல்.
குவடு-சிகரம்.
குவலயம்-பூமி.
குழு-கூட்டம்.

குறியீடு-பெயர்
குறும்பு-காடு.
குன்றல்-கெடுதல்,குறைதல்.

கூ

கூடல்-மதுரை.
கூர்மம்-ஆமை.
கூவல்-கிணறு.
கூளி-பேய்.
கூறு-பங்கு.
கூறுபாடு-பிரிவு.

கெ

கெழுதகைமை-சிறப்பு.

கை

கைதவம்-வஞ்சகம்.
கையன்-கீழ்மகன்.

கொ

கொணர்தல்-கொண்டுவருதல்.
கொண்கன்-நாயகன்.
கொண்டல்-மேகம்.

கோ

கோ-பசு.
கோகனதம்-தாமரை
கோடு-கிளை.
கோடுதல்-தவறுதல்.
கோடைவானவன்-காற்று.
கோலம்-பன்றி.
கோலல்-வளைத்தல்.
கோளரி-சிங்கம்.

ச

சசி-சந்திரன்,இந்திராணி.
சத்தினிபாதம்-சத்திபதிதல்.
சமர்-யுத்தம்.
சரதம்-நிச்சயம்.

சா

சாகரம்-கடல்.
சாதகர்மம்-பிறந்தவுடன் செய்யுங்காரியம்.
சாமீப்பியம்-சமீபத்திலிருத்தல்
சாளரம்-சன்னல்.
சாற்றுதல்-சொல்லல்.
சானகி-இலக்குமி.

சி

சிந்து-குறள்ரூபம்.
சிவணல்-கலத்தல்.
சிறார்-சிறுபிள்ளைகள்.
சிற்றுரு-சிறியவடிவம்.
சின்னம்-அடையாளம்.

சு

சுகம்-கிளி.
சுடர்-கிரணம்.
சுதை-அமிர்தம்.
சுத்தோதகம்-நல்லஜலம்.
சுரர்-தேவர்.
சுலாவுதல்-சூழ்தல்.
சுவேதவராகம் - வெள்ளைப்பன்றி.

சூ

சூறை-சுழல்காற்று.

செ

செவ்வன்-ஒழுங்கு.

சே

சேண்மைத்து-தூரத்துள்ளது
சேந்தன்-முருகக்கடவுள்.
சேமித்தல்-பத்திரப்படுத்தல்.
சேய்-பிள்ளை.

சோ

சோணமேகம்-விடாமழைபொழியுமேகம்.

ஞா

ஞாளி-நாய்.

த

தகை-தன்மை.
தண்டலை-சோலை.
ததி-தயிர்.
தபோதனர்-ரிஷிகள்.
தயங்குதல்-வருந்துதல்.
தரணி-பூமி,சூரியன்.
தரம்-தகுதி.
தருணம்-சமயம்.
தலைக்கூறு-சிரசுபாகம்.
தவன்-தவம்செய்வோன், நாயகன்.
தவிர்தல்-நீங்குதல்.
தளை-விலங்கு,பாசம்.
தனயன்-புத்திரன்.
தனிதம்-ஒலி.

தா

தாணு-கடவுள், பற்றுக்கோடு.
தாது-வீரியம்.
தாபம்-சோகம்,
தாரகம்-பிரணவம்.
தாவுதல்-பாய்தல்,நீங்குதல்.
தாறு-கொத்து.
தானவன்-அசுரன்.
தானை-சேனை,வஸ்திரம்.

தி

திங்கள்-சந்திரன்,மாதம்.
திரிபு-வேறுபாடு,அலைதல்.
திருக்கு-வேறுபாடு.
திருமுகம்-ஓலை.
திவலை-துளி.
திறம்பல்-குளறிப்பேசுதல்.

தீ

தீட்டுவித்தல்-எழுதுவித்தல்.
தீரம்-கரை.

து

துணித்தல்-வெட்டல்.
துணையிலி-சமானமில்லாதவன்.
துன்னுதல்-நெருங்கல்.

தூ

தூய்மை-பரிசுத்தம்.

தெ

தெவ்வுன்-பகைவன்.
தெறுதல்-கொல்லுதல்.
தெற்றென-தெளிவாக.

தே

தேக்கல்-தங்குதல்,நிறைதல்.

தை

தைத்தியர்-அசுரர்.

தொ

தொகுதி-கூட்டம்.
தொல்லை-பழமை, சங்கடம்.

தோ

தோளாமணி-துளைபடாத சுத்த சுயம்புமணி.
தோன்றல்-பெருமையிற் சிறந்தோன்.

ந

நக்கல்-சிரித்தல்.
நக்கன்-நிர்வாணி,ஈசன்.
நசித்தல்-அழிதல்.
நத்துதல்-அநுசரித்தல்.
நலிதல்-மெலிதல், வருந்துதல்.

நல்லுரி-நல்லதோல்.
நவம்-புதிது.
நள்ளிருள்-நடுஇருள்.

நா

நாகேசன்-பாம்பு.
நாடல்-தேடுதல்.
நாப்பண்-நடு.
நாரி-பெண், வில்லின் நாண்.
நாவாய்-ஓடம்.
நாற்றுதல-தொங்கவிடுதல்.

நி

நிகர்-ஒப்பு.
நிசாசரன்-அசுரன்.
நிதி-செல்வம்.
நிரயம்-நரசம்.
நிர்மலம்-பரிசுத்தம்.
நிலவுதல்-விளங்குதல்.
நிறைகோல்-தராசின்கோல்.

நீ

நீட்சி-நீளம்.
நீத்தம்-வெள்ளம்.
நீத்தல்-நீங்குதல்.
நீர்நிலை-தடாகம்.
நீலி-காளி.

நு

நுகர்தல்-உண்ணுதல்.
நுதல்-நெற்றி.

நெ

நெடுந்தகை - பெருந்தன்மை யையுடையவன்.

நே

நேர்தல் - ஒருப்படல், சம்மதித் தல்.

ப

பகர்தல்-சொல்லல்.
பகுதி-பிரிவு.
பக்கல்-பக்கம்.
படாம்-வஸ்திரம்.
படிதல்-ஸ்நானஞ்செய்தல்.
படிவம்-உருவம்.
படிறு-பொய்.
பண்டை-பழமை.
பந்தித்தல-கட்டல்.
பயில்வு-பழக்கம்.
பயிற்றல்-பழகச்செய்தல்.
பரசல-துதித்தல்.
பரவுதல-துதித்தல்.
பரவெளி-ஞானாகாசம்.
பரி-குதிரை.
பரிகாரம்-பிராயச்சித்தம்.
பரிசு தன்மை.
பரிதல்-சுமத்தல்.
பரிபாகம்-பக்குவம்.
பல்லியம-பலவாத்தியம்.
பவம்-பாவம், பிறவி.
பளிங்கு-ஸ்படிகம், சுக்கிரன்.
பற்றுதல்-விரும்புதல். அநுசரித்தல்.
பன்னகவைரி-கருடன்.
பன்னகம்-பாம்பு.

பா

பாங்கர்-பக்கம்.
பாங்கு-அழகு.
பால்-பிரிவு, ஊழ், இடம்.
பாரதி-சரசுவதி.
பார்-பூமி.

பார்த்திபர்-அரசர்.
பாறல்-நீங்குதல்.

பி

பிசறல்-கலத்தல்.
பிணித்தல்-வருத்துதல்.
பிரதிட்டை-ஸ்தாபித்தல்.
பிரதிபலித்தல்- பதிலொலியெழல்.
பிருகு-சுக்கிரன்.
பிலம்-பாதாளம்.
பிழம்பு-உருட்சியடிவம்.
பிழைத்தல்-தவறுசெய்தல்.
பிறழ்தல்-மாறுபடுதல்.

பீ

பீடித்தல்- துன்பப்படுதல்.
பீழை-சங்கடம்.

பு

புகார்-காவிரிப்பூம் பட்டினம்.
புங்கவம்-பாணம்.
புங்கவன்-தேவன்.
புடவி பூமி.
புடை-பக்கம்.
புடைத்தல் - பருத்தல், அடித்தல்.
புண்டரீகன்-பிர்மா.
புத்தி-போகம்.
புயாசலம்-தோள்மலை.
புரிதல்-செய்தல்.
புருஷார்த்தம்-அறம், பொருள், இன்பம் வீடு.
புனம்-பூமி.
புனிதம்-பரிசுத்தம.
புனைதல்-அலங்கரித்தல்.

பெ

பெட்பு-ஆசை.

பே

பேணல்-காப்பாற்றல்.

பொ

பொருட்டுவம்-பொருள்தன்மை.
பொருமல்-தேம்பியழல்.
பொருவுதல்-ஒத்தல்.
பொலிதல்-நிறைதல்.
பொறுத்தல்-சுமத்தல்.
பொறை-பூமி, தாங்குதல்:
பொற்கிழி-பொனமுடிச்சு.
பொற்பு-பொலிவு.
பொன்னி-காவிரி.

போ

போதல்-வருதல், செல்லல்.
போனகம்-உணவு.

ம

மகதியாழ்-நாரதர் வீணை.
மகவு-புத்திரன்.
மடங்கல்-சிங்கம்.
மடுத்தல்-உண்ணல்.
மட்டுகள்-மண்புழுதி.
மதி-சந்திரன், அறிவு.
மமதை-அகங்காரம்.
மருத்து-வாயு.
மலரோன்-பிர்மா.
மலைதல்-யுத்தஞ்செய்தல்.
மலைமாது-உமாதேவி.
மறம்-பாவம்.
மறு-குற்றம்.
மறுகுதல்-வருந்துதல்.
மறை-வேதம்.

மனு-மந்திரம்.
மன்பதை-மக்கட்கூட்டம்.

மா

மாகம்-மகநக்ஷத்திரம். (மாசி மாதம்)
மாசு-குற்றம்.
மாசுணம்-நாய்.
மாட்சி-பெருமை.
மாண்டகல்-பெருமைப்படுதல்.
மாதவன்-விஷ்ணு.
மாய்தல்-சாதல்.
மாழ்கல்-வருந்தல்.
மாற்றவன்-சக்களத்தி.

மி

மிடறு-கண்டம்.

மீ

மீசாமன் - கப்பல் செலுத்துபவன்.

மு

முகடு-உச்சி.
முகமலர்ச்சி-சந்தோஷம்.
முகமன்-உபசாரம்.
முனை-புலால்.
முத்தாள்-மூன்று தாள்.
மும்மலம் - ஆணவம், கன்மம், மாயை.
முயங்குல்-கூடுதல்.
முழங்கல்-சப்தித்தல்.
முற்றுறல்-முடிவு பெறுதல்.
முனிவு-கோபம்.

மூ

மூதண்டம் - பழைய பெரிய அண்டம்.

மோ

மோடி-காளி.

யா

யாதவர்-இடையர்.

வ

வச்சிரம்-சோணல், இடமா
வதனம்-முகம்.
வதிதல்-தங்கல்.
வயின்-இடம், வயிறு.
வயங்கல்-விளங்கல்.
வருஷித்தல்-பொழிதல்.
வரைப்பு-இடம்.
வலாரி-இந்திரன்.
வல்லியம்-புலி.
வழி-பின்.
வறத்தல்-சுருங்கல்.
வன்பு-வலிமை, வலாற்காரம்.
வன்போர்-வலிய யுத்தம்.

வா

வாகுவலயம்-தோளிலணியும் ஆபரணம்.
வாசவன-இந்திரன்.
வாவி-தடாகம்.
வானநாதன்-இந்திரன்.

வி

விச்சாகரன் - வித்தைக் கிருப்பிடமானவன்.
விண்டல்-நீங்கல்.
விண்மலர்மீன்-நக்ஷத்திரம்.
விதி-பிரமா.
விதிர்தல்-நடுங்கல்
விபத்து-ஆபத்து.
விபினம்-காடு.

பார் ப்பிரர்-பிராமணர்.
பார மலை-உமாதேவி.
ரூபம்-உருவம்.
விசயப்பு-ஆச்சரியம்.
வியோமம்-ஆகாசம்.
விரவு-கலத்தல்.
விராட்புருட ரூபம் - விசுவ ரூபம்.
விரை-வஞ்சனை.
விழுப்பம்-மேன்மை.
விழைதரல்-விரும்பல்.
விழைதல்-விரும்பல்.
விளிதல்-சாதல்.
விளித்தல்-கூப்பிடல்.
விற்பனம்-சாமர்த்தியம்.
வினயம்-தந்திரம்.

## வெ

வெதிரிகாச்சிரமம் - இலந்தைக் காடு சூழ்ந்த இடம்.
வெருவுதல்-பயப்படுதல்.
வெள்கல்-வெட்கப்படல்.
வெறியாட்டு-கட்குடி களிப்பி ன்ல் விளையாடல்.

## வே

வேட்கை-விருப்பம்.
வேணவா-ஆசைமிகுதி.
வேணு-மூங்கில்.
வேது-வெப்பம்.
வேள்வி-யாகம்.





# பரிசோதனு பத்திரம்.



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| கஎ | சரு | ரானது | ரானது. |
| ,, | கங | நகரிலேயே | நகரே |
| ருகூ | ரு | ஒகு | ஒரு |
| சாகூ | உ | யப்ப | யப்பரின் |
| எஅ | ,, | புகலிவத்தி | புகலியத்தி |
| கசாசா | கஅ | கரையுல் | கரையில் |
| கசுக | சா | தித்தலே | திருத்தலே |